# திருமுறைத் தெளிவே
# சிவஞான போதம்

திருச்சிற்றம்பலம்

தோடுடைய செவி யன்விடையேறியோர் தூவெண்மதிசூடிக்
காடுடைய சுட லைப்பொடிபூசியென் னுள்ளங்கவர் கள்வன்
ஏடுடைய மல ரான்முனைநாட்பணிந் தேத்தவருள் செய்த
பீடுடைய பிர மாபுரமேவிய பெம்மானிவனன்றே

அவனவ ளதுவெனு மவைமூ வினைமையின்
தோற்றிய திதியே யொடுங்கிமலத் துளதாம்
அந்த மாதி யென்மனார் புலவர்.



வை. இரத்தினசபாபதி



டாக்டர் S. இராதாகிருஷ்ணன்
மெய்யுணர்வு மேல்நிலைக் கல்
சென்னைப்

சென்னைப் பல்கலைக் கழகத் தத்துவத்துறை வெளியீடு—25

பொதுப்பதிப்பாசிரியர் :
டாக்டர் இரா. பாலசுப்பிரமணியன்

---

# திருமுறைத் தெளிவே சிவஞானபோதம்

# திருமுறைத் தெளிவே
# சிவஞானபோதம்

டாக்டர் வை. இரத்தினசபாபதி
வித்துவான்; பி. ஓ. எல்., எம். ஏ., பிஎச். டி.,
துணைப் பேராசிரியர்
டாக்டர் S. இராதாகிருஷ்ணன் மெய்யுணர்வு
மேல்நிலைக் கல்வி நிறுவனம்
சென்னைப் பல்கலைக் கழகம்

டாக்டர் S. இராதாகிருஷ்ணன்
மெய்யுணர்வு மேல்நிலைக் கல்வி நிறுவனம்
சென்னைப் பல்கலைக் கழகம்
1979

# பதிப்புரை

சென்னைப் பல்கலைக் கழகத்தின் மெய்யுணர்வு ஆராய்ச்சித்துறை 1927 செப்டம்பர் மாதத்தில் நிறுவப் பெற்றது. 1964 ஆகஸ்டு மாதத்தில் இத் துறையைப் பல்கலைக் கழக மானியக் குழு மேல் நிலைக் கல்வி மையமாக ஆக்கியது. 1976 முதல் இதன் பெயர் டாக்டர் S. இராதாகிருஷ்ணன் மெய்யுணர்வு மேல்நிலைக் கல்வி நிறுவனம் என்பதாயிற்று. 1977 செப்டம்பரில் இத்துறையானது தன்னுடைய பொன் விழாவைக் கொண்டாடியது.

இந்நிறுவனம் தொடங்கப்பெற்ற நாள் முதல் மூன்று கொள்கைகளை அடிப்படையாகக் கொண்டு செயலாற்றி வருகிறது. தமிழகம் தழுவிய, இந்திய நாடு தழுவிய, உலகந் தழுவிய தத்துவக் கொள்கைகளைத் தனித்தும் இணைத்தும் ஆய்வதுடன், மக்கள் வாழ்வுச் சிக்கல்களுக்குரிய விளக்கமும், அவைகளுக்குரிய செயற்பாட்டு வடிவமும் கொடுத்து, அவர்களின் நல்வாழ்விற்கு ஆக்கபூர்வமான அமைப்பையும் உருவாக்கித் தருதல் வேண்டும் என்பதே. இவ்வகையில், தமிழகத்தில் சைவசமயம் சார்ந்த அருளாளர்களால் பாடப்பெற்ற பன்னிரு திருமுறைகளையும் சிவஞானபோதம் என்ற சாத்திர நூலையும் இணைத்துச் சிந்தித்த சிந்தனையின் வடிவமாகத் திருமுறைத் தெளிவே சிவஞான போதம் என்ற இந்நூல் வெளிவருகிறது. இதனை எழுதியவர் இந்நிறுவனத்தின் துணைப் பேராசிரியர் டாக்டர் வை. இரத்தின சபாபதி ஆவர். இவருடைய "வீரசைவம்" என்ற நூல் இந்நிறுவனத்தின் பொன் விழா வெளியீடாக 1977ல் வெளிவந்துள்ளது.

மெய்யுணர்வுத்துறை தொடங்கப் பெற்றபோது அதனை விரிவாகவும் உயர்வாகவும் அமைத்த பேராசிரியர் காலஞ்சென்ற S. S. சூரிய நாராயண சாஸ்திரி அவர்களுக்கும், திட்டமிட்ட கொள்கைகளைச் செயற்படுத்தி நின்ற பெருந்தகைகளாகிய, இந்நிறுவனத்தின் முன்னாள் இயக்குநர்கள் டாக்டர் T. M. P. மகாதேவன் அவர்களுக்கும், டாக்டர் வ. ஆ. தேவசேனபதி அவர்களுக்கும் நிறுவனம் பெரிதும் கடமைப் பட்டுள்ளது.

இந்நிறுவனத்தின் ஆக்கவழிச் செயல்களை அவ்வப்போது உடனிருந்து அமைதியுடன் கேட்டும், அரவணைத்தும், ஆக்க வழிக் கருத்துக்களை வழங்கியும் நெறிப்படுத்தி வருகிற சென்னைப் பல்கலைக் கழகத் துணைவேந்தர் மூதறிஞர், பேராசிரியர் G. R. தாமோதரன் அவர்களுக்கும், பதிவாளர் அவர்களுக்கும், பல்கலைக்கழக ஆட்சிக் குழு/அலுவலக உறுப்பினர்களுக்கும் நன்றி தெரிவித்துக் கொள்கிறேன்.

இந்நிறுவனத்தை மேல்நிலைக் கல்வி நிறுவனமாக உயர்த்திப் பத்து ஆண்டுகள் வரை பொருள் உதவி செய்து வந்ததோடமையாது, பின்னரும் இந்நிறுவனத்தின் முன்னேற்றத்தில் பரிவு காட்டி அரவணைத்து வரும் பல்கலைக் கழக மானியக் குழுவிற்கு நன்றி தெரிவித்துக் கொள்ளுகின்றேன்.

இந்நூலை அழகுற அச்சிட்டுத் தந்த சென்னை, அவ்வை அச்சுக்கூடத்தாருக்கு என் நன்றி.

இரா. பாலசுப்பிரமணியன்
இயக்குநர்
பொதுப்பதிப்பாசிரியர்.

சென்னை-5
19—3—'79

# முன்னுரை

சிவபரம்பொருளைத் துய்த்து வாழ்ந்த அருளாளர்களின் திருவாக்குக்களாக இன்று நமக்குக் கிடைப்பவை பன்னிரு திருமுறைகள். தொகையாற் பன்னிரண்டெனவும், பாடிய அருளாளர்களின் எண்ணிக்கையால் இருபத்தேழெனவும், நூல்களின் எண்ணிக்கையால் நாற்பதெனவும் பாக்களின் எண்ணிக்கையால் சற்றேறப்பப் பதினெண்ணாயிரம் எனவும் பரந்து கிடந்த திருமுறைகளை அடிப்படையாகக் கொண்டு தமிழகத்தில் சிவநெறிக் கொள்கை நூல்கள் வெளிப்படுவனவாயின. இவ்வகையில் சைவசித்தாந்தக் கொள்கையின் மூலநூல் எனப் பெறும் சிவஞான போதம் பன்னிரு திருமுறைகளின் பிழிவாக வெளிப்பட்டது என்ற இணைப்புக் கருத்தினுல் உருவாகிய நூலே இது.

வேதாந்தத் தெளிவாம் சைவசித்தாந்தம் என்றும் வடமொழிச் சிவஞான போதத்தின் மொழிபெயர்ப்பே மெய்கண்டாரின் சிவஞான போதம் என்றும் வழங்கும் கருத்துக்களைப் போலவே பன்னிரு திருமுறைகளை மூலமாகக் கொண்டு, சிவஞானபோதத்தையும் சைவ சித்தாந்தத்தையும் காணவேண்டும் என்ற கருத்தை அடிப்படையாகக் கொண்டு, அதற்குரிய ஒரு தோற்றுவாயாக அமைந்ததே இந்நூல்.

திருமுறைகளையும் தமிழகத்துச் சைவசித்தாந்த சாத்திர நூல்களையும் பல கோணங்களில் எண்ணியும் எழுதியும் சைவசித்தாந்தத் தத்துவ உண்மை விளக்க நூல்கள் பல்கி வெளிவரல் வேண்டும் என்ற கருத்தில் எழுந்த முதல் நூல் இது. இவ்வரிசையில் பல நூல்கள் வெளிவரும். இந்நூல் இணைப்புச் சிந்தனை ஆய்வு நூலாதலின் மூலமாகக் கொண்டுள்ள நூல்கள், பாட்டெண் முதலியன அவ்வவ்விடங்களிலேயே கொடுக்கப்பெற்றுள்ளன.

சென்னைப் பல்கலைக் கழகத்து டாக்டர் S. இராதாகிருஷ்ணன் மெய்யுணர்வு மேல்நிலைக் கல்வி நிறுவனம் தமிழகம் தழுவிய, இந்திய நாடு தழுவிய, உலகந் தழுவிய தத்துவக் கொள்கைகளைத் தனித்தும் இணைத்தும் ஆராய்வதும், நூல்களை வெளியிடுவதும் என்ற மூவகைக் கொள்கை வரையறை யுடையது. தமிழகத்தின் தனிக் கொள்கைகளாக விளங்கும் சைவம், வைணவம் போன்றவைகளைத் தமிழ் மொழியின் மூல நூல்களின் அடிப்படையில் விளக்குவதும், பிற தத்துவக் கொள்கைகளோடு இணைத்து விளக்குவதும் இன்றியமையாததும் விரைந்து செய்ய வேண்டுவதும் ஆகிய பணி என்பதைத் தம் கொள்கையாகக் கொண்டு இயங்கிவரும், இந்நிறுவன இயக்குநர், முதுபேரறிஞர்,

இரா. பாலசுப்பிரமணியனுர் அவர்கள் தமிழுலகில் திளைத்துக் கிடந்த என்னைத் தத்துவ உலகில் நெறிப்படுத்தி நிலைநிறுத்திய வகையில் நிறுவனத்துக்கே யன்றி எனக்கும் நெறியாளர். என்னுடைய தத்துவ ஆசிரியராக விளங்கும் அவர்கள் இணையடிகளை வணங்குவதைத் தவிர வேறு வழி காணேன். "நப்போல் வளை" என்னும் ஔவையின் கீழ்க் கணக்குக்கு மேல்கணக்காக விளங்கும் அவர்கள் திருஞானசம்பந்தரின் அருள்வாக்கு என்றும் பொய்யாகாது என்பதற்குத் தாமே சான்ருக நின்று வாழ்பவர்கள். பொய்ப்பொருள்கள் மேற் செல்லும் அவா அடங்கி, ஐயுணர்வைப் பெற்று, பின் மெய்யுணர்வைத் தேர்ந்து தெளிந்தார் வழிபடுந் தென்குடித்திட்டை என்று பொருள்படும்,

"ஆறினர் பொய்யகத்து ஐயுணர் வெய்திமெய்
தேறினர் வழிபடுந் தென்குடித் திட்டையே"

என்ற திருத்தென்குடித் திட்டைத் திருப்பதிகம் உண்மையாம் முறையில் திட்டையில் பிறந்து, தத்துவத்துறை சார்ந்து, மெய்ப்பொருள் தேர்ந்து தெளிந்த மூதறிஞராவார். திருமுறையின் வழியில் சிந்திக்கும் யான் அவர்களை இவ்வாறு சிந்தித்து அவரடிகளை வணங்கி மகிழ்கிறேன். யாங்கள் இருவரும் இப்பணியில் ஈடுபட முன்னின்றவர்கள், முருகன் புகழ்பாடும் முற்றவக் குடும்பியல் மரபும், தமிழ் நெஞ்சும், தத்துவ மரபு தழைந்த வாழ்வும் கருவிலே பெற்ற திருவுடையராய், திருமுறை நலஞ்சான்ற பேராசிரியப் பெருந்தகை மூதறிஞர் வ. ஆ. **தேவசேனுபதி** அவர்களை வணங்குதல் ஒன்றே வாய்வாவது.

'எங்கும் தமிழ், எதிலும் தமிழ், என்றும் தமிழ்' என்ற கொள்கையை உயிர்மூச்சாகக் கொண்டு, பல்லாற்ருனும் உழைத்தும் இயக்கியும் வரும் முதுபேரறிஞர், சென்னைப் பல்கலைக் கழகத் துணைவேந்தர், G. R. தாமோதரனுர் அவர்களுக்கு என் வணக்கமும் நன்றியும் உரியன. சென்னைப் பல்கலைக் கழகத்து அலுவலகங்களையே யன்றி என்னையும் உடனிருந்து அவ்வப்போது உற்சாக மூட்டி, அரவணைத்து இயக்கிவரும், பதிவாளர் பெருந்தகை திரு. குமாரசாமி அவர்களைப் பன்முறையும் வணங்கி நன்றி கூறும் கடப்பாடுடையேன்.

கொள்கையைத் தொழிலாக்குவது ஒருவகை; தொழிலைக் கொள்கையாக்குவது இன்ஞெருவகை. இரண்டாம் வகையில் நின்று, பல்லாற்ருனும் நன்முறைப் பதிப்பாக வெளிவரவேண்டும் என்று அயராது உழைத்த அவ்வை அச்சுக்கூடத்தாருக்கும், அதன் உரிமையாளர் திரு. சேஷாசலம் அவர்களுக்கும் என்றென்றும் நன்றியறிதற் கடப்பாடுடையேன்.

சென்னை-5. இங்ஙன்,
19—3—'79

வை. இரத்தினசபாபதி

# உள்ளுறை

# 1. திருநெறிய தமிழ்

## முன்னுரை

சிவனெனும் ஓசையைத் தமக்கேயுரிய செம்மேனியெம்மானாகிய பரம்பொருளின் புகழ்பரவும் அருளாளர்களுடைய அமுதத்தமிழ் வாக்குக்களின் தொகுப்பே திருமுறை. திருஞானசம்பந்தர் முதலாகச் சேக்கிழார் ஈறாக அமைந்த இருபத்தேழு அருளாளர்களின் அமுத வாக்குக்களைத் திருவருட்டுணை கொண்டு பன்னிரு திருமுறைகளாக அருளாளர்கள் தொகுத்தளித்துள்ளார்கள்.

தொகையாற் பன்னிரண்டெனவும், இயற்றியருளிய அருளாளர்களின் எண்ணிக்கையால் இருபத்தேழெனவும், நூல்களின் எண்ணிக்கையால் சற்றேறக் குறையப் பதினெண்ணாயிரம் எனவும் வரையறை செய்யப் பெற்ற திருமுறைகளைத் *திருநெறிய தமிழ்* என்ற பெயரால் குறிக்க வேண்டும் என்பது திருமுறையாசிரியர்கள் வரிசையில் முதல்வராக நிற்கும் திருஞானசம்பந்தரின் உள்ளக் கிடக்கையாகும்.

"அருநெறியமறை வல்ல முனியகன் பொய்கை அலர் மேய
பெருநெறிய பிரமாபுர மேவிய பெம்மான் இவன் தன்னை
ஒருநெறிய மனம் வைத்து உணர் ஞான சம்பந்தன் உரைசெய்த
*திருநெறிய தமிழ்* வல்லவர் தொல்வினை தீர்தல் எளிதாமே"

என்பது திருஞானசம்பந்தர் ஞானவாரமுதம் உண்டவுடனே திருவாய்மலர்ந்தருளிய "தோடுடைய செவியன்" எனத் தொடங்கும் முதற்பதிகத்தின் இறுதித் தமிழ் ஆகும்.

## அம்மையும் அமுதமுண்ட பிள்ளையும்

*திருநெறிய* தமிழை முதன்முதலில் வெளிப்படுத்தியருளிய பெருமை காரைக்காலம்மையாரையே சாரும். சைவமாம் உலகப் பொதுநெறியும் திருநெறிய தமிழ் எனலாகும் உலகப் பொதுமைப் பயனும் என்றும் வதியவேண்டும் அல்லது என்றும் உலகில் நின்று நிலவவேண்டும் என்ற குறிக்கோளுக்காக வதிந்தவர்கள் மூவர். திலகவதி, புனிதவதி, பதுமவதி என்போரே அவர். சைவமாம் நன்னெறி உலகந் தழுவிய பொதுமைத் தொண்டுநெறி என்பதைத் தம் வாழ்வின் மூலம் உணர்த்தியும், திருநின்ற செம்மையே செம்மையாக் கொண்டும் வாழ்ந்த திருநாவுக்கரசுதனை வளர் திருத்தொண்டின் நெறி வாழ நிலைநிறுத்திய பெருந்தகையாய திலகவதியம்மையார்

ஒருவர். ஒருநெறிய மனம் வைத்து உணர்வதன் மூலம் அருநெறிய மறைவல்லமுனிவனை, பெருநெறிப்படுத்தி, அவனைத் துய்த்தல் எனப் பெறும் திருநெறிய தமிழினைச் சொற்கோயிலென அமைத்து வெளிப் படுத்திய புனிதவதியாரெனப் பெறும் காரைக்காலம்மையார் ஒருவர். சொற்கோயிலுக் கொத்த கற்கோயில் எழுபதினை எண்டோளீசற்கு எழில்பெற அமைத்து விளங்கச் செய்தவனாகிய பெருந்தகையை உரிய காலம் வரையில் தன் வயிற்றில் தாங்குதல் அரிதெனினும், அதற்கும் அப்பால் அவனைச் சிவம் விளங்கும் திருக்கோயில் பல எடுப்பதற்குரிய நாளும் கோளும் அமையும் நேரம் வரையில் தாங்கி யிருந்து, காலந்தாழ்த்துக் கருவுயிர்த்தமையால் உண்டாகிய இரத்தச் சிவப்பினால் சிவந்த கண்ணுடையானாக விளங்கிய அவனைப் பார்த்ததும் இவன் என் ''கோச்செங்கண்ணானோ'' எனக் கூறி, அவ்வளவிலேயே சிவனடி சேர்ந்த பதுமாவதி ஒருவர். இவ்வாறு முத்தமிழென விளங்கிய அம்மையார் மூவரில், மூன்று முறை இறைவ னாலேயே 'அம்மை' என அழைக்கப் பெற்ற பெருமையுடையவ ராகிய காரைக்காலம்மையாரே திருநெறிய தமிழை வெளிப்படுத்தி யருளுதற்காகவே இவ்வுலகிற் பிறந்து, அதற்குரிய தனிமொழிகளைப் பயின்று சிறந்தவர்கள். இதனை,

'பிறந்து மொழிபயின்ற பின்னெல்லாம் காதல்
சிறந்து நின் சேவடியே சேர்ந்தேன்''

என்று அம்மையாரே தம் அற்புதத் திருவந்தாதியிற் (1) கூறுவதைக் காணலாம். திருப்பதிகம் என்ற அமைப்பில் பதினொரு 'பாக்களை அமைத்து, அவற்றுள் இறுதிப்பாட்டினைத் திருக்கடைக்காப்பு என்ற அமைப்புடையதாகச் செய்து, அதனுள் இயற்றியவர் பெயர், இயற்றுங்காலத்துத் திருவருள் இயக்கிய முறை, படிப்பவர் பெறும் பயன் என்பவைகளை இணைத்துக் காட்டித் திருப்பதிக அமைப்பினை அருளிய முதல்வர் காரைக்காலம்மையாரே ஆவர். இக்கருத்தினை வெளிப்படுத்தும் நோக்கில்,

"கீதம் முன் பாடும் அம்மை" (பெ. 1787)

என்று சேக்கிழார் குறிப்பிடுவது ஆய்ந்து இன்புறற்பாலது.

காரைக்காலம்மையார் அருளிய திருவாலங்காட்டு மூத்ததிருப் பதிகம் இரண்டையும் போலவே திருஞானசம்பந்தருடைய திருப் பதிகங்கள் அமைந்திருப்பதைக் காணலாம். காரைக்காலம்மையார் பாடிய திருவாலங்காட்டு மூத்த திருப்பதிகம் இரண்டனுள் ''கொங்கை திரங்கி'' எனத் தொடங்கும் முதற் பதிகம் நட்டபாடைப் பண்ணில் அமைந்தது. திருஞானசம்பந்தர் ஞானவாரமுதம் உண்ட பிள்ளையா ராகிச் சிவஞானசம்பந்தம் பெற்றவுடன் முதன்முதற்பாடிய "தோடு டைய" எனத் தொடங்கும் திருப்பதிகமும் நட்டபாடைப் பண்ணிலே யே அமைந்தது. அம்மையார் அருளிய "எட்டியிலவம்" எனத் தொடங்கும் திருவாலங்காட்டு மூத்த (இரண்டாவது) திருப்பதிகம் இந்தளப் பண்ணில் அமைந்தது. திருஞானசம்பந்தரின் இரண்டாந்

திருமுறையின் முதற்பதிகமும் இந்தளப் பண்ணிலேயே அமைந்துள்ளது. இவ்வாறு காட்டப்பெறும் இணைப்புக்களைக் கருதி, ஞானசம்பந்தருக்குக் காலத்தால் முற்பட்டவரான காரைக்காலம்மையாரைப் பார்த்து, படித்து எழுதினர் என்பதாகக் கொள்ளாமல் திருவருள் முன்னின்று அத்தகைய ஒரு மரபை உண்டாக்குகிறது என்று கொள்ள வேண்டும்.

## *திருவருளும் திருநெறியதமிழும்*

திருஞானசம்பந்தர் மூன்றாண்டுக் குழந்தையாயிருந்த காலத்தே அருளிய திருநெறியதமிழ்க் கருத்துக்களும், மெய்கண்டார் ஈராண்டில் சிவஞானம் பெற்று அருளிய சிவஞானபோதக் கருத்துக்களும் திருவருளால் தோற்றுவிக்கப் பெற்றவை என்பதனை உளங்கொள வேண்டும் என்பதனோடு பிறமொழிகளிலிருந்து மொழிமாற்றம் செய்யப் பெற்றவை அல்ல என்பதனையும் உளங்கொள வேண்டும் என்பதற்காகவே வயது வரையறைகள் குறிப்பிடப் பெற்றுள்ளன போலும்.

திருவருளின் வழிநின்று, திருவருள் வகுத்துக் கொடுத்தநெறியினை உணர்ந்து, திருவருளோடு இணைந்து நின்று, அதுவகுக்கும் மரபினை உணர்ந்து உலகுக்குக் கொடுக்க வேண்டும் என்பதே திருமுறையாசிரியர்கள் முதலாக சந்தானசாரியர்கள் இறுதியாக உள்ள பெருந்தகைகள் அனைவரும் அமைத்து வரும் தமிழகத் தொன்னெறி என்பதை உமாபதிசிவம் தாம் அருளிய *சிவப்பிரகாசம்* என்னும் *சித்தாந்த சாத்திர* நூலில் தெளிவுபடுத்தியுள்ளார்.

"தெரித்தகுரு முதல்வர் உயர் சிவஞானபோதம்
செப்பினர் பின்பு அவர் புதல்வர் சிவஞானசித்தி
விரித்தனர் மற்றவர்கள் திருவடி போற்றி
விளம்பியநூல் அவையிரண்டும் விரும்பி நோக்கிக்
*கருத்திலுறை திருவருளும்* இறைவன் நூலும்
கலந்தபொது உண்மையெனக் கருதி யானும்
அருத்திமிக உரைப்பன்" (சிவப். 11)

எனத் திருவருளை முன்னிறுத்திய தோடன்றி, அதன் வழிப்பட்டு இயங்கும் தன்மையை எடுத்துக் காட்டியதுடன்,

"உயர்ஞானம் இரண்டாம் மாறு
மலமகல அகலாத மன்னு போதத்
திருவருள் ஒன்று; ஒன்று அதனைத் தெளிய வோதும்
சிவாகமம் என்று உலகறியச் செப்பும் நூலே" (சிவப் 10)

என்று கூறுவதன் மூலம் திருவருளே பரஞானம் என உடம்பொடு புணர்த்திக் காட்டியருளிய மெய்ம்மையையும் உணர்தல் வேண்டும். பரஞான மென்றும் சிவஞான மென்றும் குறிப்பிடப்பெறும் திருவடி ஞானமாம் திருவருள் அமைத்துக் கொடுத்த மரபுவழியின் மூலம் திருநெறியதமிழும் திருநெறியதமிழை மூலமாகக் கொண்ட திரு

நெறியதமிழ்ச் சிவஞானபோதமும் வெளியிடப்பட்டன என்பதை உணர்தலே நேரிய ஒன்றும்.

திருவருள் வகுத்துக் கொடுத்த மரபின் வழியே வரும் பெருமை யுடையது என்னும் பொருள் பெறும் முறையிலேயே, ஞானவார முதமுண்ட பிள்ளையாராம் திருஞான சம்பந்தர் தம்முடைய முதற் பதிகத்தின் திருக்கடைக்காப்பினுள், திருநெறியதமிழ் என்ற தொடரை அருளிச் செய்துள்ளார். திருஞான சம்பந்தர் அருளிய முதல் திருப்பதிகத்தினைச் சேக்கிழார் சுவாமிகள் "மெய்ம்மைமொழித் திருப்பதிகம்" என்று போற்றுவதன் பெருமையும் நுட்பமும் அறிந்து மகிழ்தற்குரியன.

## முப்பெரும் பெருமை

'திருநெறியதமிழ்' எனப்பெறும் பன்னிரு திருமுறைக்கு உரிய பெருமைகள் பலவாயினும் மூன்று பெருமைகளை உளங்கொளல் நன்றும்

### 1. தமிழும் தமிழ் வழக்கும்

திருமுறைகளில் அருளாளர்களால் எடுத்தாளப்பெறும் 'தமிழ்' என்ற சொல்லுக்கு அது ஒரு மொழியின் பெயர் என்ற அளவில் மட்டுமே பொருள் கொண்டுவிட முடியாது. மொழியைக் குறிக்கவும் அச்சொல் பயன்படுத்தப் பெறுகிறதுஎன்பது உண்மையே யாயி னும் மொழி என்ற அளவில் மட்டுமே அதனைக் குறுக்கி நிறுத்திவிட முடியாது என்பதும் கொள்ளக்கிடக்கிறது. எடுத்துக்காட்டாக,

"நாளும் இன்னிசையால் தமிழ்பரப்பும்
ஞானசம்பந்தனுக்கு" (7—62—8)

எனவரும் சுந்தரர் திருவாக்கினை நோக்கலாம். தமிழ் பரப்புவது ஞானசம்பந்தரின் குறிக்கோள் எனக் கொள்ள இயலாது. இனி, நம்பியாரூரரைத் தடுத்தாட்கொண்ட காலத்து, இறைவன் அவருக்கு அளித்த பணி

"மண்மேல் நம்மைச் சொற்றமிழ் பாடுக" (பெ. 216)

என்பதே சேக்கிழார் அளித்த வாக்கு. இவ்வாறே திருமூலரும்

"என்னை நன்றாக இறைவன் படைத்தனன்
தன்னை நன்றாகத் தமிழ் செய்யுமாறே" (திருமந். 81)

என்று கூறியருளினர். மேலே குறிப்பிடப் பெற்றவைகளுக்கெல்லாம் தமிழ்மொழி என்பதே பொருள் என்று கொள்வது நேரியதாகாது.

வேதத்தை வெளிப்படுத்திய இறைவனே ஆகமம் ஆகி நின்று அண்ணித்தான். அவனே அருளாளர்களைத் தோற்றுவித்து, அவர் களை உள்நின்று இயக்கி, இத்திருநெறிய தமிழை வெளிப்படுத்தி

யுள்ளான். திருக்கயிலையில் திருநீற்றுத் தொண்டும் திருமலர்த் தொண்டும் வழுவாது செய்யும் வரம்பில் தவயோகியாம் ஆலால சுந்தரப் பெருந்தகையை இந்நிலவுலகிற்கு எழுந்தருளச் செய்வதற்கு உரிய காரணங்கள் பலவற்றுள்ளும் அடிப்படைக் காரணம் ஒன்றே ஒன்றுதான். அத்தர் தந்த அருட்பாற் கடலுண்டு சித்தமார்ந்து தெவிட்டி வளர்ந்தவனாகிய உபமன்னிய முனிவன் முன்னிலையில் அங்கண் ஓரொளி ஆயிர ஞாயிறு பொங்கு பேரொளி போன்று தோன்றியது. சம்புவின் அடித் தாமரைப் போதலால் யாண்டும் யாரையும் இறைஞ்சாப் பெருந்தவ முனிவனாகிய உபமன்னிய முனிவன் அவ்வொளி வந்த திசையை நோக்கிக் கைகள் கூப்பித் தொழுது, மெய்யில் ஆனந்த வாரி விரவிட நின்றனன். அப்போது அருகிருந்த அந்தணர்களுடைய ஐயத்தை நீக்குவதற்காகத் தம்பிரானைத் தன் உள்ளம் தழீஇயவன் நம்பியாரூரன் நாம் தொழும் தன்மையன் எனக் கூறி, அவன் இந்நிலவுலகம் போதருதற்குரிய காரணம் "தீதில் திருத்தொண்டத் தொகைதரப் போதுவான்" என்று கூறியருளினன். வேதங்களை வெளிப்படுத்தி நின்றதன் மூலம் 'வேதா' எனப்பெற்ற பரம்பொருள் ஆகமமாகித் தானே நின்று, மன்னுமாமலை மகேந்திரமதனிற் சொன்ன ஆகமத்தைத் தோற்றுவித்தருளுவதன் மூலம் அண்ணிப்பானாகி நின்ற பரம்பொருள் இப்போது அருளாளர்களைத் தோற்றுவித்து அவர்கள் மூலமாகவே திருநெறிய தமிழை வெளிப்படுத்தியருளியது எனின் அத் திருவருட் காரணத்தைத் தெளிவுறப் புலப்படுத்தித் தெரிந்துகொள்ளல் வேண்டும்.

ஞானவாரமுதமுண்ட பிள்ளை முதலாகத் திருவருண் மொழித் தேவர் எனப்பெறும் சேக்கிழார் ஈறாக உள்ள அருளாசிரியர்களெல்லாம் இறைபரம்பொருளைத் துய்த்து உணர்ந்து, அவ்வனுபவத்தில் தெளிந்து நின்று, அவ்வனுபவத்தையே அத்திருவருள் இயக்கம் காரணமாகத் திருநெறிய தமிழாக வெளிப்படுத்தியருளியவர்கள் ஆதலின் அவர்கள் கூற்றில் வெளிப்பட்ட 'தமிழ்' என்ற சொல் விரிந்த பொருளுடையதாகி, நிறைபேரின்பப் பரம்பொருளை—சிவத்தைத் துய்த்துத் துய்த்து அத்துய்ப்பில் பொங்கியெழுந்து பூரித்த நிறைபேரின்பம் என்று கொள்ளலே சிறப்புடையதாம். எனவே, நாளும் இன்னிசையால் தமிழ்பரப்பும் என்ற சுந்தரர் திருவாக்கினுக்கு நாள்தோறும் தாம் துய்த்துத் துய்த்துச் சிறந்த சிவானந்தப் பெரும்பேறு எனப்பெறும் இன்பநுகர்வை—தமிழை இனிய இசைப் பாட்டுக்களின் மூலம் உலக மக்களுக்கு எடுத்துரைத்துப் பரப்பி வந்தவர் ஞானசம்பந்தப் பெருந்தகை எனக் கொள்ளவேண்டும். அவ்வாறே திருமூலர் கூற்றாகிய "என்னை நன்றாக இறைவன் படைத்தனன், தன்னை நன்றாகத் தமிழ் செய்யுமாறே" என்ற தொடருக்கும் சிவபரம் பொருளைத் துய்த்துத் துய்த்து, நிறை பேரின்பத்தில் அழுந்தி நின்று, தேக்கெறிந்து, கருங்கல் மனமும் கரைந்துக, கண்கள் தொடுமணற் கேணியிற் சுரந்து நீர் பாய, மெய்ம் மயிர் பொடிப்ப விதிர் விதிர்ப் பெய்தி அன்பராய் நின்று, அவ்வனுபவத்தைப் பிறரும் அனுபவிக்குமாறு வெளிப்படுத்தி அமைப்பதையே 'தமிழ் செய்தல்' என்று கூறினாராகக் கொள்ள வேண்டும்.

*வழிமொழி:* திருவருளால் தாம் பெற்ற சிவானுபவத்தை வெளிப் படுத்துகின்ற நிலையில், அருளாளர்கள் தம் செயலற்று, அந்தத் தாம் அற்று, நாதன் தம் செயலிலே ஒன்றியிருந்து, தம் கருவி கரணங் களைத் திருவருளோடு சேரச் செய்து, அதனோடு ஒத்தநிலையில் யோக பரராய் நின்று திருநெறிய தமிழை வெளிப்படுத்திய நிகழ்வைத் திரு ஞானசம்பந்தர் "வழிமொழி" என்ற சிறப்புச் சொல்லால் குறிப்பிட் டருளுவதைக் காணலாம்.

ஞானவாரமுதமுண்ட பிள்ளையார் தாம் அருளிய திருப்பதிகங் களுள் ஒன்று வழிமொழித் திருப்பதிகம். அப்பதிகத்தின் இறுதித் தமிழாகிய திருக்கடைக்காப்பு

"ஒழுகல் அரிது அழி கலியில் உழியுலகு
பழிபெருகு வழியை நினையா
முழுதுடலில் எழு மயிர்கள் தழுவுமுனி
குழுவினொடு கெழுவு சிவனைத்
தொழுதுலகில் இழுகுமலம் அழியும்வகை
கழுவும்உரை கழுமல நகர்ப்
பழுதில் இறை எழுதுமொழி தமிழ்விரகன்
வழிமொழிகள் மொழி தகையவே."

என்பதாம். இத் திருக்கடைக்காப்புச் செய்யுள் தக்கதிருக்கடைக் காப்பு எனப் பாராட்டப் பெற்ற பெருமையுடையது. இதனுள் ஞானவாரமுதமுண்ட பிள்ளையார் தாம்பாடிய பாக்களை "வழி மொழிகள்" என்று குறிப்பிட்டு அருளுவதோடு அவைகளைப் பற்றிய விளக்கங்களையும் கூறியருளுகின்றார்.

*(1)* "சிவனைத் தொழுது, உலகில் இழுகு மலம் அழியும் வகை கழுவும் உரை"

(2) கழுமலநகர்ப் பழுதில் இறை எழுதும் மொழி தமிழ்

என்பனவே அவ்விளக்கங்கள். இக்கலியுகத்தில் அறவொழுக்கம் மேற்கொள்ளல் அரிது எனவே அழிவுப் பாதையை நோக்கிச் சென்று கொண்டிருக்கும் இக்கலியுகத்தில், ஒருநலமும் விளைவிக்கும் ஆற்றலில்லாத இவ்வுலகத்தில் ஆன்மாக்களுக்கு உய்திநெறி கூடுவது அரிதாயிற்று. அவைகளுக்குப் பழி பெருகும் நிலையை நினைந்து நெக்குருகி, அவைகளின் மூலமலம் அழியும் வகையில் சிவனைத் தொழுது, வேண்டி வேண்டிப் பெற்ற மேன்மையால் அவ்வான்மாக்கள் உய்திபெறுமாறும் அவைகளின் மலம் நீங்கு மாறும் அருளிச்செய்யப் பெற்ற உரை. இதுவே முதற் பகுதி தரும் விளக்கம். இரண்டாம் பகுதியானது கழுமலம் எனப்பெயர் பெற்ற சீகாழிப் பதிவாழ் இறைவன் உள்நின்று அமைத்துக் கொடுத்த மொழி என்ற விளக்கத்தைத் தருகிறது.

அருளாளர்கள் உலகத்து உயிர்களின் உய்திகருதி அழுகிறார்கள்; அவைகளின் மலம் கழுவப்பெறல் வேண்டும் என்று கதறுகிறார்கள். காலமும் இவ்வுலகமும் உயிர்களுக்கு ஊக்கமும் ஆக்கமும் தருவன வாக இல்லையே என்று கசிந்து கசிந்து உருகுகின்றார்கள். அழிவதற் கேற்ற நிலையில் உயிர்களை ஆட்டிப் படைக்கின்றது இக்கலியுகம். இத்தகைய உலகத்தில் அறநெறிப்படி ஒழுகல் அரிது அரிது என்பதனோடு இந்த உலகமும் உயிர்களைப் பழிபெருகு வழியில் அழைத்துச் செல்வதாக இருக்கின்றதே என்று அல்லற்பட்டு ஆற்றாது அழுத கண்ணீருடன் இறைவனைத் தொழுகின்றார்கள். ஞானவார முதமுண்ட பிள்ளையார் இவ்வாறு அழுத அழுகையின் திறத்தை,

"பூத பரம்பரை பொலியப் புனிதவாய் மலர்ந்தழுத
சீதவள வயற்புகலித் திருஞானசம்பந்தர்" (1904)

என அருள்மொழித்தேவராம் சேக்கிழார் எடுத்து மொழிவதால் அறியலாம். இவ்வாறு உலகத்துயிர்களுக்காக அழுதும் தொழுதும் நின்ற அருளாளர்களுக்கு இறைவன் அருளிய திறம் மூவகைப்படும்.

(1) சிவானந்த இன்பத் திளைப்பு

(2) சிவானந்த அனுபவப் பொதியாம் தமிழ் வெளிப்பட அருளு வது.

(3) திருநெறிய தமிழைக் கேட்டும் பயன்தந்தும் உயிர்களை வாழ வைப்பது.

இவ்வாறு சிவபரம் பொருளானது தன்னையே அருளாளர்களின் அனுபவமாக அமைத்துக் கொடுத்து, அவ்வனுபவ அடிப்படையில் வெளிப்படும் சிவானந்தப் பேரின்பச் சொற்களையும் அவனே அமைத்துத் தருகிறான். இதனையே ஞானவாரமுதமுண்ட பிள்ளையார் "கழுமலவளநகர்ப்பழுதில் இறை எழுதும் மொழி தமிழ்" எனச் சுட்டிக்காட்டி, அம்மொழிகளை அப்படியே வெளிப்படுத்தும் நிலையே தன்னுடையது என்பதை உலகுக்குணர்த்தும் வகையில் தம் சொற் களை "வழிமொழிகள்" என்று குறிப்பிட்டு அருளுவாராயினர்.

எனவே 'திருநெறியதமிழ்' என்பது திருநின்ற செம்மை எனப் பெறும் சிவானந்தப் பேரனுபவத்தை நெறிப்படுத்தி அமைக்கப் பெற்ற மொழி என்பதையே பொருளாகக் கொண்டது எனத் தெரிய லாம்.

**ஒரு நெறிய மனம் வைத்துணர்தல்:** அருநெறிய மறை வல்ல முனி எனவும் பெருநெறிய பிரமாபுரம் மேவிய பெம்மான் எனவும் கூறப் பெறும் சிவபரம்பொருள் தம்முடைய காட்சியில் அமைந்தமை யால் — தம்முடைய அனுபவப் பொருளாக அமைந்தமையால் 'இவன்' என அண்மைச் சுட்டுச் சொல்லாற் சுட்டியருளிய ஞானசம்

பந்த பெருந்தகை தம்மை "ஒரு நெறிய மனம் வைத்துணர் ஞான சம்பந்தன்" எனக் கூறிக்கொண்டார்.

ஞானவாரமுதம் உண்ட பிள்ளையார் சிவஞான சம்பந்தராயினர் சிவஞானம் ஒன்றுலே மட்டும் உணரவும் துய்க்கவும் ஆம் பரம் பொருளைத் தாமே அறியவும் நுகரவும் ஆம் நிலை பெற்ருர். அச்சிவ ஞானத்தால் குழைத்து அளித்த அமுதத்தைத் தானே துய்த்துப் பேரானந்தப் பெருவாழ்வில் திளைத்திருக்கலாம். ஆனுல் ஞான சம்பந்தப்பெருந்தகையாரும் அவரை உள்ளிட்ட அனைத்து அருளாளர்களும் அழுதது உலகத் துயிர்களுக்காகவே. உலகக்துயிர் களின் உய்திக்காக அழுத அழுகையாதலின், ஞானசம்பந்தரின் வாழ் நாள் தொடக்கம் முதல் நல்லூர்ப் பெருமணம் வரை உள்ள நிகழ்வுகள் எல்லாம் பொதுமை நோக்கியதாகவே அமைந்துள்ள மையை ஓர்ந்துணர்தல் வேண்டும்.

ஆற்றுநீர் கடலுடன் கலந்தது. கடலின் உப்புத் தன்மையைத் தான் ஏற்றது. கடலோதங்காரணமாக அந்நீர் மீளவும் ஆற்று நீருடன் கலந்தபோது அதனையும் உப்புத்தன்மையுடையதாகச் செய்தது. அவ்வாறே அருளாளர்கள் உலகத்துயிர்களுக்காக அழுது அரற்றி, சிவஞானம் பெற்றுப் பேராவின்பப் பரம் பொருளாம் சிவத் துடன் இணைந்து துய்த்தமையெல்லாம் தந்நலம் கருதியன்று ; உலகத்துயிர்களின் உய்தி கருதியதே என்னும் கருத்தமைய,

"ஆற்ருல் அலைகடற்கே பாய்ந்தநீர் அந்நீர்மை
மாற்றி அவ்வாற்ருல் மறித்தாற்போல்—தோற்றிப்
புலன்களெனப் போதம் புறம்பொழியில் நந்தம்
மலங்களற மாற்றுவிக்கும் வந்து"

என எடுத்துக்காட்டி, *திருக்களிற்றுப் படியார்* என்ற சாத்திரநூல் விளக்கம் கூறுகிறது. இக்கருத்தினைச் சிக்கலின்றி மிகவும் எளிமை யாகப் புரிந்துகொள்ளும் வகையில்,

"பூவான் மலிமணிநீர்ப் பொய்கைக் கரையின் இயற்
பாவான் மொழி ஞானப்பாலுண்டு—நாவால்
மறித்து எம் செவியமுதாய் வார்த்தபிரான் தண்டை
வெறித்தண் கமலமே வீடு".

என்ற *நால்வர் நான்மணி மாலை* முதற் செய்யுள் கூறுகிறது. ஞானப் பால் நாக்கில் பட்டது உண்மை. துய்ப்பு என்பது தனக்கு நன்மை பயக்கும் நிலையில் இல்லை. நாவில் அமைந்த துய்ப்பினை அக்குழந் தை விழுங்கவில்லை. நாவால் குதப்பி அதனை விழுங்காமல் மறித்து எம் செவியமுதாய் வார்த்த பெருமான் எனக்கூறி வழிபடுகிருர் *நால்வர் நான்மணி மாலை* ஆசிரியராகிய சிவப்பிரகாச அடிகள்.

முடிவாகக் கொள்ளுமிடத்துத் திருநெறியதமிழ் என்பதற்குச் சிவானந்தப்பேறு எண்பதே பொருள்; 'தமிழ்' என்பது 'சிவானந்தம்'

என்பதையே விளக்கும் சொல்லாக இங்கே நிற்கின்றது எனக் கொள்ளவேண்டும். திருமுறைவேறு சிவானந்தப்பேறு வேறு எனக் கொள்ளலாகாது. சிவானுபவத்தில் திளைத்த அருளாளர்கள் உலகத் துயிர்களின் நலங்காரணமாக அவ்வனுபவத்தை வெளிப்படுத்த முயன்றபோது, முதன்மொழியாக இறைவன் எழுத, ஒருநெறிய மனம் வைத்துணர் ஞானசம்பந்தரை உள்ளிட்ட அருளாளர்கள் அவ்விறைவன் அளித்த முதன்மொழியை வழிமொழியாக அமைத்துக் கொடுத்தார்கள். அவ்வழிமொழியே திருநெறிய தமிழ்.

அருளாளர்கள் அனைவரும் இவ்வாறே திருவருளோடு இணைந்து நிற்கும் ஒருமைநெறியில் நின்று, அவ்வொருநெறியில் மனம் வைத்து உணர்ந்து, பின்னரே எச்செயலையும், சொல்லையும் நிகழ்த்துகிறார்கள் என்ற குறிப்பைத் தெள்ளிதின் உணர்த்தும் சான்று ஒன்றையும் காணலாம்.

காரைக்காலம்மையார் புனிதவதியாராக நின்று அற்புதக்கனியை இறையருளால் பெற்றுத் தந்த நிகழ்வினை உளங்கொண்ட பரமதத்தனும் வணிகன் ''மானுடம் இவர்தாம் அல்லர் ; நற்பெருந்தெய்வ மாதல்'' அறிந்து அகன்று, பாண்டிநாட்டிற் சென்று வேறொரு பெண்ணை மணந்து, ஒரு பெண்ணையும் பெற்றான். பரமதத்தனின் இருப்பும் வாழ்வும் அறிந்த சான்றோர்களால் புனிதவதியார் பரமதத்தனை அடைய முற்பட்டபோது, வணிகன் தன் மனைவி மகளுடன் வந்து புனிதவதியார் திருவடிகளில் விழுந்து "தம்மைப் போற்றுதல் செய்மின்'' என வேண்டினன். அப்போதுபுனிதவதியார் தமக்கு இனி அமைய இருக்கும் செயல் யாது? எனத் தெளிய உணரவேண்டிய நிலைமைவந்தபோது அவர்கள் திருவருளைச் சார்ந்து நின்று தெரியும் நெறியாய ஒரு நெறிய மனம் வைத்துணர்ந்து ஒரு முடிவினை வெளிப் படுத்தியருளுகின்றார்கள். இந்நிலையைத் தெளிவுறத் தெரிந்து உளங் கொள வேண்டும் என்ற நோக்கத்தில் சேக்கிழார்

''கொன்றைவார் சடையினார்தம் குரைகழல் போற்றிச் ***சிந்தை***
***ஒன்றிய நோக்கில் மிக்க உணர்வு கொண்டு உரை***
***செய்கின்றார்''***

என்று கூறுகிறார். ''ஒரு நெறிய மனம் வைத்துணர் ஞானசம்பந்தன்'' என்ற திருநெறியதமிழின் விளக்கமாகவே காரைக்காலம்மையார் செயலையும், சிவபரம்பொருளின் திருவடியாம் திருவருளைத்தொழுது வணங்கி, அதனோடு சிந்தை ஒன்றிய நோக்கில் மிகுந்த உணர்வு கொண்டு உரை செய்வதாகவே சேக்கிழார் விளக்கிக் கூறியருளு வதை நோக்கித் தெளியலாம்.

***தமிழ்வழக்கு என்பது பொதுமையை உளங்கொண்டது: 'தமிழ்'*** என்ற சொல்லின் பொருளை ஆய்ந்துணர்ந்தது போலவே தமிழ் வழக்கு என்ற தொடரின் பொருளையும் நுனித்துக் காணுதல் வேண்டும்.

தாவில் சராசரங்களெல்லாம் சிவம் பெருக்கும் பிள்ளையார் என்று சேக்கிழாரடிகளால் பாராட்டப்பெற்ற திருஞானசம்பந்தர் திருவவ தாரம் செய்வதற்கு உரிய காரணம் சிலவற்றைக் கூறும்போது அவர்

''திசையனைத்தின் பெருமையெலாந் தென்திசையே வென்றேற
மிசையுலகும் பிறவுலகும் மேதினியே தனி வெல்ல
அசைவில் செழுந்தமிழ் வழக்கே அயல்வழக்கின் துறைவெல்ல
இசைமுழுதும் மெய்யறிவும் இடங்கொள்ளும் நிலைபெருக''

என்ற திருநெறிய தமிழின் மூலம் சில உண்மைகளைப் புலப்படுத்து கிறார்.

''திசைகள் எல்லாவற்றினுடைய பெருமைகளையும்தென்திசையே வென்று, அவைகளைவிட மிக்கு விளங்கவும், மேலுலகங்கள் முதலிய எல்லா உலகங்களிலும் இப்பூவுலகமே தனி வெல்லவும், என்றும் தாழ்ச்சியடைதல் இல்லாத செழுமைவாய்ந்த தமிழ்வழக்கே பிற வழக்குக்களை வென்று தனிச்சிறப்பெய்தவும், இசைமுழுதும் மெய் யறிவும் இடங்கொள்ளும் நிலைபெருகவும் அவதாரம் செய்தார் என் பது சேக்கிழார் வாக்கு.

ஞானவாரமுதமுண்ட பிள்ளையார் உலகத்துயிர்களெல்லாம் மலம் நீங்கப்பெற்று வாழவேண்டும் என்ற கருத்துடன் பணிபுரிந்த அருளாளர் என்பது வரலாற்றுண்மை. தென்திசையும் தமிழ்வழக்கும் உயரவேண்டும் என்னில் அது ஒரு குறுகிய நோக்கம் உடையதா யிற்றே! உலகில் உள்ள உயிர்கட்கெல்லாம் உய்திநிலை கூடுவான் வேண்டி, யாதொரு தெய்வம் கொண்டீர் அத்தெய்வமாகித்தானே மாதொரு பாகனுர்தாம் வருவர் என்பனபோன்றே பொதுமைநிலை தழுவிய கருத்துக்களெல்லாம் மலர்வித்தருளுவதற்குக் காரணமா யிருந்த சைவசமயத்தில் தமிழ்வழக்கே அயல்வழக்கை வென்று பீடு பெற நிற்பதற்காகத் திருஞானசம்பந்தர் அவதாரம் செய்தார் என்று கூறுவது பரந்தஉள்ளமோடு உலகந்தழுவிய திட்பமுடையதாகுமா? என்ற ஐயம் எழுவது இயற்கையே.

''உலகம் என்பது உயர்ந்தோர் மாட்டே'' என்று கொள்ளும் வழக்கு இருந்தபோதிலும், 'உலகம்' என்ற சொல் அனைத்தையும் உள்ளிட்ட ஒரு பொதுமையை அல்லது பொதுமைப் பொருளைப் பற்றிய கருத்தை விளக்க எழுந்ததே. தமிழகத்தில் ஒருநூல் உலகம் என்ற சொல்லைக்கொண்டு தொடங்குவது 'மங்கலம்' என்ற கருத்தி னுல் மட்டுமன்று ; இந்நூல் விளக்கும் கருத்துக்கள் உலகமைப்பை —உலகத்தை—உலகத்துயிர்களைச் சார்ந்த பொதுமையின் நன்மை யைக் கருதி விளக்கப் பெற்றவைகளே என்பதை அறிவுறுத்தத் தான். உலகம் தழீஇயது ஒட்பம், மலர்தலும் கூம்பலும் இல்லது அறிவு என்பது அறிவின் அளவுகோலாக இருந்தாலும் அது தமி ழகத்துச் சிந்தனையின் அடிப்படைக் கருவூலத்தின் அளவுகோலாக வும் இருந்தது. திருத்தொண்டர் புராணத் தொடக்கத்தில் இறைவன்

துவக்கவிழா நிகழ்த்துகிருன். அவன் எடுத்துக் கொடுத்த ஒலி "உலகெலாம்" என்பது. உலகெலாம் என்ற சொல்லை முதற் சொல்லாகக் கொண்டு, உலகெலாம் என்ற சொல்லை இறுதிச்சொல்லாக வைத்துப் பாடும் சேக்கிழார் இடையில் விளக்க முற்படும் கருத்துக்கள் எல்லாவற்றையும் உலகந்தழுவிய சிந்தனையில் விளைந்த கருத்துக்களாகவே கொள்ளுகிருர்.

அருளின் நீர்மைத் திருத்தொண்டு அறிவரும்
தெருளில் நீரிது செப்புதற்கு ஆமெனின்
வெருளில் மெய்ம்மொழி வான்நிழல் கூறிய
பொருளின் ஆகும் எனப் புகல்வாம் அன்றே

உலகம் தழுவிய சிந்தனையும், அறிவதற்கரிதாகியதிருவருளின் இணைப்போடு அதனைப் பிறிவரிதாய் விளக்கமுறுத்திவரும் திருத்தொண்டின் பெருமையும் யாவராலும் உணர்தற்கரிதெனின் அவை அனைத்தையும் ஆக்கவல்ல ஆற்றல் மெய்ப்பொருளைச் சார்ந்தது. அதன் அருளினுல் "உலகமெலாம்" என்று தொடங்கப்பெற்றமொழி ஏதோ ஒரு பொருளற்ற மொழியாக ஆகாமல் உண்மை மொழியாகவே—மெய்ம்மொழியாகவே ஆகும் என்று சொன்னதன் உட்பொருள், இந்நூலில் வளரும் சிந்தனைகள் எல்லாம் உலகந்தழுவிய ஒன்றே என்பதை உணர்த்தத்தான். எனவே "உலகெலாம்" என்பது உண்மைமொழியாய்—பொருள் பொதிந்த மொழியாய் விளங்குவதைத் திருவருள் அமைத்துக் கொடுத்துவிடும் என்று அறுதியிட்டுக் கூறுவாராயினர். மேலும், அவர்

இங்கிதன் நாமம் கூறின் இவ்வுலகத்து முன்னுள்
தங்கிருள் இரண்டில் மாக்கள் சிந்தையுள் சார்ந்து நின்ற
பொங்கிய இருளை ஏனைப் புறஇருள் போக்குகின்ற
செங்கதிரவன்போல் நீக்கும் திருத்தொண்டர் புராணம் என்பாம்

என்ற இப்பாடலின்மூலம் இவ்வுலகமக்கள் அனைவருடைய சிந்தையிறும் சார்ந்துநின்ற அகஇருளை நீக்கவல்லது இந்நூல்; இவ்வகையில் இது உலக உயிர்களுக்கெல்லாம் புறஇருளை நீக்குகின்ற சூரியனைப் போன்றது என்றே கூறி விளக்குகிருர். இவ்வாறு குறிப்பிடும் கொள்கையுடைய சேக்கிழார், இன்று சைவசமயத்துக்குரிமையுடையவைகளாகக் கருதும் கொள்கைகளை உலகப் பொதுமையுடையனவாக அமைத்துக்காட்டும் திறம் வியத்தற் குரியது.

*ஒலித்தத்துவம்:* உலகைச் சொல்லுலகம் பொருளுலகம் என்ற இரண்டாகப் பிரிப்பர். சொல்லுலகை அடிப்படையாகக் கொண்டே பொருளுலகு அமைக்கப் பெறுகிறது.

"எல்லாச் சொல்லும் பொருள் குறித்தனவே"

என்ற தொல்காப்பிய நூற்பா விரிந்த பொருளுடையது. சொற்களுக்குப் பொருள் (MEANING) உண்டு என்று உரை கூறுவது

பொதுக்கருத்து. உருவம் வேறு; உரு வேறு. FORM AND MATTER என்றாற்போல. எல்லாச் சொற்களும் பொருள்களின் வடிவ அமைப்புக்குக் கருவாக விளங்குபவை. வடிவங்களுக்கு அடிப்படையாக நிற்கும் கரு அல்லது அமைப்பு என்பது ஒலியால் அமைக்கப்பெற்றது. ஓவியம் வரைவதற்கு முன் அமைத்துக் கொள்ளும் வரைகோடுகள் SKELETON போல உருவ அமைப்புக்குரிய மூல அமைப்புக்கள் ஒலியால் அமைக்கப் பெறுகின்றன. ஒலியைப் புரிந்துகொண்டு, ஒலியால் அமைந்த வடிவவரைகோடுகளைப் புரிந்து கொண்டு, பின்னர் வடிவத்தைப் புரிந்து கொள்ளும் முறை பழக்கத்திற்கு வருதல் இயலாமற் போனகாலத்தே வடிவத்துக்கு மூலமாக அமைந்த வரைகோடுகள் போன்றவற்றை வடிவத்தின் மூலமாகவே தெரிந்து கொள்ளும் நிலை ஏற்பட்டது. இவ்வுண்மையைத் திருஞான சம்பந்தர் திருவாக்காலும் உணரலாம்.

பிடியதன் உரு உமைகொள மிகுகரியது
வடிகொடு தனதடி வழிபடும் அவரிடர்
கடிகணபதி வர அருளினன் மிகுகொடை
படிவினர் பயில்வலிவலம் உறை இறையே

என்ற இத் திருவலிவலத் திருப்பதிகத்தினுள், 'ஓம்' என்ற பிரணவ ஒலியினை அடிப்படையாகக் கொண்ட வரிவடிவ அமைப்பும் அதுவே கணபதியின் உருவ அமைப்பு என்பதும் வெளிப்படுத்தப் பெற்றுள்ளன. உரு என்பது வேறு. உமையம்மையானவள் பிடியின் வடிவத்திற்குரிய வரைகோடு அமைப்பாக விளங்கும் மூலவொலியமைப்பாகிய உருவை—கருவை—வரைகோடு அமைப்பைக் கொள்ள, அதனை அடிப்படையாகக் கொண்டு எழுகின்ற அதாவது மிகுகின்ற வடிவமாகிய யானையின் வடிவ அமைப்பைக் கொண்ட 'கணபதி' என்ற உருவம் வெளிவர அருளினன். இங்கே பெண் யானையின் வடிவை உமையவள் கொள்ள ஆண்யானை வடிவை இறைவன் மேற்கொண்டு 'கணபதி' என்ற ஒரு தெய்வம் வர அருளினன் என்ற உரையானது தத்துவ அமைப்பாலும், தமிழ்மொழியின் இலக்கண அமைப்பாலும் ஒத்துவாராமை விளங்கும். பிடியதன் உருவமாக உமை நிற்க, மிகுகரி எனப்பெறும் வடிவை இறைவன் ஏற்றுக் கொண்டானாயின், தனதடி வழிபடும் அடியவர் இடர் கடி கணபதி என்ற தொடரில் உள்ள 'தனது' என்பது கணபதியை அருளிய சிவனைக் குறிக்குமேயன்றிக் கணபதியைக் குறிக்காது. 'தனது' என்ற சொல் மிகுகரியின் வடிவம் கொண்ட பொருளையே குறிப்பதாகும். அவ்வாறாயின் சிவனுடைய திருவடிகளை வணங்குகின்றவர்களின் இடர் கடி கணபதி என்பது பொருத்தமாகாவை உணரலாம். உமைகாண இறைவன் எதையும் ஆக்குவன் என்பதன் உட்பொருள் இதுவே. அனைத்து ஒலிகளுக்கும் மூல நாயகியாக அமைந்த சத்தியானவள், ஒலியெனப் பெறும் வரைகோடு அமைப்பை அமைத்துக் கொடுக்க வேண்டியவளாகிறாள். அதனை அடிப்படையாகக் கொண்டே உருவம்—வடிவம் வெளிப்

பட்டு விடுகிறது என்பது திருமறைமொழி எனப்பொறும் மந்திர ஆற்றலை உணர்கின்ற காலத்தே விளங்கித் தோன்றுவ தொன்ரும்.

எனவே எந்த ஒருவடிவ அமைப்புடைய பொருளுக்கும் அகத்தே அமையும் வரைகோடு அமைப்புடைய 'உரு' அல்லது 'கரு' எனப்பெறும் ஒன்று ஒலியாலேயே அமைக்கப் பெறுகிறது என்பதை உணரலாம்.

*மூலஒலியின் கூட்டும் பிரிவும் :* ஒலித்தத்துவ அமைப்பை ஆராயும் போது மூல ஒலியாக 'ஓம்' என ஓர் ஒலி அமைந்துள்ளது. அதன் புற வடிவ அமைப்பைக் 'கணபதி' என்ற கடவுளின் வடிவமாகக் கொள்ளலாம். ஆயினும் இந்த 'ஓம்' என்பது மெய்மை, மெய்ப்பொருள், சத், சத்யம், என்றும் உள்பொருளாம் பரம் பொருள் என்ற ஒன்றற்குரிய மூல அக அமைப்பைக் கொண்ட ஒலியாகக் கருதப்பெற்றது. இவ்வொலியையே செம்பொருளின் மூலவொலியாக—திருநின்ற செம்மை என்பதன் முதலொலியாகக் கொண்டிருந்தனர் தமிழர். எனவேதான் 'ஓம்' என்ற மூல ஒலியை எழுப்பி ஆணையிடுதல் என்ற ஒருவழக்கினை 'ஓம் அறைதல்' எனச் சொல்லி வழக்காற்றிற் கொண்டொழுகி வந்தனர். இது இக்காலத்தே 'சத்தியம் செய்தல்' என்பதனோடு ஒத்த பொருளுடையதாய் அமைந்த ஒருவகை வழக்கம்.

'ஓம்' என்ற ஒலியின் அடுத்தநிலையாக, அதன் விரிவாக அமைந்த ஒலியே ''நமசிவய'' என்பது. உயிர்களுக்குரிய மனித உடம்பின் அமைப்பினை உணர்த்தக்கூடிய கரு அல்லது உரு என்பதே ''நமசிவய''. இறைவனுயினும் மக்களின் அமைப்புடைய வடிவத்தைக் கொள்ள வேண்டுமாயின் அதற்குரிய ஒலியால் பின்னியமைக்கப்பெற்ற வரைகோடுண்மைநிலையை உணர்த்துவது 'நமசிவய' என்பதே. 'நமசிவய' என்பதே ஒருவகைக் கூட்டொலியாய், ஒன்ருய், 'ஓம்' என்ற ஒலியின் அடுத்தநிலையில் கருதப்பெறக் கூடிய மூலவொலியாய், மனித வடிவமைப்பின் மூலக்கரு எனப்பெறும் 'உரு' எனப் பெறுவதாய் உணரப்பெற்ற நிலை திருஞானசம்பந்தர், திருநாவுக்கரசர் போன்ருர் காலத்தில் இருந்துவந்தநிலை. சுந்தரர் காலத்தில்தான் 'நமசிவய' என்பது ஐந்தெழுத்தெனக் கொண்டு, பின்னர் ஐந்தும் ஐந்து தனிப்பொருள்களைச் சுட்டும் சொற்கள் எனக் கொள்ளும் நிலை தோற்றம் பெற்றது.

''அந்தியுள் அந்தணர் அஞ்சு **பதம்** சொல்லி''

என்பது சுந்தரர் திருவாக்கு.

உயிர்கள் எடுக்கும் மனிதஉடம்பின் அமைப்பு 'நமசிவய' என்ற ஒலியமைப்பை—வரைபடக் கோட்டமைப்பை உட்கொண்டது என்பது பொதுமைநிலை. இது தமிழகத்து மக்களுக்குமட்டுமன்று ; உலகில் மனிதஉருக் கொண்ட அனைவருக்கும், ஏன்! இறைவனே

மனிதஉருவை மேற்கொண்டால் கூட, அவனுக்கும் பொருந்துவதாக அமைந்த பொதுமைநிலை. இறைவன் நடராசப் பெருமானென நின்று திருக்கூத்தியற்றும் போதும் இத் திருவைந்தெழுத்தின் அடிப் படையிலேயே செய்கிருன். தமிழ் வழக்கினராயினும் அயல் வழக்கின ராயினும் அவர்தம் உருவ அமைப்புக்குரிய மூலம் 'நமசிவய' என்ற மூலவொலியாகவே அமைந்துள்ளது என்பதில் வேறுபாடு கொள்ளு தற்கு இடமின்று. இதனுலேயே திருஞானசம்பந்தர் வரலாற்றில் இரண்டு நுட்பமான திருவருளற்புத நிகழ்வுகள் நடைபெறுகின்றன.

(1) ஞானவாரமுதமுண்ட பிள்ளையார் சீகாழித் திருக்கோயில் திருக்குளக்கரையில் புனிதவாய் மலர்ந்தழுதபின் திருவருளால் ஞானப்பாலருந்தி, போதையார் பொற்கிண்ணத்து அடிசில் பொல் லாது எனத் தாதையார் முனிவுற, தன்னையாண்ட தோணிபுரத் தெம்மானை 'ஓம்' என்ற மூலவொலியெழுத்தைத் தொடங்கும் 'ஓ' என்ற ஒலியுடன் தகராலயம் எனப்பெறும் மூலக்கருவறையில் மந்திர மூலமாக – ஒலித்தத்துவ நுட்பமாக விளங்கும் திருவருட்சத்தியை உடன்கொள்ளும் நோக்குடன் 'த்' என்ற ஒலியையும் சேர்த்துத் 'தோ' என எடுத்துப் பாடினுர். அடுத்த நிலையில் அவர் சென்று வழி பட்டுத் திருப்பதிகம் பாடிய இடம் திருக்கோலக்கா. இங்கே இறை வன் ஞானவாரமுதமுண்ட பிள்ளையாருக்குத் திருத்தாளம் தந்தருளி ஞன். அதனிற் பொறித்துள இலச்சினை 'நமசிவய' என்பதாம். எனவே, உலகனைத்தும் இடமாகக் கொண்டு வாழும் உயிர்களுக் கெல்லாம் பொதுவுற அமைந்த மூலவொலியை முதற்பதிகத்தில் எடுத்துக்காட்டியும், இரண்டாம் பதிகத்தில் அதனையடுத்த திருவைந் தெழுத்தொலியை விளக்கிக் காட்டியும் அமைந்த திருவருளற் புதங்கள் ஒலித்தத்துவத்தின் மூலத்தை உலகுக்கு எடுத்துக் காட்டு வனவாய் அமைந்தன. இவை சைவசமயத்தின் மந்திரங்களாக அமைந்தன வாயினும் உலகம் தழுவிய ஒலித்தத்துவத்தின் பொது மையை நோக்கிய மூலமாய் அமைந்தவை என்பதை உளங்கொள வேண்டும்.

(2) திருஞானசம்பந்தப் பிள்ளையாருக்கு ஏழாண்டு நிறைவுற் றதும் உபநயனச் சடங்கு நிகழ்த்தப் பெற்றது.

''ஒருபிறப்பும் எய்தாமை உடையார் தம்மை
உலகியல்பின் உபநயன முறைமையாகும்
இருபிறப்பின் நிலைமையினைச் சடங்குகாட்டி
எய்துவிக்கும் மறைமுனிவர் எதிரே நின்று
வருதிறத்தின் மறைநான்குந் தந்தோம் என்று
மந்திரங்கள் மொழிந்தவர்க்கு மதுரவாக்கால்
பொருவிறப்ப ஓதினுர் புகலிவந்த
புண்ணியனுர் எண்ணிறந்த புனித வேதம்''

என்று அந்நிகழ்ச்சியை விரித்துரைத்தார் சேக்கிழார். நிகழ்ச்சியின் முடிவில் திருஞானசம்பந்தர், மந்திரங்கள் எல்லாவற்றின் பொருளை

யும், வைதிக நூற் சடங்கின் வந்த செய்திகளையும், அவற்றின் வந்த சிந்தை மயக்குறும் ஐயங்களையும் தெளிய விளக்கியருளியபின் முந்தை முதல் மந்திரங்கள் எல்லாந் தோன்றுவதற்கு மூலமாகும் முதலாகும் எழுத்தஞ்சு எனக்கூறி, அது நாதனுர் திருநாமமாக அமைந்திருக்கும் திருவைந்தெழுத்தே எனத் தெளிவுறுத்தி அனைத் தொலிகளும் தோன்றுதற்கு மூலகாரணமாக நின்ற முதன்மை ஒலி யானது அஞ்செழுத்தொலி என விளக்கியருளினுர். அவ்வழகிய கருத்தினை விளக்குமுகமாகவே "அந்தியுள் மந்திரம் அஞ்செழுத்து மே" எனத் தொடங்கும் நமச்சிவாயத் திருப்பதிகத்தை அருளிச் செய்தார். அதன் திருக்கடைக்காப்பினுள் தம்மையே 'நற்றமிழ் ஞானசம்பந்தன்' எனக்கூறி, அப்பஞ்சாக்கரத் திருப்பதிகம் அஞ் செழுத்து உற்ற அரும்பதிகம் எனச் சிறப்பித்தார். இத் திருப்பதிகம் முழுவதிலும் திருவைந்தெழுத்து என்பது சிவன் தன்னுடைய திரு நாமம் என்பதால் இத்துணைப் பெருமையுடையது என்று ஓரிடத்திலுங் கூறவேயில்லை. இரண்டாவது முறையாகத் திருமணச்சடங்கு முடிந்த பிறகு பாடுகின்ற நமச்சிவாயத் திருப்பதிகத்தில்தான் நமச்சிவாயம் என்பது நாதன் நாமம் என்ற குறிப்பினை வெளிப்படுத்துகின்ற முறையில்.

"காதலாகிக் கசிந்து கண்ணீர் மல்கி
ஓதுவார்தமை நன்னெறிக்கு உய்ப்பது
வேதம் நான்கினும் மெய்ப்பொருளாவது
நாதன் நாமம் நமச்சி வாயவே"

என்று பாடியருளுகிருர். இந்நமச்சிவாயத் திருப்பதிகத்தின் மூல மாகவே திருமணத்திற்கு வந்த அனைவரும் ஞானவொளிப்பிழம்பிற் புக்குச் சிவிபிராளுேடு இணைந்தருளினர். இறைவன் அளித்த ஓம் என்ற மூலவொலியும் 'நமசிவய' என்ற இரண்டாம் ஒலியும் காரண மாகத் தொடங்கிய ஒலித்தத்துவம் நற்றமிழாக விரிந்து, தாவில் சராசரங்களெல்லாம் சிவம் பெருக்குந் தொண்டினை யாற்றி, இறுதி யில், திருமணத்துக்கு வந்தவர் அனைவரும் சிவமாம் பெருவாழ்வில் புகப் பெறுதற்குரிய வாழ்வளிக்கும் மூல ஒலியாக நின்றது என்னும் கருத்தை நுனித்து நோக்கினுல் 'நமசிவய' என்னும் ஐந்தெழுத்து அனைத்தொலிகளுக்கும் மூல ஒலியாக நின்றுள்ள உண்மை தெரிய வரும்.

*ஒலியும் பயனும்:* திருக்கடவூர் அபிராமியம்மையின் திருவருள் பெற்ற அபிராமிப்பட்டர்

"சொல்லும் பொருளும் என நடமாடும் துணைவருடன்
புல்லும் பரிமளப் பூங்கொடியே"

என்று கூறுவதுபோல ஒலியானது பொருளைக் குறித்தல் என்பதைப் பயனுகக் கொண்டு விளங்குகிறது எனக் கொள்வது பொதுவழக்கு. ஒலியின் வேறுபாடுகளைப் பயன் வேறுபாடுகள் மூலம் உணர்ந்து கொள்ளுமாறு மூன்றுவகையான சான்றுகள் கிடைக்கின்றன.

(1) *மொழியொலிகள்:* ஓரறிவுயிர் முதல் ஆறறிவுயிர்வரை உள்ள எல்லாம் தத்தம் கருத்துக்களை எடுத்துக் கூறுவும், இணைத்துச் சிந்திக்கவும், சிந்தித்தவைகளின் அடிப்படையில் சென்று உயரவும் காரணமாகவுள்ள ஒலிகளை மொழியொலிகள் எனக் குறிப்பிடலாம். ஓரறிவுயிரிற் பல வேறுபாடுகள் அமைந்திருக்கலாம். ஒவ்வோரின உயிர்களும் தத்தம் பருவுடலுக்கேற்ற ஒலிநுட்பங்களை மேற் கொண்டு தத்தம் வளர்ச்சியைப் பெறுகின்றன.

(2)*மொழிகளின் மூலஒளி:* பல மொழிகளையும் அவ்வம் மொழி ஒலிகளின் பயிற்சிமுறையால் அறிந்து கொள்ளுவது ஒருவகை. இவ் வாறு அறிந்து கொள்பவர்களைப் பன்மொழிப் புலவர் எனக் குறிக்க லாம். ஆனால் ஒரே மூல ஒலியை அறிவதன்மூலம் அனைத்து மொழி களையும் அறிந்து கொள்ளுதல் இன்னொருவகை. சேரமான் பெருமாள் நாயனர் இத்தகைய ஆற்றலைப் பெற்றிருந்தார் எனத் தெரிய வரு கிறது. அனைத்துயிர்களும் தத்தமக்குள் பேசும் பேச்சுக்களை அறியும் ஆற்றல்பெற்றிருந்தார். எறும்புகள் தமக்குள் பேசிக்கொள்ளும்மொழி யையும், ஈக்கள் தமக்குள் பேசிக்கொள்ளும் மொழியையும், அவ் வாறே அனைத்துயிர்களும் பேசும் மொழியையும், அனைத்து ஒலி களுக்கும் மூலமாகிய ஒலி ஒன்றன் மூலம் அறியும் தன்மை பெற்றிருந் தார். ஆகையினுல் அவருக்குக் 'கழறிற்றறிவார்' என்ற பெயர் உண்டு. ஒரு மொழிவைத்து உலகாளுதல் என்ற முறைமை இவருக்கே மிகுதி யும் பொருந்துவதாகும்.

(3) *அருளோசை:* மேலே சொன்ன இரண்டும் ஒலிகள். மொழித் தோற்றத்துக்குக் காரணமாகிய ஒலிகள் எல்லாம் சிவ னுடைய உடுக்கையிலிருந்து தோன்றும் எனக் கொள்வது மரபு. மொழியொலிகள் எல்லாவற்றையும் ஒருசேர உணர்ந்து கொள்ளுதற் குரிய மூலஒலியை இறைவன் திருச் சிலம்பிலிருந்து எழும் ஒலி எனக் கூறுவர். இறைவன் திருச்சிலம்பொலியை நாளும் கேட்கும் பேறு பெற்று, அதனுல்கழறிற்றறிவாராக விளங்கியவர் சேரமான் பெருமாள் நாயனர். இனி மூன்றும் நிலையில் நிற்பது ஓசை. திருவருளோசை. ஒலிகள் பொருளைச் சுட்டும். ஓசையானது பொருளைக் காட்டும்; அனுபவத்துக்குரியதாக்கும். பொருளைக் காட்டி, பொருளோடு இணைய வைத்து, பொருளனுபவத்தை உண்டாக்கி, உருகவைத்து, அப்பொருளோடு வேறின்றிக் கரைந்தும் கலந்தும் விடுமாறு செய்து விடும். இதனைப் பரநாதம் என்பர். இதனைத் ''திருச்சிலம்பு ஓசை'' என்பர்.

''திருச்சிலம்பு ஓசை வழியே சென்று
நிருத்தனைக் கும்பிடு என்று உந்தீபற
நேர்பட அங்கே நின்று உந்தீபற''

என்று திருவுந்தியார் கூறுவதை உணர்ந்து தெளிக.

இத்தகைய ஓசையைக் கேட்ட எல்லாப் பொருள்களும் உருகும் என்பதாக நாம் அறிந்துகொள்ள முடிகிறது. கல்முதல் மனிதன் வரை உள்ள பிறவிகளில் உள்ள உயிர்கள் கொண்ட புன்புலால் யாக்கையை உருக்கி, உயிரையும் உருக்கி, அருளனுபவத்தை அளிக்கும் என்ற கருத்தினை நம் ஆன்றோர்களின் திருவாக்குக்களி லிருந்து உணர முடிகிறது. உருகுதலும், மெய்ஞ்ஞான நாட்டம் பெறுதலும் ஆகிய இரண்டு பயன்களை இத்தகைய ஓசையின் மூலம் பெற முடியும் என்பதை இராமலிங்க அடிகள் திருவாக்கால் உணரலாம்.

"வாட்டமிலா மாணிக்க வாசகநின் வாசகத்தைக்
கேட்டபொழுது அங்கிருந்த கீழ்ப்பறவைச் சாதிகளும்
வேட்டமுறும் பொல்லா விலங்குகளும் மெய்ஞ்ஞான
நாட்டமுறும் என்னில் இங்கு நானடைதல் வியப்பன்றே"

அகத்தியர் தமிழ் பாடினர், மலை உருகிற்று என்ற வரலாற்றை இங்கே நினைவிற் கொள்ளல் பயனுடைத்தாம்.

இறையனார் அகப்பொருளுக்குரிய உரைகள் பலவற்றுள் நல்ல உரை இது எனத் தேர்ந்தெடுப்பதற்குரிய மேல்வரிச் சட்டமாக நின்ற கருத்து யாதெனில், கேட்போர் கண்ணீர் வார, மெய் புளகித்து நின்று உருகுவதாம் உருக்கத்தைத் தருவதே. உருத்திரசன்மனார் இறையனார் அகப்பொருளுக்கு நக்கீரர் எழுதிய உரையைக் கேட்ட போது அவ்வாறு உருகிநின்றார் என்ற வரலாற்றையும் நினைவிற் கொள்ளல் வேண்டும்.

மேலே குறிப்பிடப் பெற்றவைகள் யாவும் பயன் விளைவைக் கொண்டு ஒலி வேறுபாடுகளை நாம் அறிந்துகொள்ளத் துணைநின்ற சான்றுகள். அருளியல் நிலையில் உணர்ந்து கொள்ள வேண்டிய விளக்கத்தினை விடுத்து, அறிவியல் நிலையில் அவைகளை உணர்ந்து கொள்ளக் கூடிய வாய்ப்பு ஏதும் அமைந்துள்ளதா? எனக் காணுதல் வேண்டும்.

மக்களின் உடம்பில் கொப்பூழை இடமாகக் கொண்டு உதானன் என்ற காற்று எழுப்ப எழும் ஒலியணுத் திரட்சிகள் மேலே சென்று, மார்பு கண்டம் முதலிய இடங்களைப் பொருந்தி வெளிப்படும் போது எழுத்தொலிகள் தோன்றும் என்பது இலக்கண வழக்கு. இதனை "உந்தி முதலா முந்து வளி" என்ற நூற்பாவினால் தொல் காப்பியர் எடுத்து இயம்புவார். உந்தியை இடமாகக் கொண்டு தோன்றிய பிரமன் வேதாவாக விளங்குவதற்கு உரிய ஒலி இதுவே. இவ்வொலியின் விளக்கமே அனைத்து எழுத்தொலிகளும்.

இரண்டாம் நிலையில் வேறொரு ஒலித்தோற்ற முறை. இவ் வொலியை மூலாதாரத்திலிருந்து தொடங்க வேண்டும். இதனை விளக்கும் பழம்பாடல் ஒன்று உண்டு.

"துய்ய உடம்பளவு தொண்ணூற்றாறு அங்குலியா
மெய்யெழுத்து நின்றியங்கு மெல்லத்தான்—வையத்து
இருபாலும் நாற்பதோடு ஏழ்பாதி நீக்கிக்
கருவாகும் ஆதாரங் காண்"

மக்களுடம்பின் அளவு எண்சாண் என்றும் தொண்ணூற்றாறு அங்குலம் அல்லது விரற்கிடை என்றும் கொள்வர். தொண்ணூற்றாறு அங்குல அளவுடைய உடம்பில் மேல் நாற்பத்தேழரை அங்குலம் கீழ் நாற்பத்தேழரை அங்குலம் நீக்க, இடைநின்ற ஓரங்குல இடமே மூலாதாரம். இங்கிருந்து எழுப்பப்பெறும் ஒலி முன்சொன்ன ஒலியி னின்றும் வேறுபாடுடையது. அடுத்தபாடல்,

ஆதாரம் பற்றி அசைவ முதலெழுத்து
மூதார்ந்த மெய்யெழுத்து முன்கொண்டு—போதாரும்
உந்தி இடைவெளியா ஓங்கும் இடை பிங்கலையால்
வந்து மேல் ஓசையாம் வைப்பு

என மேலும் மூலாதார ஒலியை விளக்கம் செய்கிறது. மூலாதாரத்தி லிருந்து எழுப்புங்கால் மகரவொற்றினைத் துணையாகக் கொள்வது மரபு. இங்கிருந்து எழுப்பப் பெறும் ஒலி ஆறு ஆதாரங்களைத் தொட்டு, இடகலை பிங்கலை உதவியால் வெளிவரும்போது, ஆறு ஆதாரங்களில் இருக்கும் வெளிப்புற எழுத்துக்கள் ஐம்பத்தொன்றினைத் தொட்டு வரும்போது, ஐம்பத்தோரெழுத்துக்கள் பிறப்பதற்கு உறுதுணை யாகும். இதனை விளக்கும் முறையில் திருமுறைகளில் காணப்பெறும் நூல்கள் ஐம்பத்தொன்று எனக் கொண்டு, திருமுறை ஒலிகள் இவ் வாற்றால் அமைந்தவை என்று கருதுவதும் ஒரு மரபு.

ஆயினும் மூன்றாம் முறையில் எழுப்பப்பெறும் ஒலியே அனைத் துக்கும் மூலமாக நின்ற முதற்பேரொலி. இதனை எழுப்பும் முறையை நாம் தெரிந்துகொள்ள முடியும்.

மூலாதாரத்தில் அ, உ, ம என்ற மூன்றொலி அமைப்புக்கள் உண்டு. அவற்றில் மகாரந் தொடங்கி அமையுமானால் மேலே சொன்னவாறுஐம்பத்தோரெழுத்து வகையில் பிறக்கும் ஒலிமுறையே கிடைக்கும். அதைவிடுத்து, 'அ' என்ற எழுத்தைத் துணையாகப் பற்றுதல் வேண்டும். அதன் மூலமாகக் கிடைப்பது ஆறு ஆதாரங் களிலும் அகவட்டத்து அமைந்த ந, ம, சி, வ, ய என்ற ஐந்தெழுத்து ஒலி. அ, உ, ம சேர்ந்த ஓம் என்ற ஓரெழுத்து மூலாதார எழுத்து. அதனுடன் ஐந்தெழுத்தும் சேர மொத்தம் ஆறுதார எழுத்துக்களும் கிடைக்கின்றன. இவ்வொலியே மூல ஒலி. இதனைத் திருமூலர் தம் முடைய திருமந்திர நூலில் நான்காந் தந்திரம் முழுவதிலும் விளக்கிக் காட்டியுள்ளார். அதில் ஒரு செய்யுள்

"ஐம்பதெழுத்தே அனைத்து வேதங்களும்
ஐம்பதெழுத்தே அனைத்து ஆகமங்களும்
ஐம்பதெழுத்தேயும் ஆவது அறிந்தபின்
ஐம்பதெழுத்தும் போய் அஞ்செழுத்தாமே"

என்று கூறியுள்ளார். இவ்வொலியே தமிழ் ஒலி. இவ்வொலியே கல்லையும் கரைய வைப்பது. அகத்தியர் தமிழ்பாடினுர் கல்லுங் கரைந்தது என்பது இவ்வொலியை அடிப்படையாகக் கொண்டே.

திருஞானசம்பந்தர் 'தோ' எனத் தொடங்கிப் பாடியதற்கு 'ஓம்' என்பதன் 'ஓ' காரமும் தகரமெய்யும் சேர்த்துப் பாடினுர். தகர மெய்யினை இணைப்பதற்குக் காரணம் இரண்டு. ஒன்று 'தகராலயம்' எனப் பெறும் உள்ளக்குகையில் மந்திர மூலமாகிய சக்தி குடிகொண் டிருக்கிருள் என்பதை உளங்கொண்டு தகரம் கொள்ளப் பெற்ற தென்பது ஒன்று. 'ஓ' என்பதனேடு இணைந்த தமிழ் ஒலியை எழுப் பிப் பாடும் முறை என்பதை உணர்த்தும் முறையில் 'தமிழ்' என்ற சொல்லின் முதன் மெய்யாகிய 'த்' என்பதைச் சேர்த்துப் பாடினுர் என்பது இரண்டு.

எனவே, மூலாதாரத்தில் 'அ' என்ற இறையெழுத்தை உடன் கொண்டு, ஐந்தெழுத்து ஒலிகளை எழுப்பினுல் அது தமிழ் ஒலி என்றும் அதுவே அனைத்துக்கும் மூலவொலி என்றும் அது தன்னைக் கேட்டார் அனைவரையும் உடலை உருக்கி, உள்ளத்தை உருக்கி, மெய்ஞ்ஞான நாட்டமுறச் செய்யும் என்பதும் தெரிய வந்தன. இந் நிகழ்ச்சியைச் சேக்கிழார் ஆனய நாயனுர் வரலாற்றில் வைத்து விளக்குவாராயினர். ஆனயநாயனுர்,

"எடுத்தகுழற் கருவியினில் எம்பிரான் எழுத்தஞ்சும்
தொடுத்தமுறை ஏழிசையின் சுருதிபெற வாசித்துத்
தடுத்த சராசரங்களெலாந் தங்கவரும் தங்கருணை
அடுத்த இசை அமுதளிப்பதை"

வழக்கமாகக் கொண்டவர். அதனுல் வினையும் பயனைக் கூற வரும் போது,

"அன்புஊறி மிசைப்பொங்கும் அமுதஇசைக் குழலொலியால்
வன்பூதப் படையாளி எழுத்தைந்தும் வழுத்தித் தாம்
முன்பூதி வருமளவில் முறைமையே எவ்வுயிரும்
என்பூடு கரைந்துருக்கும் இன்னிசை"

வெளிப் போந்தது என்று எவ்வுயிரும் என்பூடு கரைந்துருக்கும் பயனே ஆனயநாயனுர் இன்னிசைப் பயன் என விளக்கிக் காட்டினுர்.

எனவே, ஒலித்தத்துவ மூலத்தை உணர்ந்து, அனைத்துயிருக்கும் வளமைகொழிக்கும் மூல ஒலியை மேற்கொள்ளுவதே தமிழ்வழக்காக அமைந்துள்ளது. ஐந்தெழுத்தை மூலமாகக் கொள்வது தமிழ்வழக் காயின் அது உலகத்துயிர்கள் அவ்வளவுக்கும் இயைந்த ஒன்றே யாகுமன்றிக், குறையுடையதாகாது. இவ்வகையால் செழுந்தமிழ் வழக்கே அயல் வழக்கின் துறை வெல்ல என்பது குறுகிய நோக்கத்தில் வெளிப்படுத்தப் பெற்ற கருத்துரையன்று; உலகந்

தழுவிய பொதுமை நோக்கில் வெளிப்படுத்தப் பெற்ற மெய்மை மொழியாகக் கொள்ள வேண்டும்.

"தமிழ் வழக்கு" என்பது உலகந்தழீஇய ஒட்பத்தை – பொது மையை அடிப்படையாகக் கொண்ட கருத்துக்களின் வளர்ச்சி வழக்கே யொழிய, குறுகிய நோக்குடைய சொல்லாட்சியன்று என்பது ஒலித்தத்துவ அமைப்பின் மூலம் விளக்கப் பெற்றது. இலிங்கம் என்னும் திருவுரு, திருநீற்றின் ஒளி ஆகியவைகளும் பொதுமை தழுவியனவே. அவையெல்லாம் ஈண்டு விரிப்பிற் பெருகும். தமிழ்வழக்கு என்பது உலகப் பொதுமை சார்ந்தது என்பதை மேலும் இரண்டு சான்றுகளுடன் விளங்கிக் கொள்ளுதல் வேண்டும்.

*இன்பப்பேறு:* உயிர்கள் இவ்வுலகில் பல்வகையான பிறப்புக் களை எடுத்துப் பிறந்தும் இறந்தும் வருகின்றன. இத்தொடர்ச்சியின் முற்ற முடிந்த பயனாக இன்பப் பேற்றினைக் கொள்வது தமிழ்வழக்கு. இதனை,

"எல்லா உயிர்க்கும் இன்பம் என்பது
தானமர்ந்து வரூஉம் மேவற் றாகும்"

என்று குறிப்பிட்டுக் காட்டுவது தொல்காப்பிய நூற்பா. இன்பம் பெறுதல் என்ற அளவில் மட்டும் சொல்லி நிறுத்திவிடின், அது பிறருடைய வழக்கும் ஆகலாம். அனைவருக்கும் இயலுவதாய், அனைத் துயிர்களுக்கும் வாய்வதாய், உலகப் பொதுமை தழுவிய இனபப் பேற்றினைக் கொள்வதே தமிழ்வழக்கு.

சேக்கிழார் "திசையனைத்தின் பெருமையெலாம்" என்று தொடங்கும் செய்யுள் மூலமாகத் திருஞானசம்பந்தர் இவ்வுல கியல் வாழ்வுக்கு வந்தருளிய நிகழ்ச்சிக்குப் பல காரணங்கள் கூறுகிறார். அதனுள் ஒன்று,

*"இசைமுழுதும் மெய்யறிவும் இடங்கொள்ளும் நிலைபெருக"*

என்பது. இவ்வரியின் மூலம் 'இன்பப் பேறு' எத்தகைய இயல் புடையது என்பதை வரையறுத்துக் கூறுவாராயினர்.

புலன் கடந்த பொருளியல் பற்றிய சிந்தனையாளர்கள் மனத்தின் இயல்பை அடிப்படையாகக் கொண்டு ஏனைய புலன்கடந்த பொரு ளியல்புகளையும் வரையறை செய்தருளினர்கள். மனம் மூன்று சொற்களாற் சுட்டப்பெறுகின்றது. அவை மனம், நெஞ்சம், உள்ளம். மனம் செயல் வழிப்பட்டது என்றும், நெஞ்சம் அறிவு வழிப்பட்டது என்றும், உள்ளம் இச்சை அல்லது ஆசையின் வழிப்பட்டது என்றும் விளக்குவர் சான்றோர். பொதுவுற நோக்கின் இம்மூன்றன் இணைப்பே மனம். இவ்வாறே உயிரையும் அறிவு, இச்சை, செயல் என்ற மூன்றன் இணைப்பு என்றும், இறைவனையும் சத்து, சித்து, ஆனந்தம் என்ற பெயர்களால் முறையே செயல், அறிவு, இச்சை என்ற

மூன்றன் தொகுப்பு என்றும் கொள்ளுவர். இம்மூன்றும் தனித்தனி நிலையில் நிறைவு பெறும்போது இன்பம் எய்தப்பெறும். செயல் நிலையின் நிறைவிலும், அறிவின் நிறைவிலும், இச்சையின் நிறைவிலும் தனித்தனியே இன்பம் உண்டு. உயிர் இறைவனோடு இணைவதிலுங் கூட, உயிரின் அறிவு இறைவனின் அறிவுப் பகுதியோடு இணைந்து இன்பம் பெறும் அல்லது நிறைவு பெறும். அவ்வாறே ஏனைய பகுதிகளும் ஒவ்வொன்றன் நிறைவையே அந்நிறைவில் எழும் இன்பத்தையே முடிந்தநிலை எனக் கொள்வோர் உளர். இம்மூன்றும் தனியளவில் நிறைந்து, அந்நிறைவின் பயனாக மூவகை இன்பநிலைகள் உண்டாம். பின்னர் அம்மூவகை இன்பங்களின் இணைப்பு நிலையில் எழும் இன்பமே 'தமிழ் வழக்கு' என்பதனால் குறிக்கப் பெறும் இன்பப் பேறு எனக் கொள்ளல் வேண்டும்.

"இசைமுழுதும் மெய்யறிவும் இடங்கொள்ளும் நிலைபெருக"

என்று சேக்கிழார் கூறும் தொடரை

(1) இசைமுழுதும் கொள்ளும் நிலை

(2) மெய்யறிவு முழுதும் கொள்ளும் நிலை

(3) இடம் முழுதும் கொள்ளும் நிலை

எனப் பிரித்து, இசைமுழுதும் கொள்ளும் நிலையால் இச்சை அல்லது உணர்ச்சி அல்லது அவா முழுமை பெற்று இன்பம் எய்தும் நிலையைக் கொள்ள வைத்தார் என்றும், அவ்வாறே மெய்யறிவு முழுமைபெற்று இன்பம் எய்தும் நிலையை மெய்யறிவு முழுதும் கொள்ளும் நிலை என்ற தொடரால் குறிப்பிட்டார் என்றும், மூன்றும் நிலையில் செயற்பாட்டு நிலைவளர்ச்சியைக் குறிப்பிட்டார் என்றும் கொள்ளுக. இடம் என்பது செயற்பாட்டுக்கு நிலைக்களமான உலகைக் குறிப்பிட வந்த சொல். எனவே இச்சை, அறிவு, செயல் என்ற மூன்றுலும் முழுமை பெற்று, அம்முழுமையால் தனித்தனி இன்பநிலை தோன்றுவதாயிற்று. இனி, அத்தொடரின் இறுதிச் சொல்லாகிய "பெருக" என்பதால் இம் மூவகை நிலைகளையும், அவ்வந்நிலைகளின் முழுமையையும், முழுமையால் தோன்றும் மூவகை இன்ப நிலைகளையும் இணைத்த நிலையில் தோன்றும் பேராப் பேரின்ப நிலையைக் குறிப்பிட்டுக் காட்டுவாராயினர். இதனை "ஒருமைநிலை" என்றும், "ஒருமையால் உலகை வெல்லும் நிலை" என்றும் குறிப்பிட்டுக் காட்டுவார் சேக்கிழார். ஒருமையால் உலகை வென்ற நிலையே உண்மைப் பொதுமை நிலை. இதனையே சேக்கிழார்.

*"ஞாலம் அளந்த மேன்மைத் தமிழ்"*

என வேறொரு வகையாலும் விளக்கிக் காட்டுவாராயினர்.

***தெய்வம்அனுபவப் பொருள்:*** செழுந்தமிழ் வழக்கு என்பது உலகப் பொதுமையை அடிப்படையாகக் கொண்டெழுந்தது என்ற

கருத்தினை விளங்கிக் கொள்ளும் வகையில் மூன்ருவது ஒரு சான்றினைக் கொள்ளுதல் தெளிவு பெறத் துணை செய்வதாம்.

தொல்காப்பியம் பொருள்களைப் பிரிவுபடுத்தி வரையறை செய்கிறது. முதற்பொருள், கருப்பொருள், உரிப்பொருள் எனப் பொருள் களை மூன்று வகையாகப் பிரிவு செய்கிறது. நிலத்தையும் காலத்தையும் முதற் பொருளாகப் பிரிக்கிறது. கடவுள் உண்டு என்ற கொள்கையும், கடவுள் இல்லை என்ற கொள்கையும், கடவுள் வாக்கிற்கும் மனத்திற்கும் எட்டாப் பரம் பொருள் என்ற கொள்கையும் ஆகப் பலவாருன கொள்கைகள் நிலவுகின்றன. எனினும், தொல்காப்பியர் காட்டும் கடவுட் கொள்கை வியப்புக்குரியது. நிலமும் காலமும் இணைந்து நிற்க, மக்களின் அனுபவப் பொருளாக விளக்க முறுவதே தெய்வம் என்னும் பொருள். தொல்காப்பியர் கடவுளை முதற்பொருளாகக் கொள்ளாமல் கருப்பொருளில் முதற் பொருளாக அமைத்துக் காட்டுகிருர்.

''தெய்வம் உணுவே மாமரம் புட்பறை
செய்தி யாழின் பகுதியொடு தொகைஇ
அவ்வகை பிறவும் கருவென மொழிப'' (964)

என்பது தொல்காப்பிய நூற்பா. கடவுளைப்பற்றிய கருத்து எதுவாயிருப்பினும் அது அம்மனிதனின் அனுபவப்பொருளாக அமைந்து அனுபவிக்கப் பெற்ற காரணத்தால் தோன்றப் பெறுவது என்பதே தொல்காப்பியரின் உள்ளக்கிடை. அனுமானம், ஆகமம் போன்ற அளவை முறைகளால் உண்டு எனக் கருதப்பெறும் பொருளன்று கடவுள். உணவு, விலங்கு, மரம், பறவை, இசைக்கருவிகளைப் போன்றவை அவ்வந்நிலத்திற்கேற்பவும் காலத்துக்கேற்பவும் மக்களின் அனுபவநிலைக்கொத்ததாக அறிந்து, துய்த்து, அமைதி கொள்ளுதற்குரியவை. அவ்வாறே தெய்வமும் என்று குறிப்பிடுகிருர் தொல்காப்பியர். கடவுள் காலங்கடந்த பரம் பொருளாக, நிலங் கடந்த பிரமப் பொருளாக, அறிதற்கரிய பெரும் பொருளாக இருக்கலாம். அதைத் தொல்காப்பியர் மறுக்கவில்லை, அவைகளெல்லாம் அப்பொருளினுடைய பல்வேறு வகைப்படும் பேராற்றல்களாக இருக்கலாம். எனினும் 'தெய்வம்' என்ற ஒருபொருள் அனுபவத்தால் அறியப்பெறும் பொருளே யொழிய, பல்வேறு அகநிலை, புறநிலைக் காரணங்களால் ஆய்ந்து பார்த்து அத்தகைய ஒரு பொருள் இருக்க வேண்டும் என அறிவால் ஒத்துக் கொள்ளப் பெறுவதாக அமைந்த பொருள் அன்று. இவ் வகையில் ஏனைய வழக்குக்களை விட, தமிழ்வழக்கு வேறுபடுகின்றது. இது தமிழ் வழக்கேயாயினும் உலகப் பொதுமை தழுவியதே என்பது இற்றை நாளில் கடவுட் கொள்கையைப் பற்றி ஆராயும் ஆராய்ச்சியாளர்களிடையே எழும் சிக்கல்களை ஆராயும்போது நன்கு புலனுவதொன்ரும்.

கடவுள் அனுபவப்பொருளாக இருந்த ஒன்றுதான். ஊரின் நடுவிலே அனைத்துக் குடிமக்களுக்கும் தந்தையாய், அக்கடவுளின்

இல்லம் அமைந்தது. திரிபுரம் எரித்த விரிசடைக் கடவுளும், குன்றெறிந்த குமரவேளும் ஏனைப் புலவர்களுடன் ஒருங்கிருந்து சங்கம் சார்ந்து தமிழாராய்ந்தமையை எண்ணினால் அவன் கருத்துக்கும் காட்சிக்கும் சேயனாய் இருந்தான் என்று கொள்வது முரண்பாடுடையதாகும். குடிமக்களுக்கோ அரசுக்கோ குறைநேர்ந்தால் நேரில் சென்று சொல்லலாம் என்னும்படி அவன் இருப்பு இருந்தது. காலப் போக்கில் அவன் அருமையுடையவனாகிவிட்டான். எங்கும் நிறைந்தவன் என்பதும், கருத்துக்கும் காட்சிக்கும் சேயன் என்பதும் அவனுடைய ஆற்றல்கள். ஆயினும், அவன் எளிமையுடையவனே. எனினும், முதற்சங்க காலத்துக்குப் பிறகு இக்கொள்கை மாறுபடலாயிற்று. மக்கள் தம்முடைய தந்தை இங்கே இருக்கிறார் என்று கொள்ளும் கருத்து மாறுபடுவதாயிற்று. ஆயினும் இத்தகைய நிலை இருந்தது என்று கொள்ளுவது கற்பனையன்று. தமிழிலக்கணம் அதனை ஒத்துக் கொள்ளுகின்றது.

தமிழ் மொழியில் தந்தை, தாய் என்ற சொற்கள் முறைப்பெயர்ச் சொற்களாகவே அமைக்கப்பெற்றுள்ளன. எந்தை, நுந்தை; யாய், ஞாய் என்பன என் அப்பன், உன் அப்பன், என் ஆய், உன் ஆய், என்ற பொருளைத் தந்தன. தந்தை தாய் என்பன இவ்வாறன்றி இதே முறைகளைப் பொதுமை தழுவிச் சுட்டும் சொற்களாய் அமைந்தன. அனைத்துயிர்களுக்கும் அப்பனும் அம்மையுமாய் இருப்பவர்கள் உண்டு என்ற கருத்தில் அவர்களைக் குறிக்கவே தந்தை, தாய் என்ற சொற்கள் தோற்றம் பெற்றன. இதனைப் பிற்காலத்தே எழுந்த ***திருக்களிற்றுப் படியார்*** என்ற சாத்திர நூல்,

"அம்மையப்பரே உலகுக்கு அம்மையப்பர் என்றறிக"

என்று கூறித் தொடங்கியது. எனவே, கடவுள் அண்மைக் காட்சியனாக, அனுபவத்துக் குரியவனாக, ஆண்மையும் பெண்மையும் ஆய கோலமுடையவனாக இருந்தமையாலேயே "தந்தை, தாய்" என்ற இருசொற்களும் தோற்றம் பெற்றன. தங்கள் தங்கள் தந்தைதாயர்களை அப்பன் அம்மை என வழங்குவதுதான் முறை என்பதை இத்தகைய முறைமைப் பெயர்களையெல்லாம் அடுக்கிக் கூறும் அப்பரடிகள் தேவாரத்தால் உணரலாம்.

அப்பன் நீ அம்மை நீ ஐயனும் நீ
அன்புடைய மாமனும் மாமியும் நீ
ஒப்புடைய மாதரும் ஒண்பொருளும் நீ
ஒருகுலமும் சுற்றமும் ஓரூரும் நீ
துய்ப்பனவும் உய்ப்பனவும் தோற்றுவாய் நீ
துணையாய் என்னெஞ்சம் துறப்பிப்பாய் நீ
இப்பொன் நீ இம்மணி நீ இம்முத்து நீ
இறைவன் நீ ஏறூர்ந்த செல்வன் நீயே.

(6—309—1.)

அனைத்துயிர்களும் அப்பன், அம்மை என்று குறித்துக் கொண்டாடும் நிலையில் பொருள்கள் இருந்தமையாலேயே அவைகளைக் குறிக்கும் சொற்களாகிய "தந்தை தாய்" என்பவை தோற்றம் பெற்றன.

அடுத்து, அவ்வாறு உலகத்துயிர்கள் எல்லாவற்றுக்கும் அப்பன் அம்மை எனக் குறிப்பிடும் வகையில் வேறு யாரும் இருந்திருக்க லாமே! அவ்வாறிருப்பின் தந்தையர் பலரும், தாயர் பலரும் ஆகலாமே! அவ்வாறு எழும் ஐயங்களுக்குரிய விடையும் தமிழ் மொழியில் காணக் கிடக்கிறது.

"ஒருவன் ஒருத்திப் பெயர்மேல் எண்ணில"

தந்தையும் தாயுமாய் அனைத்துயிர்களும் கொள்ளத்தகும் ஒருமை நிலையுடைய பொருள் ஒன்றே. அவ்வாறே தாயும் ஒன்றே. இவ்வாறே பலவாக எண்ணும் முறையில் தந்தை தாய் அமைப்பு இல்லை. எனவே, அத்தகைய பொருள்கள் தந்தையாய் ஒன்று; தாயுமாய் ஒன்று என்பதைத் தவிர, இவ்வகையில் எண்ணிச் செல்ல வேறு வாய்ப்பில்லை என்பதையும் தோற்றுவித்தது. இனி, இந்நூற்பாவுக்கு மக்களை எண்ணும் எண்ணிக்கையின் வழக்கை உணர்த்த வந்தது என்ற கொள்கை உண்டு. எண்ணுப் பெயர்களில் ஒருமை, பன்மை வருங்காலத்து, ஒருவன், ஒருத்தி, இருவர், மூவர், என எண்ண முடியும். ஒருமை எண்ணும், பன்மை எண்ணும் வருகின்ற காலத்து அத்தகைய விகுதி முடிபும் வினை முடிபும் கொடுத்து அமைத்துக் கொள்வது என்பது,

"னஃகான் ஒற்றே ஆடூஉ வறிசொல் *(488)*
ளஃகான் ஒற்றே மகடூஉ வறிசொல் *(489)*
ரஃகான் ஒற்றும் பகரவிறுதியும்
மாரைக் கிளவி உளப்பட மூன்றும்
நேரத் தோன்றும் பலரறி சொல்லே" *(490)*

என்ற நூற்பாக்களாலேயே அறியக் கிடந்தவைகள்.

ஆயினும், இந்நூற்பா விளக்கும் குறிப்பு ஒன்று உண்டு. "எண் இல" என்பதே அது. ஒருவன் ஒருத்தி என்ற இரண்டைத் தவிர வேறு எண்ணுதற்கு "எண் இல்லை" என்பதன் உட்பொருள் அத்தகு பொருள்கள் இல்லை என்பதே.

தந்தை, தாய், ஒருவன், ஒருத்தி என்ற சொற்களைப் போலவே "ஒருவர்" என்ற சொல்லும் இரண்டாய் நின்ற ஒருவர் என்ற கொள்கையை விளக்க எழுந்ததே. ஆணும் பெண்ணும் தனித்திருக்கும் இரண்டு நிலை இல்லாமல், இரண்டும் இணைந்த நிலையில் அமைந்த கோலம் அவர்கள் அனுபவப் பொருளாக இருந்தமையா லேயே "ஒருவர்" என்ற சொல்லாட்சி அவர்தம் வழக்கில் இருந்து வந்திருக்கிறது. இதனைக் குமரகுருபரர் மிக நுட்பமாக விளக்கி யருளுவதை அவர் பாடிய ***சிதம்பர செய்யுட் கோவை*** 54 ஆம் செய்யுளிற் காணலாம்.

அருவருக்கும் உலகவாழ்வு அடங்க நீத்தோர்க்கு
ஆனந்தப் பெருவாழ்வாம் ஆடல் காட்ட
மருவருக்கன் மதிவளிவான் யமானன் தீநீர்
மண்ணெனும் எண்வகை யுறுப்பின் வடிவுகொண்ட
ஒருவனுக்கும் ஒருத்திக்கும் உருவொன்ருல் அவ்
வுருவை இஃது ஒருத்தன் என்கோ ஒருத்தி என்கோ
இருவருக்கும் உரித்தாக ஒருவர் என்றுஓர்
இயற்சொல் இலதெனில் யான்மற்று என் சொல்கேனே

எனவே தந்தை, தாய், ஒருவன், ஒருத்தி, ஒருவர் என்ற சொல் வழக்குக்களால் கீழ்க்கண்ட உண்மைகள் துணிந்து கொள்ளற் குரியன.

(1) உலகத்துயிர்கள் அனைத்துக்கும் பொதுமையில் அமைந்த அம்மையும் அப்பனும் உண்டு என்பதை அனுபவத்தால் உணர்ந்திருக்கிருர்கள்.

(2) பொதுமையில் நின்ற தந்தை தாய் ஒருவன் ஒருத்தி என ஒரே அமைப்புத்தான் உண்டு. பல தந்தையர்கள் பல தாயர்கள் இருக்க முடியாது.

(3) அம்மையப்பனும் பிரிவற நின்ற தொன்மைக் கோலம் ஒன்று உண்டு என்பதைக் கண்டனுபவித்த காரணத்தால் "ஒருவர்" என்ற சொல் வழக்குத் தோன்றியுள்ளது.

இவ்வாறு, கடவுட் கொள்கை என்று இக்காலத்தே ஆய்வுப் பொருளாக ஆக்கிக்கலாம் விளைவித்துக் கொண்டிருப்பதற்கு மூலமாக நின்ற அப்பொருள் காட்சிக்கணியதாய் அனுபவப் பொருளாக இருந்தது என்ற காரணத்தாலேயே தொல்காப்பியர் அதனைக் கருப்பொருளுள் ஒன்ருக அமைத்துக் காட்டினுர் என்பதை உணர்தல் வேண்டும்.

'தெய்வம்' என்பது அனுபவத்துக்குரிய, அனுபவத்தால் மட்டுமே உணர்ந்து தெளிதற்குரிய கருப்பொருளாக அமைந்துள்ளது என்ற கருத்தை விளக்கும் வகையில் மாணிக்கவாசகப் பெருந்தகை தம் முடைய திருவாசகப் போற்றித் திருவகவலில் "மானுடப் பிறப்பினுள் மாதா உதரத்து" எனத்தொடங்கி, பலவகை இடர்களிற் பிழைத்து வரும் வரலாற்று முறைமையைக் கூறி,

*கல்வி என்னும் பல்கடற் பிழைத்தும்*
*செல்வம் என்னும் அல்லலிற் பிழைத்தும்*
*தெய்வம் என்பதோர் சித்தம் உண்டாகி*
*முனிவு இலாததோர் பொருளது கருதலும்* வரி 38—43

என்று குறிப்பிட்டருளுகின்ருர். 'தெய்வம்' என்பதோர் எண்ணம் தோன்றி, அதனல் குறிக்கப்பெறும் முனிவிகந்ததோர் பொருள் ஒன்று உண்டு எனத் தெளிந்துகொள்வது, கல்விமுதலிய பலவகைக்

கடலிற் சிக்கித் தவித்துப் பிழைத்த பின்னரே என்பதால் இவற்றுக் கெல்லாம் பின்னர் அத்தகைய சித்தம்—கொள்கை—கருத்து அனுபவப் பொருளாகத் தோன்றும் என்பதே.

அறிவால், அளவை நெறிகளால், அளவையால் பொருளை உணர முற்படுகின்ற காலத்தில்தான் எதிர்க்கேள்விகளும், ஐயக் கோட்பாடு களும் மலரும். அனுபவத்தில் அமைந்த பொருளே கடவுள் அல்லது தெய்வம் என்பது உலகப் பொதுமை தழுவியதாய், அனைவரும் ஏற்கும் அடிப்படை உண்மையாகும் என்பதை அறிந்து கொள்ள லாம். இப்பொதுமை வழக்கே தமிழ்வழக்கு. அயல்வழக்காக நிற்பவை கடவுள் இல்லை என்றாற் போல்வன. அளவைநெறியால் நிறுத்தற்பால தொன்று கடவுள்; அனுமான அளவையாலேயே அதனை உணர முடியும் என்பன போன்றவை அவ்வவற்றுக் கேற்ற உண்மைகளைக் கொண்டவைகளாக இருக்கலாம். ஆயினும் வாதத் துக்குரியவை. கடவுள் அனுபவப் பொருளாக அமைந்த கருப் பொருளே என்பது மாறுபாடற்றதாய், வாதத்துக்கு இடமற்றதாய் அமைந்த உலகப்பொதுமை சார்ந்த கருத்து என்பதை உணரலாம். இவ்வுண்மையை நிலைநாட்டவந்த ஞானவாரமுதமுண்ட பிள்ளையார்

"ஏதுக்களாலும் எடுத்த மொழியாலும் மிக்குச் சோதிக்கவேண்டா
சுடர்விட்டுளன் எங்கள் சோதி" (3—312—5)

எனக் குறிப்பிட்டருளுவாராயினர். மிக்குச் சோதிக்கவேண்டா என்பதற்குக் காரணகாரிய இணைப்பு, உவமை, எடுத்துக்காட்டு மொழிகளாகிய ஆகமஅளவைகள் ஆகியவைகளைக்கொண்டு அதிக மாகச் சோதித்துப் பார்க்கக் கூடாது, ஓரளவே அவைகளைப் பயன் படுத்த வேண்டும் என்ற உரை ஒன்று உலகவழக்கில் காணப் பெறு கிறது. ஆனால், ஞானசம்பந்தப் பெருமான் அருளுவதன் கருத்து மிக எளிமையானது என்பதே.

அளவைகளால் மிகுதியும் சோதித்துப் பார்த்து அறிந்து கொள்ளக் கூடிய அருமையுடையவன் அல்லன். அனைத்துயிர்களும் காணுமாறு ஒளிவிட்டு விளங்கும் சோதியாய் நின்றுளன். காட்சிப் பொருளாகவே எங்கிருந்தாலும் காணக்கூடிய எளிமையுடையவ னாகவே அவன் விளங்கிக் கொண்டிருக்கிறான் என்ற பொருள் பெறவே எடுத்து மொழிந்துள்ளதை நன்கு கண்டு தெளியலாம்.

இனி, தந்தை தாய் என்ற இருசொற்களையும் பொதுமை வழக்கில் பயன்படுத்த வேண்டும் என்ற குறிப்பையும், இறைவனையும் இறை வியையுமே அவ்வாறு அமைத்து உலகிற்குக் காட்ட வேண்டும் என்ற கொள்கையையும் சேக்கிழார் மிக நுட்பமாக விளக்கிக் காட் டும் இடம் ஒன்றைச் சான்றாக இங்கே காணலாம்.

"காதலுடன் அணைந்து திருக்கழுமலத்துக் கலந்து வீற்றிருந்த
தங்கள்
**தாதையாரையும்** வெளியே தாங்கரிய மெய்ஞ்ஞானம் தம்பால்
வந்து

போதமுலை சுரந்தளித்த புண்ணியத் *தாயாரையும்* முன்வணங்கிப் போற்றி
மேதகைய அருள்பெற்றுத் திருக்கோலக்கா இறைஞ்ச விருப்பிற் சென்றார்'' (2003)

என்பது சேக்கிழார் வாக்கு.

ஞானவாரமுதம் உண்ட அற்புதநிகழ்ச்சிக்குச் சற்று முன்னே, நிறைபுனல் வாவிக்கரையில் நின்றருளும் பிள்ளையார், மெய்ம்மேற் கண்துளி பனிப்ப வேறெங்கும் பார்த்து அழுவார், *தம்மேலைச் சார்பு உணர்ந்தோ சாரும் பிள்ளைமை தானோ*, செம்மேனி வெண்ணீற்றார் திருத்தோணிச் சிகரம் பார்த்து ''*அம்மே அப்பா*'' என்று அழைத்தருளி அழுதருளினர். அவரே அடுத்தநாட் காலையில் வந்து திருத்தோணி புரத்து இறைவனையும் இறைவியையும் வணங்கித் தொழுது திருக் கோலக்கா செல்ல முற்படுகிறார். முதல்நாள் 'அம்மே அப்பா'' என்று குழந்தை அழுததாகக் குறிப்பிட்டருளும் சேக்கிழார், அடுத்தநாட் காலையில் திருக்கோலக்காவுக்குச் செல்லுமுன் வந்து வணங்கும் போது, அவர் வணக்கத்தைக் குறிப்பிடும் சேக்கிழார் தாதையாரை யும், தாயாரையும் முன்வணங்கிச் சென்றார் என்று கூறி இணைத்துக் காட்டுவதன் மூலம் 'தந்தை தாய்' என இறைவனையும் இறைவியை யும் கொள்ளுவது உலகத்துயிர்கட்கெல்லாம் ஒருமைநிலையில் அப்பனும் அம்மையுமாய் அமைந்துள்ளான் என்ற பொதுமை நிலையைக் குறிப்பிட்டுக் காட்டவே எனத்துணியலாம்.

இதுகாறும் விளக்கிப் போந்தவாற்றால் திருமுறைகளின் பெருமை களாக உள்ள மூன்றனுள் முதற்பெருமையைத் தமிழும் தமிழ் வழக்கும் எனக்கொண்டு, இன்பப்பேற்றை முடிந்த பொருளாகக் கொண்டு இலங்குவதையும் உலகப் பொதுமை தழுவிய சிந்தனையை யும் குறிக்கோட்களாகக் கொண்டு விளங்குவது திருநெறிய தமிழ் எனத் துணியலாம்.

### 2. குனியவலமாம் அடிமை

அருளாளர்களைத் தோற்றுவித்து, அவர்களை உள்நின்று இயக்கி, திருநெறிய தமிழ் வெளிப்படக் காரணமாயிருந்த இறைவனே தன்னை யும் ஒரு அருளாளனாகத் தோற்றுவித்துக் கொண்டு, அவன் அருளிய பாடலும் திருநெறியதமிழ்த் தொகுப்பினுள் ஒன்றாக விளங்குகிறது.

திருநெறிய தமிழை அருளிய அருளாளர்கள் இருபத்தெழுவர். அவர்களுள் ஒருவர் பதினொராந் திருமுறையின் முதற்பாட்டுக்கு உரியவராகிய திருவாலவாயுடையார். சங்கமிருந்து தமிழாய்ந்தான் என்று கூறுவதுபோலவே இருபத்தாறு அருளார்களுக்கு உரிய பேரின்ப அனுபவப்பொருளாக இருந்து, திருநெறிய தமிழை வெளிப் படுத்திய அப்பரம் பொருளே, தாமே முற்பட்டுத் தோன்றி, அருளாளர் களுள் ஒருவராகத் தம்மைத் தோற்றுவித்துக் கொண்டு, திருவருள முதத்தை வழங்கியருள, அதனையும் ஏனைய அருளாளர்களின்

அமுதமொழிகளோடு ஒப்பவைத்து ஏற்றுநிற்கும் பெருமையுடையது திருநெறியதமிழ்.

"தந்தது உன்தன்னைக் கொண்டது என் தன்னைச்
சங்கரா யார்கொலோ சதுரர்
அந்தம் ஒன்றில்லா ஆனந்தம் பெற்றேன்
யாது நீ பெற்றது ஒன்று என்பால்
சிந்தையே கோயில் கொண்ட எம் பெருமான்
திருப்பெருந்துறை யுறை சிவனே
எந்தையே ஈசா உடலிடங் கொண்டாய்
யான் இதற்கு இலன் ஓர் கைம்மாறே" (393)

என்று மாணிக்கவாசக சுவாமிகள் இறைவன் செய்தருளிய அருட்செயலாகிய, கொடுத்துக் கொள்ளும் அற்புதத்தை எடுத்துக் காட்டி, இவ் வணிகத்தில் பேரூதியம் பெற்றவர் தாமே என்றும், இறைவன் இவ்வகையில் முதலை இழந்தும் ஊதியம் பெருதவனுகிவிட்டான் என்றும் கூறியருளினுர். தமிழ்ச்சங்கத்தில் இறைவன் தன்னையும் ஒரு புலவனுகத் தோற்றிக் கொண்டதுமன்றி, மதுரையில் வைகை பெருகிய காலத்து, தம்மை ஒரு வேலையாள் எனப் பதிவு செய்வித்துக் கொண்டான். இவ்வாறு தம்மைத் தமிழோடும் தமிழ்மக்களோடும் இணைவித்துக் கொண்டதன்றித் தம்மை அடியவனுக ஆக்கிக் கொண்டவனுகவும் அவன் காணப் பெறுகிருன்.

இறைவனுக்கு அடியவர்களாக அமைத்துக் கொண்ட அருளாளர்கள் எந்த அளவுக்குத் தம்முடைய அடிமையாந் தன்மையைப் புலப்படுத்திஞர்களோ அதற்கும் மேலாக அடியவர்களுக்கு அடியவனுந்தன்மையை உலகவர் முன்னிலையில் வெளிப்படுத்தியிருக்கிருன் இறைவன். இத்தகு மேன்மையுடைய அடிமைத்திறனைக் காரைக் காலம்மையார் **குனியவலமாம் அடிமை** என்று சிறப்பித்தருளினுர். இதனைத் "தாழ்வெனுந் தகவு" எனவும் சான்ருேர் போற்றுவர். அடியவர்கள் இறைவனை நோக்கி, யாம் உமக்கு அடிமை என்னும் நிலையைப் புலப்படுத்துவதற்காகக் குனிகிருர்கள். அவர்கள் அவ்வாறு தலைவணங்குவதே அவர்களுக்குப் பெரும் வெற்றியைத் தந்து விடுகிறது. அடியவர்கள் வணக்கம் அல்லது அடிமை என்னும் முறையில் சிறிதே குனிய, இறைவன் அவர்களுக்குத் தன்னையே அடிமையாக்கித் தந்து விடுகிருன். ஆண்டான் அடியவனுக்கு அடியவனும் நிலையில் வந்து அமைந்துவிடுகிருன் என்று குறிப்பிடவே "குனியவலமாம் அடிமை" என்றருளினுர்.

***திருக்கயிலைசென்ற தமிழ்:*** பதினென்ருந் திருமுறையில் நாற்பது நூல்கள் உள்ளன. அவை பன்னிரண்டு அருளாளர்களாற் பாடப் பெற்றவை. அவற்றுள், முழுமுதற்பொருளாகிய சிவனைப் போற்றும் நூல்கள் இருபத்தைந்து; முருகப் பெருமானைப் போற்றும் நூல் ஒன்று; விநாயகப் பெருமானைப் போற்றும் நூல்கள் மூன்று; ஏனைய பதினென்றும் சிவனடியவர்களைப் போற்றும் நூல்கள். பதினெரு

சிவனடியவர்களின் பெருமையைப் பேசுவதே பதினொன்ருந் திரு முறையின் சிறப்பு என்றுகூடச் சொல்லிவிடலாம். இவையெல்லா வற்றுக்கும் மேலாக, திருக்கயிலாயத்தில் சென்று சிவபரம் பொருளின் தலைமையில், நாவலாரூரர் எனப்பெறும் நாம் தொழுந் தன்மையாராகிய ஆரூரர் பெருந்தகையால் முன்மொழியப் பெற்று, அரங்கேற்றம் செய்யப்பெற்ற தமிழ்நூல் ஒன்றினை—திருக்கைலாய ஞானவுலாவைத் தன்னகத்தே கொண்ட பெருமையுடையது பதி னொன்ருந் திருமுறை. "ஞாலம் அளந்த மேன்மைத் தமிழ்" என்ற சேக்கிழார் வாக்கினையொப்ப, பாசஞானத்தாலும் பசுஞானத்தாலும் பார்ப்பரிய பரம் பொருளைப் பதிஞானத்தாலே அறிந்து, இருவினை யொப்பு மலபரிபாகம் சத்திநிபாதம் என்ற படிமுறைகள் அமைந்த பின் சென்று சேரலாகும் திருக்கயிலையை—இவையெலாம் பெற்ற பிறகும் இறைவனின் அனுமதிபெற்ற பிறகே அடையலாகும் திருக் கயிலையை இவையாவும் இல்லாமலேயே, அனுமதி கிடைக்கப் பெருமலேயே உள்சென்று பாடக்கூடிய தகுதியைத் *திருக்கயிலாய ஞான உலா* என்னும் தமிழ் தந்தது என்பதை நுட்பமுற நினைத்துக் காணுதல் வேண்டும். இவையெல்லாம் திருநெறியதமிழின் மேன் மையே.

***இறந்தவரை நன்னெறிப் படுத்தல் :*** இனி, இவற்றுக்கெல்லாம் வைரக் குப்பாயம் அமைத்துச் சிறப்பிப்பது போல உலகவர்முன் நடைபெற்ற அருளற்புதம் ஒன்றன் நுட்பத்தை ஓர்ந்து உணர்ந்து கொள்ளுதல் வேண்டும்.

தமிழ்மொழியில் விளங்கும் இரட்டைக் காப்பியங்களுள் இரண் டாவதாக அமைந்த *மணிமேகலையில் சக்கரவாளக் கோட்டமுரைத்த காதை* என்ற ஒரு பிரிவு உண்டு. அப்பிரிவானது சுடுகாட்டுக் கோட்டம் எவ்வாறு சக்கரவாளக் கோட்டமாக அமைக்கப் பெற்றது என்பதன் காரணத்தை விரித்துரைக்கிறது. உடம்பிலிருந்து நீங்கிய ஓர் உயிரை மீளவும் அவ்வுடம்பிலேயே கொண்டுவந்து நிறுத்தி வாழ வைப்பது என்பது எந்த ஒரு தெய்வத்தாலும் இயலாததொன்று என்பதே அக்காரணம். கி.பி. மூன்ரும் நூற்ருண்டளவில் முடியாது என்று கருதப்பெற்ற ஒரு செயல் கி.பி. ஏழாம் நூற்ருண்டளவில் முடியக்கூடிய செயலாக இருந்தது என்பதை நாம் காணமுடிகிறது. அன்றியும், சுந்தரர் பெருமான் முதலைவாயிற் பிள்ளையை அழைத் தமை போன்றதும் திருவருட்செயலே என நாம் ஒருங்கிணைத்துக் காணலாமாயினும், முதலையுண்ட பாலகனுரின் குடும்பத்தார் துயர் தீர்க்கக் கருதி, இறைவனருளை வேண்டி, அவ்வருளால் நிகழ்வித்த செயலே அது. அவ்வாறே திருமருகலில் விடங்கடித்திறந்த செட்டி மகனை எழுப்பியது, அப்பூதியடிகள் மகன் அரவு தீண்டியிறக்க, அப்பரடிகள் எழுப்பிய செயல் ஆகியவைகளைக் கொள்ளலாம். ஆயி னும், எலும்பைப் பெண்ணுக்கிய நிகழ்ச்சியானது தனிச்சிறப்புடைய ஒன்ரும்.

போதம் உண்ட பிள்ளை என்பு பொருகண் மாது செய்ததோ
காதல் கொண்டு சொல்லின் மன்னர் கல் மிதப்ப உய்த்ததோ

*வாய்திறந்து முதலைகக்க மகனை நீர் அழைத்ததோ*
*யாது நம்பி அரிது நன்று எமக்கியம்ப வேண்டுமே!*

என்பது சிவப்பிரகாசரின் ***நால்வர் நான்மணி மாலைப்*** பத்தொன்பதாம் செய்யுள். ஞானசம்பந்தப் பிள்ளையார் எலும்பை வைத்துக்கொண்டு பெண்ணுக்கினார்; அப்பரடிகள் கல்லை வைத்துக்கொண்டு, கடலில் அழுந்திப்போகாமல், அதை மிதக்கவைத்துக் கொண்டே சென்று கரையேறினார். ஆனால் எந்த ஒரு அடிப்படைப் பொருளும் இல்லாமலேயே நாவலூரர் முதலைவாயிலிருந்து பிள்ளையை வரச்செய்தார் என்று பொருள் கூறுவர் சான்றோர். ஆயினும், ஞானசம்பந்தர் பூம்பாவையை எழுப்பிய செயல் வேறுசில நுட்பங்களையும் அடிப்படையாகக்கொண்டது.

*திருஞானசம்பந்தர், திருநாவுக்கரசர், திருநாவலூரர்* என்ற மூவர் முதலிகளும் முறையே சற்புத்திரமார்க்கம், தாசமார்க்கம், சகமார்க்கம் எனப்பெறும் மூவகை நெறிகளில் நின்றவர்கள் என்னும் மரபுவழிப்பட்ட விளக்கம் கூறுவது அனைவரும் அறிந்த ஒன்றே. எனினும், இம்மூவரும் முறையே அறம், பொருள், இன்பம் என்ற உறுதிப்பொருள் மூன்றினையும் தமிழகமரபுக்கு இணைந்த வண்ணம் பொருளுண்மை காட்டியும், பொருள் விளக்கம் செய்தும் மக்களுக்கு விளக்கியருளிய பெருந்தகைகள் என்பதையும் சிந்தித்தல் வேண்டும். இவ்வகையில் ஞானசம்பந்தர் அறம் என்ற அடிப்படை நிலையை விளக்கி, அதன் அடிப்படையில் எழுகின்ற பல்வகைச் சிக்கல்களுக்கும் விளக்கந்தந்து செல்வதைக் காணமுடியும். இக் கருத்தானது சிவஞானபோதமுதற் சூத்திரங்கள் மூன்றனுள் விளக்கப் பெறும்.

***ஒன்றைமற்றொன்றாக்கல்:*** திருஞானசம்பந்தர் செய்தருளிய அருளற்புதங்களுள், ஒன்றை மற்றொன்றாக ஆக்குதல் என்றவகையில் ஆண்பனையைப் பெண்பனையாக ஆக்கியது, பாலையை நெய்தலாக ஆக்கியது, எலும்பைப் பூம்பாவையாக ஆக்கியது என்ற மூன்றும் அமைகின்றன. ஆண்பனையைப் பெண்பனையாக ஆக்குதல் என்ற அருளற்புதம் நிகழ்த்துவதற்குரிய திருப்பதிகம் முதல் திருமுறையிலும், ஏனைய இரண்டு அருள்செயல்களுக்கும் உரிய அருட்பதிகங்கள் இரண்டாந்திருமுறையிலும் அமைக்கப் பெற்றுள்ளன.

*திருஞானசம்பந்தரின் திருப்பதிகங்களின் திருக்கடைக்காப்புக்* களில் பெரும்பான்மையும் காணப்பெறும் பயன் வினையகல வழி செய்வதே. "பாவம் நாசமாகும்" என்றும் "வினைபோயகலும்" என்றும் "சேராவாம் தீவினையே" என்றும் அடிக்கடி மொழிந்தருளுவதைக் காணலாம்.

***அறமுதல்வர் சம்பந்தர்:*** சைவசமயத்தில் சிவபரம் பொருளை அறத்தின் முடிந்த எல்லைக்குரிய பேரின்பப்பரம் பொருளாக நிறுத்தி

யும், அறத்தின் நிகழ்முறைகளை வினைக்கொள்கை எனவகுத்தும், அவ் வினைக்கொள்கையினைச் செயற்படுத்தும் நிலையில் எழும் சிக்கல்களை விளக்கியும், திருவருள்நெறியில் ஈடுபட்டுநின்று விலக்கியும், வினைக்கொள்கையை இறைக்கொள்கையுடன் இணைத்து நிலை நிறுத்தி உயிர்களுக்கு உணர்த்திய பெருமை திருஞானசம்பந்தப் பெருந்தகைக்கு உண்டு.

அவ்வகையில் ஆண்பனையைப் பெண்பனையாக ஆக்குதல் ஒருவகை வினைக்கோட்பாடு. இதனோடு இணைந்த இன்னொருபகுதி யும் உண்டு. அதனை நீக்கும் முறைமைக்கு உதவிசெய்த ஒன்றே வாசிதீரக்காசு அருளுக எனல்.

பனையாக நின்ற உயிர்கள் நற்பிறப்பைச் சார்ந்த உயிர்களே. அறவழியில் தன்னைக் காத்து, தன்னளவில் அறத்தின் வழியிலிருந்து மாறுபடாது இயங்கும் தன்மையாளர்கள் உண்டு. அதே சமயத்தில் தானும் அறநெறியில் நின்று, பிறரையும் அறவழியில் நிறுத்தும் சான் றோர்களும் உண்டு. முன்னவர் குறையிலர் ; பின்னவர் நிறையுடை யவர். அறவழியேயாயினும் முன்னது தன்னலச் சார்புடையது; பின்னது பொது நலச் சார்புடையது. தன்னளவில் தன்னைத் தவறாது அறவழியில் நிறுத்தும் ஒழுக்கம் ஆண்மை என்னில் தற்காத்து நிற்ற லோடு பிறரையும் அறவழியில் நிறுத்திக் காக்கும் ஒழுக்கம் பெண்மை. இறைவனை அறத்தின் மூர்த்தியாகக் கொள்ளின் அவன் நமக்குக் காட் சிப் பொருளாக நின்று அறிவுறுத்துவது ஆண்மையும் பெணமையும் இணைந்ததொன்மைக் கோலத்துடனேயே. ஆண்மையும் பெண்மை யும் இணைந்து நிற்றல் என்பது அறவழியில் தானொழுகியும் பிறரை ஒழுக்கியும் நிற்றல் என்பதே. அவ்வாறே உயிர்களும் நிற்கின்றன. அனைத்துயிர்களும் தம்மளவில் அறவழியில் தவறாது ஒழுகி யும், பிறரையும் அவ்வாறே ஒழுக்கத்தில் நிலைநிறுத்தியும் தம்மை முழுமையுடைய பொருளாகச் செய்து கொள்ள வேண்டும் என்பதே அறம். ஆண்மையும் பெண்மையும், தன்னலமும் பொதுமைநலமும் எனக் கொண்டு, இவற்றின் இணைப்பினால் விளையும் ஒருமை அறமே உயர்ந்த நெறி என்பதை ஆண்மையும் பெண்மையும் இணைந்த ஒருமைத் திருவுருவால்—தொன்மைக் கோலத்தால் நமக்கு அமைத் துக் காட்டுகிறான் இறைவன். ஆயினும், உலகத்துயிர்கள் அனைத் துமே தந்நலம் பொதுநலம் என்ற இரண்டையும் இணைத்துக் கொண்டு வாழ முற்படுகின்றன என்று சொல்லிவிட முடியுமா? இரண்டும் இணைந்த முழுமை அறம் அமைய வேண்டும் என்பதே ஞானசம்பந்தர் இவ்விடத்தே காட்டும் வினைக்கொள்கை. திரு வோத்தூர்த் திருப்பதிகத்தின் உட்பொருளாக நமக்கு அமைத்துக் காட்டுவது ஆண்மையும் பெண்மையும் இணைய நிற்கும் பொதுமை நலப் பெம்மானே, இவைகளும் அவ்வாறே ஆக அருள் செய்யும் என்ற கருத்தையே,

"இடையீர் போகா இளமுலை யாளையோர்
புடையீரே புள்ளி மானுரி

உடையீரே யும்மை ஏத்துதும் ஓத்தூர்ச்
சடையீரே யும தாளே'' (1-54.2)

என்ற திருப்பாட்டினைக் காணலாம். இங்கே, ஆண்பனைகளாக நின்றவைகளே பெண்பனைகளாகக் குலையீனுகின்றன. ஒரே பொருளில் வெளிப்படாது ஒடுங்கியிருந்த ஒரு பகுதியை வெளிப்படுத்திக் காட்டிச் செயற்படுமாறு அமைப்பதன்மூலம் தன்னலவொழுக்குடன் பொதுநலவொழுக்கும் சிறந்து விளங்கினாலன்றி அறத்தின் ஒருமையை அடைய முடியாது அல்லது பொருளானது தன்னுடைய முழுமையை அடைய முடியாது என்ற கருத்தை வெளிப்படுத்திக் காட்டும் நிலையில் அவ்வற்புதத்தை அமைத்துக் காட்டியருளினார். அதனாலேயே அப்பதிகத்தின் இறுதிப் பாடல்

*" குரும்பை ஆண்பனை யீன் குலை ஓத்தூர் "*

என்று தொடங்குவதாக அமைந்தது.

அடுத்து, "பாலை நெய்தல் பாடியது" என்ற அருளற்புதம். இது திருஞானசம்பந்தரின் வரலாற்று வழியில் மூன்றாவது அருளற்புதம். ஞானவாரமுதமுண்டது முதலாவது; இரண்டாவது பொற்றாளம் பெற்றது. திருக்கோலக்காவுக்குச் சென்று வந்தபின் அடுத்துச் செல்வது ஞானசம்பந்தரின் தாய்வழிப் பாட்டனார்தம் ஊராகிய திருநனிபள்ளிக்கு. திருநனிபள்ளி வளமையிழந்து பாலைவனமாக மாறிவிட்டது. ஞானசம்பந்தரின் செலவால் திருநனிபள்ளியானது பயன் பலகொழிக்கும் நெய்தல் நிலமாக மாறிவிட்டது என்பதாம். இதனை ஓர் அருளற்புதச் செயலாகவே சேக்கிழார் கொள்ளவில்லை. ஆயினும் ***திருக்களிற்றுப் படியார்*** என்ற சாத்திரநூல்

"பாலைநெய்தல் பாடியதும்"

என்று எடுத்துக் காட்டுகிறது. நம்பியாண்டார் நம்பிகள் தாம்பாடிய புகழ்நூல்களிற் குறிப்பிட்டுள்ளார்.

"நாதன் நனிபள்ளி சூழ்நகர் கானகமாக்கி யங்கே
போதின் மலி வய லாக்கிய கோன்"

என்று கூறுவது நம்பியாண்டார் நம்பி யருளிய ஆளுடைய பிள்ளையார் திருவந்தாதியின் 17ஆம் செய்யுள்.

அறத்தின் பல்வேறு கூறுகளை எடுத்துமொழிந்து வரையறை செய்தும், விளக்கியருளியும், உயிர்களை நன்னெறிப்படுத்தும் கொள்கையுடைய திருஞானசம்பந்தப் பெருமான் அறத்தின் மூர்த்தியாக அவதாரம் செய்தருளியவர் என்னும் கொள்கையின் அழுத்தம் காரணமாகவே திருநனிபள்ளிச் செயலை அருளற்புதமாகக் கொள்ளவில்லை சேக்கிழாரடிகள். திருநனி பள்ளியானது இயல்பிலேயே—அதன் அடிப்படையியல்பிலேயே அறம் தழுவியதாய் மருதஞ் சார்ந்த நெய்தலாகவே அமைந்த வளமைச் செழுவிடம். வளமையாற் குறையுடையதாகக் கருதப்பெறினும், திருஞானசம்பந்தனாரைத் தாங்கும் திருவயிற்றினைத் தாங்கிய திருவயிற்றைத்

தோற்றுவிக்கக் காரணமாக இருந்த பெருந்தவத்தைச் செய்த தலமே அது. எடுத்துக் காட்டாகக் கொள்ள வேண்டுமாயின் அறநெறி வழுவாத சான்றோனிடம் வறுமை முதலிய சில குறைகள் காணப்படுவனபோல. இவையெல்லாம் அவனுடைய அறநெறி யொழுக்கங்களை மிகுதிப்படுப்பனவேயன்றிக் குறைப்படுப்பனவல்ல. வினைக் கொள்கையாலோ, செயலாலோ குறைபட்ட நிலைமையன்று. மேலும் அத்தகைய அமைப்பும் ஒருதேவையே. ஒழுக்கத்திலிருந்து தவறுதற்குரிய சூழ்நிலைகள் இருந்தும் தவறாதிருப்பது போல, பொன்னை மேன்மேலும் புடமிடுவது போல, திருநனிபள்ளிக்கு வந்த பாலைநிலத் தன்மையானது அதன் இயற்கை வளமையை மேலும் வளப்படுத்த வந்த ஒரு அமைப்பு எனவே கருதுதல் வேண்டும். இது "வறுமையிற் செம்மை" என்றாற்போலவும், அட்டாலும் பால் சுவையிற் குன்றாது என்றாற் போலவும் கொள்ளத்தகுவது. இதற்குச் சான்றோர் வருகையும் சிவசிந்தனையுமே போதுமானவை என்ற கருத்திலேயே, திருஞானசம்பந்தரின் வருகையே போதுமானது என்று சிந்தித்து ஏற்றும், அவர் அருளிய திருப்பதிகக் கருத்தினுள்

"நனமிகு தொண்டர் நாளும் அடிபரவல் செய்யும்
நனிபள்ளி போலும்" (2—220—10)

என்பதைச் சிறப்பாகக் கருதியும் சேக்கிழார் இதனை அருளற்புதமாகக் கொள்ளாமல் அறவழி விளக்கமாகவே எடுத்துக்காட்டி அமைவராயினர்.

மூன்றாவதாக அமைந்தது அங்கம் பூம்பாவை ஆதல் என்ற அருளற்புத நிகழ்ச்சி.

திருமயிலை என்னும் மயிலாப்பூரில் வாழ்ந்த சிவநேசர் என்ற வணிகரின் மகள் பூம்பாவை. திருஞானசம்பந்தரின் பெருமையைக் கேள்வியுற்ற சிவநேசர் தாமும், மனைவியும், மகளும், உடைமையும் ஞானசம்பந்தர்க்கே உரிமையுடையவாகட்டும் எனக்கூறி, அவரை உடையவராகவும் தம்மை உடைமையாகவும் அமைத்துக் கொடுத்து ஆணைசெய்துவிட்டார். பூம்பாவை ஏழாம் அகவை எய்திய போது அரவுதீண்டி இறந்தாள். பூம்பாவையும் ஞானசம்பந்தரின் உடைமையாதலின் அவள் எலும்பையும் சாம்பலையும் ஒருமட்குடத்தில் சேமித்துப் பெண்ணைக் காப்பது போலவே காத்துவந்தார். ஞானசம்பந்தர் திருமயிலைக்கு எழுந்தருளியதும் அக்குடத்தை அவரிடம் ஒப்புத்துவிட்டார் சிவநேசர். திருஞானசம்பந்தர் திருப்பதிகம் பாடியதும் குடத்திருந்த அங்கம் பூம்பாவையாகிறது. ஒவ்வொரு பாட்டு முடியும்போது உருவம் வளர்ந்து வருகிறது. இறுதியாக அத்திருப்பதிகத்தினை முடிக்கும்போது பன்னீராண்டு நங்கையாகத் திருவருளழகு முழுவதும் வாய்க்கப் பெற்று, விளங்கித் தோன்றுகிறாள் பூம்பாவை.

அங்கம் பூம்பாவையாக ஆக்கிய அருளற்புத நிகழ்ச்சியே ஞானவாரமுதமுண்ட பிள்ளையார் நிகழ்த்தியருளிய இறுதி அருளற்புத

நிகழ்வாகும். இதனை ஒட்டியதாய் நிகழ்ந்ததே திருநல்லூர்ப் பெரு மணம்.

அறத்தின் வழிநின்று, சமய உண்மைகளையும், தத்துவக் கோட் பாடுகளையும் இணைத்துக்கண்டு, அவற்றை வாழ்வியல் வழியாகக் கொள்ள முயல்வோர்களுக்கும் விளக்கக் கண்ணுடியாக எடுத்த மைத்துக் காட்டியதே இவ்வற்புதச் செயலாம்.

இவ்வற்புத நிகழ்ச்சியின் மூலம் சிந்தித்து, தேர்ந்து கொள்ள வேண்டிய கருத்துக்கள் பலவுண்டு.

(1) இயற்பகை நாயனுர் போன்ற அருளாளர்கள் தம்மை இறைவனுக்கே அடைக்கலப் பொருளாகக் கொடுத்தவர்கள். இங்கே சிவநேசர் தம்மை இறைவனடியவராகிய திருஞானசம்பந்த ருக்குத் தம்மையும், தம் மனைவி மகளையும், உடைமையையும் அடைக்கலப் பொருளாகக் கொடுத்தவர்.

(2) இவ்வற்புத நிகழ்ச்சியின் மூலம் புகலிகாவலராகிய திருஞான சம்பந்தர் இப்புவனத்தில் தங்கி வாழ்பவர்களுக்கெல்லாம் உண்மை யானதும் உறுதியானதும் ஆகிய ஒரு கொள்கையை அறிவுறுத்துவ தாகச் சேக்கிழார் குறிப்பிட்டருளுகின்ருர். அதற்காக இம்மாநிலத்தில் உள்ளவர்கள் மட்டுமன்று; சைவசமயத்தில் உள்ளவர்கள் மட்டு மன்று; தேவர்களும், பிறசமயத்தில் உள்ளவர்களுங் கூட அங்கே வந்து கூடுகின்ருர்கள்.

(3) இவ்வற்புத நிகழ்ச்சியின் மூலம் திருஞானசம்பந்தர் திரு வருள்நோக்கால் நோக்கி உணர்த்த முற்படும் எண்ணம்,

"இந்த மாநிலத் திறந்துளோர் என்பினைப் பின்னும்
நந்து நன்னெறிப் படுத்திட நன்மையாந் தன்மை
அந்த என்பொடு தொடர்ச்சியாம்"

என்பதே, என்று சேக்கிழார் கருதுகிருர்.

(4) இவ்வற்புதநிகழ்ச்சியால் ஞானசம்பந்தர் நிலைநிறுத்த முற் படும் கருத்துக்கள் இரண்டு.

(அ) மண்ணினிற் பிறந்தார் பெறும்பயன் மதிசூடும் அண்ணலார் தமை அமுது செய்வித்தல்.

(ஆ) அண்ணலாரை முன்னிட்டுக் கொண்டு எடுக்கும் விழாவில் அவர்தம் அடியார் மேற்கொள்ளும் நல் விழாப் பொலிவுகண்டு ஆர்தல்.

மேலே சொல்லப்பெற்ற இரண்டும் "உண்மையாம் எனில் உலகர் முன்வருக" என்பது ஞானசம்பந்தர் அமைத்த ஆணை.

(5) ஒவ்வொரு திருப்பாட்டின் இறுதியிலும் உலகவர்தம் கண்க ளுக்கு முன்பாகப் படிநிலை வளர்ச்சி பெற்று நிறைவுபெறுதல். இது காட்சியளவையை அடிப்படையாகக் கொண்டதே.

"ஆனதன்மையின் அத்திருப்பாட்டினின் அடைவே
போனவாயுவும் வடிவமும் பொலிவொடு நிரம்பி
ஏனை அக்குடத்து அடங்கி முன்னிருந்து எழுவது"

என்பது சேக்கிழார் வாக்கு.

(6) திருப்பதிகத்தினுட் காணப்பெறும் "போதியோ" என்ற சொல் திருவருட்டன்மையுடையது. அது மெய்த்திருவாக்கு, அமுதம் என்ற சொற்களால் போற்றப் பெறுகிறது.

மேலே குறிப்பிடப் பெற்ற ஆறு கருத்துக்களின் அடிப்படை யில் இவ்வருளற்புதத்தை மேலும் விளங்கிக் கண்டு கொள்ளுதல் பயனுடையதாம்.

திருவோத்தூரில் உள்ள ஆண்பனைகள் இறைவனுக்கு உரியன வாக ஆகட்டும் என்று விடப்பட்டவைகளே. ஞானசம்பந்தப் பெருமான் திருவோத்தூருக்கு எழுந்தருளியபோது தொண்டர் ஒருவர் வந்து, ஞானசம்பந்தரை வணங்கி, பெருமானே ! இவ்வூர்ப் பெரு மானுக்காக ஆக்கும் பனைமரங்கள் எல்லாம் மங்கல் உற நீண்டு ஆண்பனையாய்க் காய்க்காமல் போகின்றன. இவ்வாறு யான் இறைவனுக்காக ஆக்கும் பனைகளெல்லாம் ஆண்பனையாய்க் காயா தொழிகை கண்டு சமணர்களெல்லாம் எள்ளி நகை செய்து இகழ் கின்றார்கள் என்று கூறுகின்றார். இச்செய்தியைப் பெரியபுராணம் 2881ஆம் செய்யுளால் தெரியலாம். எனவே, திருவோத்தூரில் ஆண் பனைகளாக நின்றவை இறைவனுக்கு அளிக்கப்பெற்றவைகள் இறைவனுக்கு உரிய அமுதமாக—நிவேதனமாக ஆக்கப்பெற்ற வைகள் தவறுபட்டபோது, அத்தவற்றை நீக்கி, அவை இறைவனுக்கு உரிய நிவேதனப் பொருளாக அமையும் வகையில் ஞானசம்பந்தர் தொண்டாற்றுகிறார். அவ்வாறே வணிகச்செம்மல் சிவநேசனும் அவர் துணைவியாரும், செல்வி பூம்பாவையும், உடைமைகளும் சிவனடியவராக விளங்கிய ஞானசம்பந்தப் பெருமானுக்கு உரிமை யுடையவைகளாகக் கொடுக்கப் பெற்றவைகளே.

மேலே கூறப்பெற்ற இருநிகழ்ச்சிகளிலிருந்தும் இறைவனுக்கோ இறைவன் அடியவருக்கோ ; அமுதமாகவோ நிவேதனமாகவோ அடைக்கலப்பொருளாகவோ அளிக்கப் பெற்றவைகள் தீங் குறுகின்றன என்பது உண்மையானல் உலகமக்கள் இச்செயலைத் தீங்குடையன என்று கொள்ளும் நிலைமையுண்டாகும். இவ்வடிப் படையில் திருவருள் நோக்கத்தினை உணர்ந்த ஞானசம்பந்தர்

"மண்ணினிற் பிறந்தவர் பெறும் பயன் மதிசூடும்
அண்ணலார் அடியார் தமை அமுது செய்வித்தல்

.........................................................................

உண்மையாம் எனில் உலகர் முன்வருக''

என்று சூளுரைப்பாராயினர்.

அடுத்து, இந்நிகழ்ச்சிகளின் மூலமாக வினைக் கொள்கையின் சில பிரிவுகளை விளக்கிக் காட்டியருள முற்படுகின்றார்.

வினைக்கொள்கை நியதியின் வண்ணம் பூம்பாவையின் முன் வினை என்னாயிற்று ? என்ற வினாஎழும்.

அடைக்கலப் பொருளாக அமைத்துக் கொடுத்த அவ்வளவில் அவ்வுயிருக்கு மேல்வரக்கடவதாகிய ஆகாமியம் இல்லையென்பதாய் முடியும். அரவுதீண்டி இறந்த அவ்வளவில் அங்கம்பூம்பாவையின் நிகழ்வினைச் செயல் (பிராரப்தம்) முடிவுபெற்றதாகக் கொள்ளல் பொருந்துவதே. இனி அவ்வுயிரின் சஞ்சிதவினையின் நிலைமை என்ன என்ற வினாவுக்கு உரிய விடை கிடைக்கப் பெறல் வேண்டும். இவ்விடையினை நமக்கு அளிக்கும் நோக்கத்துடனேயே சேக்கிழார்,

''இந்த மாநிலத்து இறந்துளோர் என்பினைப் பின்னும்
நந்து நன்னெறிப் படுத்திட நன்மையாந் தன்மை
அந்த என்பொடு தொடர்ச்சியாம்''

என்று கூறுகின்றார். இச்செய்யுளில் இரண்டிடங்களில் வரும் 'என்பு' என்ற சொற்களுக்குப் 'பிறவி' என உரை அமைத்துக் கொள்ளல் பொருந்துவதாம். அவ்வுரையின் வண்ணம் நோக்கினால்,

''இவ்வுலகத்தில் இறந்தவர்களின் பிறவியை மீண்டும் மேன்மேல் பெருகி வளர்ந்தருவதாகிய நன்னெறியில் செலுத்த வேண்டுமே யானால் அதற்கு வேண்டற்பாலவாய நன்மையாம் தன்மை முழுவதையும், அந்த அப்பிறவியிலேயே தொடர்புறுத்திச் செய்விக்கப்பெறும்'' என்ற உரை விளக்கம் கிடைக்கும்.

இவ்வகையில் அடியவர்களுக்கு அடைக்கலமாகக் கொடுக்கப்பெற்ற பொருளாகிய உயிரானது தம் நிகழ்காலவினையைக் கழிக்குங்கால் அவ்வுயிரின் சஞ்சிதவினை—தொல்வினை முழுவதும் வேறு பிறவி எடுத்துத் துய்த்துக் கழிப்பதன்றி, எடுத்த அப்பிறவியிலேயே அவ்வினையும்—சஞ்சிதவினையும் வந்து கழிவதாகும். அச்சஞ்சிதவினை தீமைகளையும் நன்மைகளையும் கலந்து கொடுக்கும் தன்மையுடையனவேனும், அவை நன்மையாகவே வந்து நின்று கழிந்துபோகும். அவை அவ்வுயிரைத் தாக்குதல் இல்லை. தோன்றிக் கழியும் அவ்வளவே அவ்வினையின் செயலாக அமையும். இதற்கு இவ்வாறுதான் பொருள் கொள்ள வேண்டும் என்பதற்காகவே சேக்கிழார், ஆண்பனைகள் குலையீன்று பெண்பனைகளாயின என்று கூறியபின், அப்பனைகளின் அடுத்தபிறவி அமைப்பு என்னாயிற்று? என்ற வினாவுக்கு விடை கூறுவாராய்,

"பிள்ளையார்தந் திருவாக்கிற் பிறத்தலால் அத்தாலமும்முன்
புள்ள பாசம் விட்டகல, ஒழியாப் பிறவிதனை ஒழித்துக்
கொள்ளும் நீர்மைக் காலங்கள் கழித்துச் சிவமே கூடினவால்"
(பெ. 2886.)

என்ற செய்யுளைக் கூறினர். இச்செய்யுளில் முன்பு உள்ள பாசம் ஒழிந்துபோகுமாறு செய்தல் என்று குறிப்பிடப் பெறுவது சஞ்சித வினையையேயாகும். முன்புள்ள பாசம் விட்டகன்ற பின்னர் இனி எடுக்கவேண்டிய பிறவி இல்லாமலேயே ஒழிந்தது. ஆயினும் சிவனைக் கூடி இன்பந்துய்க்கப் பெறவேண்டிய வளர்ச்சியும் அப் பனைமரங்களாக இருந்த உயிர்களுக்குத் தேவை. இவ்வகையில் சிலகாலம் பயிற்சிபெற்று இறைபரம் பொருளாம் சிவனைக் கூடி இன்புற்றன.

அவ்வாறே அடியவருக்கு அமுதமாக அளித்த-அடைக்கலமாக அளித்த பூம்பாவையின் உயிரும் பிராரப்த வினையின் வண்ணம்—நிகழ்வினையின் வண்ணம் அரவு தீண்டப்பெற்று இறந்தாலும், இறந்த அவ்வளவிலேயே அவ்வுயிரின் சஞ்சிதவினையும் ஒழிந்தது. எனவே, வினைதாம் அனைத்தும் நீங்கப்பெற்றன. எனவே பூம் பாவைக்கு அடுத்த பிறவி இல்லை என்பதாம். இனி, பூம்பாவை இறைவனை அடைந்து, துய்த்து, நலம்பெறவேண்டும். அதனை அவ் வுயிர் சாமுசித்தர் நிலையிலிருந்து, இறைவனைத் துய்த்து இன்பம் பெறக்கூடிய வளர்ச்சியைப் பெற்று இறைவனோடு இரண்டறக் கலக்கும். இவ்வாறு இருந்து பயிற்சிபெறும் முறையைச் சேக்கிழார் "நந்து நன்னெறிப் படுத்திட நன்மையாந் தன்மை" என்று குறிப் பிட்டருளுவாராயினர். அவ்வாறு சாமுசித்தராக அமையும் உயிர் வேறுபிறவியை எய்துமா எனின் இல்லை. இப்பிறவியிலேயே அத் தகைய வளர்ச்சியைப் பெற்று இறைவனோடு இரண்டறக்கலக்க முடியும் என்பதே சேக்கிழார் தெரிவிக்கும் கருத்து பெரியபுராணத் தில் பல அடியவர்கள்—குறிப்பிட்டுச் சொல்ல வேண்டுமாயின், திரு நீலகண்டர் போன்ற பெருந்தகைகள் இறைவனை நேர்நின்று கண்டு, உடல்மாற்றம் முதலியவைகளைப் பெற்றபிறகும், நீண்டநாள் இவ் வுலகில் தங்கி வாழ்ந்து, பின்னரே இறைவனோடு இணையும் பேற் றினைப் பெற்றுள்ளனர். அவ்வாறு தங்குவதன் மூலம் அவர்கள் நிகழ்வினை காரணமாகவோ தொல்வினை காரணமாகவோ தங்கியிருக் கிறார்கள் என்று சொல்வது இயலாது. வினைகள் நீங்கி, பிறவி ஒழிந்த விடத்தும் இறைவனைத் துய்த்து, இன்பம் பெறுதலாகிய அவ்விறுதிச் செயலுக்குரிய—நந்து நன்னெறிக்குரிய நன்மை யாவும் நெறிப்பட விளையும் பேறு பெற வேண்டியவர்களானார்கள். இத்தகைய பயிற் சியை இப்பிறவியிலேயே பெற்றுவிட முடியும் என்பதாம். இதனா லேயே சைவமாம் சமயஞ் சார்ந்தார்க்கு மறுபிறவி இல்லை; இப்பிறவி யிலேயே முத்தி எய்துவர் என்ற கொள்கை வலுப் பெற்றது.

இனி, அங்கம் பூம்பாவையான அருளற்புதநிகழ்ச்சியில் சிவன் அடியவர்களுக்கு அமுதமாக — நிவேதனமாக — அடைக்கலமாக

அளிக்கப்பெற்ற உயிர்கள் வினையகன்று, பிறவிநீங்கப்பெற்று, சாமுசித்தராம் நிலையடைந்து இறைவனை அடையும் தகுதிபெற்றுவிடுகின்றன என்பதை உணர்த்தவே

''மண்ணினிற் பிறந்தார் பெறும்பயன் மதிசூடும்
அண்ணலார்தமை அமுதுசெய்வித்தல்''

என்ற சூளுரையைக் கூறுவதன் மூலம் உலகமக்களுக்கு உறுதிபயக்கும் ஒரு கொள்கையை எடுத்துக்கூறி, சிவனடியவர்களை உண்பித்தல் ஒன்றே இக்காலத்தில் போதுமானது. அதனுல், அச்செயலை மேற்கொள்ளும் உயிர் தன்னுடைய வினைகள் முற்றும் நீங்கப்பெற்று, பிறவி ஒழியப் பெற்று, இறைவனை அடையும் பேறுபெறும் உரிமையுடையதாய் நிற்கும் என்பது தெரியவந்தது.

அடைக்கலமாக அருளப்பெற்ற உயிர் வேறுபிறவி எய்துவதில்லை என்பதைக் கண்முன் கொண்டுவந்து நிறுத்திக் காட்டவே "உலகர் முன் வருக" என்று கூறி, அவ்வாறே செய்தமைத்தும் காட்டினர்.

அடுத்து, அத்தகைய உயிர்கள் இப்பிறவியிலேயே நந்து நன்னெறிப்பட்டு, நன்மையாந் தன்மை எய்துதல் என்பதையும் உலகவர்முன் காட்சியளவையாற் காணுமாறு நிறுத்திக் காட்டுகிறர் ஞானசம்பந்தப் பெருந்தகை. இத்தகு நந்து நன்னெறிப்படுத்தி நன்மையாந் தன்மை எய்துவிப்பதற்காக அவர் கூறியருளும் சூளுரை

''கண்ணினல் அவர்நல்விழாப் பொலிவுகண்டு ஆர்தல்
உண்மையாம் எனில்'' (பெ. 2990)

என்பதே.

இத்தொடருக்கு, இறைவனுடைய நல்ல விழாப் பொலிவினைக் கண்டு அமைதியுறுதல் என்று பொருள் கொள்வது ஒருவகை. அதனுடன், அண்ணலார் அடியவர்தமை இல்லத்துக்கு வரவழைத்து விழாச்செய்தல் என்றும் கொள்ளலாம். திருஞானசம்பந்தர் திருவொற்றியூரிலிருந்து திருமயிலைத் திருக்கோயிலுக்கு எழுந்தருளுகிறர் என்பதைக் கேள்வியுற்ற சிவநேசர் திருவொற்றியூரிலிருந்து திருமயிலை வரையிலும் பந்தர் அமைத்து, நகரமெல்லாம் விழாக்கோலங் கொள்ளச் செய்கிறர்.

சொன்னவர்க்கெலாந் தூசொடு காசு பொன்னளித்தே
இன்ன தன்மையர் எனவொணு மகிழ் சிறந்தெய்தச்
சென்னி வாழ் மதியார் திருவொற்றியூர் அளவும்
துன்னுநீள் நடைக் காவணந் துகில் விதானித்து (பெ-2973.)

என்ற சேக்கிழார் வாக்கால் தெளியலாம்.

இவ்வாறு அடியவர்கள் எழுந்தருளுங்காலத்தே விழா அமைத்தல் ஒருவகை. திருவிழாக்காலங்களில் இறைவனுக்கு விழா எடுக்கும்போது அதையொட்டி எழுந்தருளும் அடியவர்களை இல்லத்தில் வரவேற்று, அவர்களுக்கு விழா எடுப்பதும் ஒருவகை. இவ்வாறு சிவனடியவர்களுக்கு விழா எடுக்கும்போது, அச்சிவனடியவர்கள் திருவருள் மயமாகவே விளங்குகிருர்கள். அவர்களைப் பார்க்கும் எந்த உயிரும் திருவருள் நோக்கத்தால் திருவருளாகவே மாற்றப் பெற்றுவிடுகிறது. இறைவனைத் துய்க்கும் வளர்ச்சியைப் பெற்றுவிடுகிறது என்பது திருஞானசம்பந்தரின் திருவருட் குறிப்பு. இறைவனுக்குக் கொண்டாடப்பெறும் அத்தனை விழாக்களிலும் அடியவர்களைப் பேணி அவர்களுக்கு விழாச் செய்வதே குறிக்கோளாகக் கொள்ளப் பெற வேண்டும் என்பதை வலியுறுத்தும் ஞானசம்பந்தர், அத்தகைய விழாக்களில் விழாநாயகர்களாக விளங்கும் சிவனடியார்கள் திருவருட் பிழம்பாகவே விளங்குகிருர்கள்; அவர்களைக் கண்ணுற் காண்பதே திருவருளை நேர்நிறுத்திக் காண்பதாகும்; திருவருளும் சிவனடியவர்கள் கொள்ளும் விழாக்கோலப் பொலிவும் வேறல்ல என்பதையும் சுட்டிக்காட்டினுர், இதனை, அங்கம் பூம்பாவையாக்கிய அருட்பதிகத்தின் முதல் இரண்டு பாடல்களாகிய,

''மட்டிட்ட புன்னையங் கானல் மடமயிலைக்
கட்டிட்டங் கொண்டான் கபாலீச்சர மமர்ந்தான்
ஒட்டிட்ட பண்பின் உருத்திர பல்கணத்தார்க்கு
அட்டிட்டல் காணுதே போதியோ பூம்பாவாய்''

''மைப்பயந்த வொண்கண் மடநல்லார் மாமயிலைக்
கைப்பயந்த நீற்ருன் கபாலீச்சர மமர்ந்தான்
ஐப்பசி ஓண விழாவும் அருந்தவர்கள்
துய்ப்பனவுங் காணுதே போதியோ பூம்பாவாய்''

என்பனவற்றுள் தெளிவுற விளக்கிக் காட்டியுள்ளார்.

எனவே இறைவனுக்கும் இறைவனடியவர்களுக்கும் அமுதமாக அமைக்கப் பெற்ற—நிவேதிக்கப் பெற்ற—அடைக்கலமாக அருளப் பெற்ற பொருள்களாக அமையும் புண்ணியத் தன்மை வாய்ந்த உயிர்கள் நிகழ்வினையும், தொல்வினையும் நீங்கப் பெற்று, பிறவி நீக்கம் பெற்று, நந்து நன்னெறிப்படும் நன்மை நிலையை எய்துகின்றன என்பதைக் காட்சியளவையால் உலகவர் காண அமைத்துக் காட்டினுர் ஞானசம்பந்தர் எனக் கொள்ளவேண்டும்.

இனி, நந்து நன்னெறிப் படுத்திடுதற்கு உரிய நன்மை நிலையடைந்த உயிர்கள் திருவருளாகவே விளங்கும் என்பதைப் பூம்பாவையின் அங்கமாகிய பூதவுடம்பின் சாம்பலும் என்பும் படிப்படியாய் வளர்ந்து அருளுடம்பாக மாறிநிற்கும் நிலைமையையும் காட்சியளவையில்வைத்தே காட்டுவாராயினர். இதனைப் பூதஉடம்பில் நிறைவு என்னும் தன்மை அமைகின்ற காலத்தில் உண்டாம்

அழகுக்கும் திருவருள் நிறைவு நிலையில் உண்டாம் அழகுக்கும் உள்ள வேறுபாட்டை எடுத்துக் காட்டி விளக்கும் சேக்கிழார்தம் மதுரவாக்கினையும் உணர்தல் நன்றாம்.

எண்ணில் ஆண்டு எய்தும் வேதாப் படைத்தவள் எழிலின் வெள்ளம்
நண்ணும் நான்முகத்தாற் கண்டான்; அவளினும் நல்லாள் தன்பால்
புண்ணியப் பதினாருண்டு பேர்பெறும் புகலி வேந்தர்
கண்ணுதல் கருணை வெள்ளம் ஆயிர முகத்தாற் கண்டார்

என்பது, பூம்பாவையின் பூதவுடலானது முறையே வளர்ச்சி பெற்று, அருளுடலாக மாறிநிற்கும் காட்சியை அனைவருக்கும் காட்டியும் கண்டும் விளங்கிய ஞானசம்பந்தரின் செயலைக் குறிப்பிடும் சேக்கிழார் வாக்காக நின்றது.

மேலே குறிப்பிடப்பெற்ற அனைத்துச் செய்திகளையும் நுனித்து நோக்கித் திருவருளுறைப்பால் கண்டு தெளிந்து நமக்கெல்லாம் தெளிவிக்கும்சுத்த சன்மார்க்கத் திறவுகோல்தனை உலகுக்களிக்க வந்த இராமலிங்கவள்ளல் உயிரனுபவம், அருளனுபவம், சுத்தசிவ அனுபவம் ஆகியவைகள் எப்படி மலருகின்றன என்பதையும், இவ்வாறு மலர்வதற்கெல்லாம் அடிப்படைக் காரணமாக உலகந்தழுவிய பொதுமை நிலையில் விளங்கும் சீவகருணைச் செயல் ஒன்றே; அது பசித்தவர்தம் பசிதவிர்த்தலே என்பதையும், ஞானசம்பந்தர்தம் திருநெறிய தமிழின் மூலமும், அதனை நடத்திக்காட்டி உலகத்தவர்களின் ஐயமெலாந்தீர்த்தருளிய திருவருட் செயலின் மூலமும் தெளிந்தேன் எனக்கூறினர். திருவருட்பா, ஆளுடையபிள்ளையார் அருண்மாலையில்

"உயிர் அனுபவம் உற்றிடில் அதனிடத்தே ஓங்கு அருள் அனுபவம் உறும் அச்
செயிரில் நல் அனுபவத்திலே சுத்த சிவ அனுபவம் உறும் என்றாய்
பயிலு மூ வாண்டினில் சிவைதரு ஞானப்பால் மகிழ்ந்து உண்டு மெய்ந் நெறியாம்
பயிர் தழைந்துற வைத்தருளிய ஞானசம்பந்தன் என்று ஓங்கு சற்குருவே"

முன்புறு நிலையும் பின்புறுநிலையும் முன்னிநின்று உளம் மயக்குறுங்கால்
அன்புறு நிலையால் திருநெறித்தமிழ்கொண்டு ஐயம் நீத்தருளிய அரசே!
என்பு பெண்ணுருவோடு இன்னுயிரது கொண்டு எழுந்திடப் புரிந்து உலகெல்லாம்
இன்புறப் புரிந்த மறைத்தனிக் கொழுந்தே என்னுயிர்க் குயிரெனுங் குருவே!

என்று கூறியருளுவதைக் காணலாம்.

அடியவர்களுக்கு விழா எடுத்து, அமுதம் அருத்துதலால் அவர்கள் அருளாகவே பொலிகிருர்கள். அவர்களை அவ்வாறு காண்பவர்களும் அருளாகவே மாறுகிருர்கள் என்பதையும் பொலிவு கண்டு ஆர்தலால் பூதவுடம்பு அருளுடம்பாக மாறுகிறது என்பதை யும் வள்ளற்பெருமான் ஞானசம்பந்தப் பெருமான் அங்கம் பூம் பாவையாக்கிய அருளிப்பாடுகளிலிருந்து மேற்கொள்ள முடிந்தது என்பதைத் தெளிவுற உணர்ந்து கொள்ளுதல் வேண்டும்.

ஆயினும் இவைகளையெல்லாம் சூளுரைகளாக நிறுத்திக்காட்டி, அற்புதச் செயல்களை நிகழ்த்திய பெருமை "திருநெறிய தமிழுக்கே" உரிய பெருமை எனக்கொள்ள வேண்டும். இவ்வளவும் "குனிய வலமாம் அடிமை" கொண்டாடப் பெற்றதால் விளைந்த மேன்மை யென்றே கொள்ளுக.

### *3. மானிடம் வென்றது*

திருநெறிய தமிழ் என்பது ஒருவகை ***அரசுப்பெருவழி.*** ஏனைய சமய நெறிகள் போல உயிர்கள் இறைவனை அல்லது குறிக்கோட் பொருளைத் தேடிக் கண்டுபிடித்து, சில பயிற்சிகளை மேற் கொண்டு அடையவேண்டும் என்று வகுத்துக் காட்டாமல், இறைவனே தன் னுடைய மனைவி, மக்கள், ஊர்தி ஆகியவற்றுடன் உயிர்களை நாடி வந்து, அவைகளையே தம் வாழ்விடமாகக் கொண்டு, தங்கியிருக்கு மாறு, திருவருளை மக்கள் பால்–உயிர்கள்பால் நெறிப்படுத்தியருளிய பெருநெறி எனக் கொள்ள வேண்டும். இதனுலேயே மாணிக்க வாசகப் பெருந்தகை,

"தேன்பழச்சோலை பயிலும் சிறுகுயிலே இது கேள் நீ
***வான்பழித்து இம்மண் புகுந்து மனிதரை ஆட்கொண்ட வள்ளல்***
ஊன்பழித்து உள்ளம் புகுந்து என் உணர்வது வாய வொருத்தன்
மான்பழித்தாண்ட மென்னேக்கி மணாளனை நீ வரக் கூவாய்"

என்ற ஒருமுறையன்று பலமுறையும் பலவிடங்களில் இவ்வாறே கூறியருளுவதைக் காணலாம்.

பன்னிரண்டாந் திருமுறை எனப் பெறும் பெரியபுராணத்தின் தொடக்கத்தே இறைவன் ஓலைதாங்கிய அந்தணனுகவந்து திருநாவ லூரரை "அடிமை" எனக்கூறி வாதிட்டான். அவனே திருவாரூர்த் தேவாசிரிய மண்டபத்துப் பேரவையில் அடியவர்களுக்கு அடியேன் என ஆவணச்சீட்டு எழுதிக்கொடுத்து ஆட்படுவதைக் காணலாம். அடிமை ஆக்க வந்த ஆண்டவன் அடிமை ஆனுன் என்பதே வரலாறு. அடியவர் பெருமையை ஒத்துக் கொண்டு, அவர்தம் அடியவனுகத் தம்மை எழுதிக்கொடுத்த வரியானது,

"தில்லைவாழ் அந்தணர்தம் அடியார்க்கும் அடியேன்"

என்பது. திருவாரூரில் நின்றுகொண்டு திருத்தில்லையைப் பேசுகிறான். தில்லைவாழ் அந்தணர்கள் எனப்பெறுபவர்கள் அறத்தால் அந்நிலையைப் பெற்றவர்கள். அறத்தால் உயர்ந்து, மற்றெவ்வுயிர்க்கும் செந்தண்மைபூண்டு ஒழுகும் தண்ணளியாளர்கள் முதலாக, அவர்தம் அடியவர்களாய்த் திருவாரூர்ப் பிறந்தார்கள் வரை உள்ள அனைவருக்கும் அடியேன் என்று குறிப்பிடுவதைப் பொருளாகக் கொள்ள வேண்டும். ஆவணச் சீட்டினில் சுருக்கமாக அடிமைஎனத் தன்னை நிறுத்திய பெருமான் அடியவர்களின் பெருமையாகச் சில புகழுரைகளையும் அளிக்கிறான்.

"பெருமையால் தம்மைஒப்பார் பேணலால் எம்மைப் பெற்றார்
ஒருமையால் உலகைவெல்வார் ஊனம்மேல் ஒன்றும் இல்லார்
அருமையாம் நிலையில் நின்றார் அன்பினால் இன்பம் ஆர்வார்
இருமையுங் கடந்துநின்றார்'' (பெ. 342)

என்ற இறைவன் திருவாக்கினைச் சேக்கிழார் எடுத்து மொழிகிறார். அடிமை கொள்ள வந்தவன் அடிமையாக ஆகிறான் என்பதே திருத்தொண்டர் புராணத்தின் முன்னுரையும் முடிவுரையுமாக அமைந்துள்ளது என்பதை உணர்ந்தால் திருநெறிய தமிழின் மேன்மை தெளியலாம்.

இவ்வாறு மேன்மைகள் பலவுங் கொண்டு விளங்கும் 'திருநெறிய தமிழ்' மூலமாக நிற்க, அத்தமிழின் தெளிவாகச் சிவநெறி யெனப்பெறும் சாத்திர உண்மைகள் வெளிப்படுத்தப் பெறுவனவாயின. இவ்வகையில் மெய்கண்ட சாத்திரநூல்கள் வெளிப்பட்டு, மெய்ப்பொருளியல் வரையறை செய்ய முற்பட்டன.

## குரவரில் முன்னின்ற குரு

ஞானவாரமுதமுண்ட பிள்ளையாரை முன்னவராக நிறுத்தி அருளாளர்களின் மரபு தொடங்கப் பெறுவது போன்றே மெய்கண்டாரை முன்னவராக நிறுத்தி மெய்ப்பொருளியல் அறிவாளர்களின் மரபு தொடங்கப் பெறுவது தமிழகம் கண்ட செந்நெறியாகும். இவ்விரு வகை மரபுகளையும் சமயாசாரிய மரபு என்றும் சந்தானசாரிய மரபு என்றும் பிரிவுபடுத்தி உணர்ந்து கொள்ளுதல் முறைமையாகும். மகன்மை நெறி இருவரையுஞ்சாரும். ஞானவாரமுதமுண்ட பிள்ளையார் சுட்டுணர்விறந்து நின்ற பரம்பொருளைச் சுட்டிக்காட்டி, உலகத்தவர்களுக்கெல்லாம் பரம்பொருளை உணர்த்தியருளிய நிலையில் சைவசமயத்தின் முதற்குரவராகக் கருதப்பெற்றார்.

தாயின் அரவணைப்பில் வாழுங் குழந்தையானது அன்பாலும் அன்பின் அடிப்படையில் எழுகின்ற அரவணைப்பாலும் தாயை அறிந்து கொள்கிறது. அப்படித் தாயை உணர்ந்து கொண்ட அக்குழந்தைக்குத் தந்தையை இன்னாரெனச் சுட்டிக் காட்டுகின்ற பெரும் பணியைச் செய்பவள் தாய். தாய் சுட்டிக் காட்டத் தந்தையை உணர்ந்துகொண்ட அக்குழந்தைக்கு, 'குரு' இன்னார் என்று

சுட்டிக் காட்டும் கடமையைச் செய்து முடிக்கிறான் தந்தை. குருவே தெய்வத்தைச் சுட்டிக் காட்டுபவனாகிறான். அன்புநிலையில் நின்றதாய் அறிவுநிலையில் நிற்கும் தந்தையைச் சுட்டிக்காட்டுகின்றாள். அறிவு நிலையில் தந்தையாக நின்றவன் அறிவுநிலையையும் அருள்நிலையை யும் இணைக்கும் பாலமாகநிற்கும் அருட்டந்தையெனப் பெறும் குருவினைக் காட்டிவிடுவதன்மூலம் நின்று விடுகிறான். அன்புநிலையில் நின்று எழுந்து அறிவுநிலையைப் பற்றிய குழந்தைக்கு அறிவை நிரம்புமாறு செய்து, அருளில் அழுத்தும் பெரும்பணியை ஒப்பற நின்ற உயர்நிலையில் செய்து முடிப்பவன் குருவாகவே அமைகிறான்.

அன்பு அறிவு என்ற இருநிலைகளை நிறைவாக்கி, அருள்நிலையில் அழுத்தி, இம்மூன்றன் நிறைவில் பொங்கி எழும் பேரானந்தப் பெருநிலையில் வாழ்விக்கும் முதற்குருவாக விளங்கிய பெருமை ஞான வாரமுதமுண்ட பிள்ளையாருக்கே பொருந்துவதாயிற்று.

திருவருளின்பத்தை முற்றத் துய்த்து, திருவருளாற்றலை வியந்து ணர்ந்து, திருவருணெறியில் நின்று வாழ்ந்த திருவருட் செல்வர்கள் பலர் ஞானவாரமுதமுண்ட பிள்ளையார் காலத்துக்கு முன்பேயும் வாழ்ந்துள்ளார்கள். காரைக்காலம்மையாரைப் போல, திருவருளின் பத்தில் தோய்ந்து, திருவருளின்பத்தில் சேர்ப்பிக்கும் திருநெறிய தமிழ் முறைகளைப் பாடிய அருளாளர்களும் உண்டு. இத்தகைய திருவருட் செல்வர்கள் பலரும் திருவருளால் இவ்வுலகில் வாழும் வாழ் வருளப்பெற்று, இவ்வுலகிற்கு வந்து, திருவருளாணையின் வண்ணம் இவ்வுலகில் திருவருள் வெளிப்பாட்டு நிகழ்வுகள் பலவற்றைச் செய்தருளிச் சென்றவர்கள் என்ற உண்மை, வரலாறு காட்டும் வாய்மையாகும். இவர்களால் அவ்வப்போது செம்மைசெய்யப் பெற்ற திருவருள் நிலத்தில்தான் ஞானவாரமுதமுண்ட பிள்ளையாரின் இவ்வுலகியல் வாழ்வாகிய வரலாறு தழுவிய அருளற்புதம் நிகழ்த்தப் பெறுகிறது. இவ்வகையில் முன்னவர்களாகிய திருவருட்செல்வர் களின் அருளிப்பாடுகளையும் உளங்கொண்டே ஞானசம்பந்தப் பெருந்தகையின் இம்மண்ணுலக வாழ்வு அமைகிறது. ஆயினும் ஞானசம்பந்தப் பெருந்தகையின் வாழ்வில் திருவருளானது அமைத்துக் கொடுக்கும் சிறப்புச் செயல் ஒன்றினை உளங்கொள்ள வேண்டும்.

***காட்சியளவையின் உயர்வு :*** உலகெங்கணும் நிகழ்கின்ற அருளற்புதங்கள் பல உண்டு. அருளற்புதச் செயல்கள் பலவற்றை யும் நிகழ்த்துதற்கு அடிப்படைப் பொருள் ஒன்று இருக்க வேண்டும் என்பதைக் கருதலளவையால் உடன்படுதலும், ஆகம அளவையால் அப்பரம் பொருளின் ஏனைய இயல்புகளை, வடிவ அமைப்புக்களை அறிந்து கொள்ளுதலும் ஆகிய அவ்வளவே முடிந்தது. கருதலளவை யாலும் ஆகம அளவையாலும் அறியப்பெற்ற செய்திகளை—நிகழ்வு களை ஐயங்கொண்டு வினவுவார் பலராயினர். இதற்குரிய சான்று களைக் காரைக்காலம்மையார் திருவாக்குக்களிலிருந்தே காணலாம். எடுத்துக்காட்டாக, ***அற்புதத்திருவந்தாதியுள்,***

அன்றுந் திருவுருவம் காணுதே ஆட்பட்டேன்
இன்றுந் திருவுருவங் காண்கிலேன்—என்றுந்தான்
எவ்வுருவோன் நும்பிரான் என்பார்கட்கு என்னுரைக்கேன்
எவ்வுருவோ நின் உருவம் ஏது.

என்ற 61ஆம் செய்யுளைக் காணலாம். அத்தகைய திருவருள் அற்புத நிகழ்ச்சியை நடத்திக்காட்டி, அதனை நடத்தியவன் யார்? என்ற வினவுக்கு, கருதலளவையையோ ஆகம அளவையையோ சான்ருக நிறுத்திக் காட்டாமல், நேர்நின்று கண்டும், இதோ இவன் என்று சுட்டிக்காட்டியும், காட்சியளவையை முன்னிறுத்திக் கட்டுரைத்த பெருமை ஞானவாரமுதமுண்ட பிள்ளையாருக்கே இயலுவதாயிற்று.

தாவில் சராசரங்களெல்லாம் சிவம் பெருக்கும் பிள்ளையாராக அவதாரம் செய்த ஞானசம்பந்தப்பெருமான் புலன்கடந்த பொருளுண்மையை இவ்வுலகில் நிலைநாட்ட வேண்டும் என்ற கொள்கைக்காகத் திருவருளால் அனுப்பப் பெற்றவர் என்பதை உளங்கொள்ள வேண்டும். ஞானவாரமுதளித்ததுமன்றிப் பொற்ருளம் அளித்ததும், பின்னர் முத்துச்சிவிகை, முத்துப்பந்தர், திருச்சின்னங்கள் போன்றவைகளை அளித்ததும், ஞானசம்பந்தப் பெருமான் சைவசமயத்தை நிலைநாட்ட வந்த ஞானசாரியன் என்பதை இவ்வுலகிற்குத் தெரிவித்தருள வேண்டும் என்பதே திருவருள் வகுத்துத்தந்த செந்நெறி.

**காணலும் காட்டலும்:** ஞானசம்பந்தப் பெருமான் ஞானவாரமுதமுண்ட நிகழ்ச்சியினைத் தந்தையாருக்கு உணர்த்தும் முறையில் "எம்மை இது செய்தபிரான் இவனன்றே" என இசைத்தும், ஆனந்தக் கண் துளி பெய்து உச்சியினில் எடுத்தருளும் ஒரு திருக்கைவிரலாற் சுட்டிக் காட்டியும் அறிவித்தார். பிரமபுரம் மேவினுர் தம்மை அடையாளங்களுடன் தாதையாருக்குச் சாற்றிய அப்பதிகத்தினைச் சேக்கிழார் "மெய்ம்மை மொழித் திருப்பதிகம்" எனச் சிறப்பித்தருளினுர். ஆயினும் தந்தையாராகிய சிவபாதவிருதயர், தாணுவாம் சிவபெருமானைத் தனியே தன்னிருகண்களாற் கண்டும் காட்டியும் தொடர்ந்த ஞானசம்பந்தரைப் போலக் காணுதல் பெற்றிலரேனும் நிகழ்ந்தனவற்றைக் காணும் திருவருளைப் பெற்றவராயினர். இத்தகைய அருளற்புதங்கள் திருத்தோணிபுரத்து இறைவன் திருவருளால் நடைபெறுகின்றன என்பதைத் துணிந்துகொள்ளும் அவ்வளவே சிவபாதவிருதயருக்கு முடிந்தது. அவ்வளவினேடு ஆர்வத்துடன் திருஞானசம்பந்தரின் பின் செல்லும் நிலையைப் பேணி நடந்தார்.

சிவபரம்பொருளைத் தம் கண்களாற் கண்டு துய்த்து, பிறருக்கும் அக்காட்சியளவையாலேயே காட்டுதற்கெனத் திருவருளால் அனுப்பப்பெற்ற சிறிய பெருந்தகையார் ஞானவாரமுதுபெற்ற அருளற்புதத்துக்கு அடுத்த நிகழ்ச்சியில் அனைவருங் காணும் நிலையை உண்டாக்கி வைத்துள்ளார். அம்பிகை அளித்த ஞானம்

அகிலமும் உய்ய உண்ட அருளிப்பாட்டினை அப்பொழுது அங்கண் அணைந்தவர் சிலரே கண்டிருப்பர். அவர்களும் "இப்படி ஒப்பதோர் அற்புதம் எங்குளது?" என்ற அளவில் அதிசயித்துக் கண்ட வர்களேயன்றி, ஆண்டவனை நேர்நிறுத்திக் காணும் நிலை பெற்றாரில்லை. அந்நிகழ்ச்சியைச் செவிமடுத்த அனைவரும், வெளி யேவந்து இறையவன் உமையவளுடன் அருள்தர எய்திய சிவ ஞானக்கன்றினைச் சூழ்ந்துகொள்ளத் தொடங்கி விட்டனர். முன் பேயே நடைபெற்ற அருளற்புதத்தைக் காணும் பேறுபெறாத நாம், இனியேனும் இவர் பின்னே சென்றால் அங்கங்கே நடை பெறும் அருளற்புதத்தைக் காணும் பேறுபெறலாம் எனக் குழுமிச் சென்றனர். அடுத்தநாட்காலையில் ஞானசம்பந்தப் பிள்ளையார், ஆராக்காதலுடன் திருக்கழுமலத்துக் கலந்து வீற்றிருந்த தங்கள் தாதையாரையும், வெளியே தாங்கரிய மெய்ஞ்ஞானம் தம் பால் வந்து போதமுலை சுரந்தளித்த புண்ணியத் தாயாரையும் முன் வணங்கிப்போற்றி, அருள்பெற்று, திருக்கோலக்காவுக்குச் சென்று வழிபட வேண்டும் என்ற விருப்பினால் செல்கின்றார். திருக் கோலக்காவில் திருத்தாளம் அருளப்பெறுகிறது. செய்யசடை வானவர்தம் அஞ்செழுத்தும் எழுதிய செம்பொற்றாளங்களை அருளு கின்றார். இங்கே சேக்கிழார், எல்லோருங்காண இறைவன் வெளிப் பட்டுநின்று இவ்வற்புதத்தை நிகழ்த்தினான் எனக் குறிப்பிடவில்லை யாயினும், பின்னர்வந்த சுந்தரமூர்த்திநாயனார்,

"நாளும் இன்னிசையால் தமிழ்பரப்பும்
ஞான சம்பந்தனுக்கு உலகவர்முன்
தாளம் ஈந்து அவன் பாடலுக்கு இரங்கும்
தன்மையாளனை" (7-62-8)

என்று சிறந்தெடுத்தோதிப் பாடுவதிலிருந்து உலகவர்க்கு இறைவனை நேர் நிறுத்திக்காட்டிய ஞானகுருவே ஞானசம்பந்தர் எனக் கொள்ளவேண்டும்.

*வாய்மூரிற் கண்டு காட்டுதல்* : மேலும், திருமறைக்காட்டில் திருக் கோயில் திருக்கதவம் திறக்கவும் அடைக்கவும் பாடிய அருளற்புத நிகழ்வு அனைவரும் அறிந்த ஒன்றே. வீட்டிற்கு வாயில் எனுந் தொடைசாத்துசொல்வேந்தராகிய அப்பரடிகள் திருக்கதவந் திறக்கப் பாடுகின்றார். ஞானசம்பந்தப் பெருந்தகை அடைக்கப்பாடுகின்றார். காலந்தாழ்த்துத் திறக்கப்பாடு நடைபெற்றது குறித்து, " அரிதில் திறக்கத் தாம்பாட, அடைக்க அவர்பாடிய எளிமை கருதி, நம்பர் திருவுள்ளம் அறியாது அயர்ந்தேன்" எனக்கவன்று, அவ்வுணர்வி லேயே வாய்மை திறம்பா வாகீசர் துயில் கொள்ள, அவர்தம் கனவில் "பொன்னின் மேனி வெண்ணீறு புனைந்த கோலப் பொலி வினோடும்" தோன்றி "வாய்மூரில் இருப்போம் தொடரவா" என்று சொல்லிச் சென்றார். ஆதிமூர்த்தி முன்காட்டும் வேடத்துடனேயே செல்ல, அவரைத் தொடர்ந்து செல்கின்றார் தமிழ்ஈசர்.

நன்மை பெருகு அருள்நெறியே வந்தணைந்து வாகீசர் நல்லூரில் பெருமானை வணங்கும்போது அவர்தம் சென்னிமிசைத் திருவடி சூட்டினான் இறைவன். நனைந்தனைய திருவடி என்தலைமேல் வைத்தார் என்று தூயவெண்ணீறு துதைந்த பொன்மேனியும் தாழ்வடமும், நாயகன் சேவடி தைவரும் சிந்தையும், நைந்துருகிப் பாய்வதுபோல் அன்புநீர் பொழி கண்ணும், பதிகச் செஞ்சொல் மேய செவ்வாயும் உடையராகிய வாகீசப் பெருந்தகையே கூறினும், அவ்விறைவனை நேர்நின்று காட்சியளவையாற் கண்டு துய்த்து மகிழும் பேற்றினை அவருக்கு இறைவன் அளித்தான் எனக் கொள்வதற்கில்லை.

"வாய்மூரில் இருப்போம் தொடரவா" என்று சொல்லிச் சென்றவர் அணித்தே காட்சி கொடுப்பார்போல் கோயில் ஒன்று எதிரே காட்டி, அதனுட்புக்கு மறைந்து விடுகின்றார். பின்னர்ச் சண்பை ஆண்டகையாராகிய திருஞானசம்பந்தர் அப்பர் எங்குற்றது? என்று கேட்டுச் செய்தியறிந்து திருவாய்மூருக்கே வர, நாவுக்கரசரும்,

அழைத்துக் கொடுபோந்து அணியார்போல்
காட்டி மறைந்தார் என அயர்ந்து
பிழைத்துச் செவ்வி அறியாதே
திறப்பித்தேனுக் கேயல்லால்
உழைத்தாம் ஒளித்தால் கதவந் தொண்டு
உறைக்கப் பாடி அடைப்பித்த
**தழைத்த மொழியார் உப்பாலார் தாம் இங்கு**
எப்பால் மறைவது"? (பெ—1550)

என்று கூறுதலும், இதுவரை ஒளித்திருந்த இறைவன் நேரே காட்சி கொடுத்தருளுகிறான். நேர்க்காட்சி தந்தருளிய இறைவனின் ஆடலினைக் கண்டு பணிந்த ஞானசம்பந்தர், அரசுங் காணக் காட்டுகின்றார். இதனைச் சேக்கிழாரடிகள்,

"மாடம் நீடு திருப்புகலி மன்னரவர்க்கு மாலயனும்
நேடிஇன்னங் காணாதார் நேரே காட்சி கொடுத்தருள
ஆடல் கண்டு பணிந்தேத்தி **அரசுங் காணக் காட்டுதலும்**
"பாட அடியார்" என்றெடுத்துப் பரமர்தம்மைப் பாடினார்"
(பெ—1552)

என்று விளக்கியருளினர்.

மேலே எடுத்துக் காட்டப் பெற்ற அருளற்புதத்தை இடைநிறுத்தி, வேறுபாடு கருதுதல் அடாப்பழியாகும். திருவருளானது சில வரையறையினை அமைத்துக் கொண்டு செயலாற்றுகின்றது என்பதை உணர்ந்து வணங்குதல் ஒன்றே வாய்மையாகும். இவ்வகையில் ஞானபோனகராகிய புகலிவேந்தர் காட்சியளவையொன்றுனே புலன்கடந்த பொருளுண்மைகளை நிலைநாட்டவும், அப்பொருள்களைப் பிறரும் காட்சியளவையானே கண்டு களிக்கவும், உய்தி பெறவும் இவ்வுலகை நோக்கி எழுந்தருளிய சிறிய பெருந்தகை

என்பதை உணர்தல் வேண்டும். இவ்வகையில் ஞானசம்பந்தப் பிள்ளையார் குருவெனக் கருதப் பெற்ருர். அவர்தம் மொழியாம் திருப்பதிகமும் குருமொழி எனக் கொள்ளப் பெற்றது.

*குருமொழியே முதன்மொழி :* மேலே கூறப் பெற்ற இக்கருத்தினை உளங் கொண்டுநோக்கினுல் திருமுறைத் தொகுப்புக்கு இதுவும் ஒரு காரணமாகக் கொள்ளுதல் இழுக்கின்று என உணரலாம். திருஞானசம்பந்தர், திருநாவுக்கரசர் என்ற இருபெருஞ் சான்ருேர்களும் ஒரே காலத்தில் இறைவனைப் பாடிப்பரவிய பெருமைக் குரியவர்கள் என்பது வரலாற்று வாய்மை. அருட்பெருகு தனிக்கடலும் உலகுக் கெல்லாம் அன்புசெறி கடலும் என ; ஓங்கும் பொருட்சமய முதற் சைவநெறியானது தான்பெற்ற புண்ணியக்கண் இரண்டென ; புவனம் உய்ய நஞ்சுண்ட கண்டன்தன் திருவருளும் அகிலம் எல்லாம் ஈன்ருள்தன் திருவருளும் என இவ்வாறு ஒரு காசின் இருபக்கம் போல் இணைந்து, சைவசமயம்பரப்பிய சான்ருேர்களே இருவரும். ஆயினும், திருமுறைத் தொகுப்பு என்னும் திருவருள் நிகழ்ச்சியில் ஞானசம்பந்தப் பெருந்தகையின் திருப்பதிகங்கள் முன்னுகவும் நாவுக்கரசரின் திருப்பதிகம் அதனை யொட்டியும் அமையக்காரணம் என்ன ? என வினுத் தொடுப்பது விலக்கப்பாட்டிற்குரியதன்று. காரணங்கள் பலவற்றுள்ளும் அனைவரும் ஒப்பநேரும் காரணம் ஒனிறினைத் திருமுறைக் கலைஞர் க. வெள்ளைவாரணனுர் அவர்கள் எழுதியருளியுள்ளார்கள். சைவநாயன்மார் வரலாறுகளையும் திருப்பதிய வரலாறு, பொருள் ஆகியவைகளையும் நுட்பமாக எடுத்துக் காட்டி இவ்வுலகை வாழவைத்த பெருமை சேக்கிழாருக்கு உண்டு என்ருல் சேக்கிழாரையும் அவரை உள்ளிட்ட நாயன்மார்களையும் பற்பல கோணங்களில் மரபு முறை பிறழாது ***பன்னிரு திருமுறை வரலாறு*** என்ற நூலின் மூலம் உலகுக்கு எடுத்து வழங்கிய பெருமை திருவருள் நிறை முது புலவர் க. வெள்ளைவாரணனுர் அவர்களையே சாரும். ஞானசம்பந்தர் பெருந்தகையும் நாவுக்கரசர் பெருமானும் அளவிலாப் பெருமையுடையவரேயாயினும் திருவருட் சிவப்பேறு எனப்பெறும் பேரானந்தப் பெருவாழ்வுக்குச் சென்ற அடைவை அடிப்படையாகக் கொண்டு—இவ்வுலகை நீத்து முத்தியை எய்திய கால அடைவை அடிப்படையாகக் கொண்டு, ஞானசம்பந்தர் திருப்பதிகங்களை முன்னுகவும் நாவுக்கரசர் திருப்பதிகங்களைப் பின்னுகவும் தொகுத்தருளினுர்கள் என்று காரணங்காட்டியமைதி கூறியுள்ளார்கள். அது மறுக்கற்பாலதன்று ஆயினும், ஞானசம்பந்தர் முதற் குருநாதனுக நின்ற பெருமையுடையவர் என்பதையும் இணைத்துக் காணலாம்.

பிற்காலத்து வந்த அருளாளர்கள் பலரும் ஞானசம்பந்தரைக் குருவாகவே கொண்டு சிவபரம் பொருளைத் தெளிய முற்படுவாராயினர். அண்மைக்காலத்தே வாழ்ந்த அருட்பெருஞ்சோதி வள்ளற் பெருமானும் ஞானசம்பந்தப் பெருமானைக் குருவாகவே கொண்டு வாழ்ந்த பெருந்தகை என்பதை இங்கே நினைவு கூர்தல் பயனுடையதாகும். இராமலிங்க அடிகள் தாம்பாடிய ஆளுடைய பிள்ளையார்

அருள்மாலையில் உள்ள பத்துப்பாக்களில் ஏழு பாக்களின் இறுதியிலும் 'குருவே' என்ற சொல்லைப் பயன்படுத்துகின்றார். சிவகுருவே, சற்குருவே, சற்குருமணியே, உத்தமசுத்த சற்குருவே, என் உயிர்க்கு உயிரெனும் குருவே என்ற தொடர்களைப் பயன் படுத்துகிறார். இவற்றுக்கெல்லாம் மேலாக, திருஞானசம்பந்தரே முதற்குரு என்று கருதும் வகையில் கீழ்வரும் அருட்பா வொன்றினை அழகுற அமைத்துள்ளார்.

"பொத்திய மூல மலப்பிணி தவிர்க்கும் பொருள் அருளனுபவம் அதற்குப்
பத்தியம் உயிரின் அனுபவம் இதனைப் பற்றறப் பற்றுதி இதுவே
சத்தியம் என என்தனக்கு அருள்புரிந்த தனிப்பெருங்கருணை என் புகல்வேன்
முத்தியற் சிவிகை இவர்ந்து **அருள் நெறியின் முதலரசு இயற்றிய** துரையே

என்பது அப்பாட்டு.

அருள்நெறியின் முதலரசு இயற்றிய துரையாக அவர் சிறப்பிக்கப் பெறவேண்டும் என்ற காரணத்தாலேயே இறைவனும் அவருக்கு முத்துச்சிவிகை, முத்துப்பந்தர் முத்துக்குடை, முத்துச் சின்னம் முதலியன கொடுத்தருளினான், என்பதை உலகமக்களுக்கு உணர்த்துவார் போல இராமலிங்க அடிகள் கூறியருளுவாராயினர்.

இக்கருத்துப் பற்றியே ஞானசம்பந்தப் பெருமானை முருகனின் அவதாரமாகச் சிலர் குறிப்பிட்டருளினர். செம்மான் மகளைத் திருடுந் திருடன், பெம்மான் முருகன் பிறவான் இறவான் என்பது உண்மையேயாயினும், சிவபரம் பொருளாகிய தந்தைக்கும் ஞான உபதேசம் செய்த ஞான பண்டிதன் என்ற காரணத்தால், சிவபாத விருதயருக்கும் இறைவன் இவன் எனக் காட்டி உபதேசம் செய்த ஞானசம்பந்தப் பெருந்தகையை முருகன் அவதாரம் எனக் கூறலாயினர் எனக் கொள்ள வேண்டும்.

**ஒருமையில் இருமை:** சிவபரம் பொருளை உள்ளிட்ட அனைத்துப் பொருள்களின் உண்மைத் தன்மையை—பொருளுண்மையை அறியும் நெறியால், காட்சியளவையை உள்ளிட்ட அளவைநெறியால் உலகில் நிலைநிறுத்திக் காட்டி, விளக்கம் கூறி, உலகை வாழ்விக்க வந்த பெருந்தகையே ஞானசம்பந்தர். அதே பரம்பொருளை அடையும் நெறி இது எனக் காட்டி உலகை வாழ்விக்க வந்த பெருந்தகை வாகீசப் பெருந்தகை. அறியும் நெறியையும் அடையும் நெறியையும் இணைத்து உணர்த்தி உலகைவாழ்விக்கக் கருதிய திருவருள் இருவரையும் ஒருங்கிணைத்துப் பணிகொள வைத்தது என உணர்தல் சாலப் பொருந்துவதொன்றும். இவ்வகையில் ஞானமும் செயலும் இணைந்து தொண்டாற்றின எனக் கொள்ளல் வேண்டும். செயற்பாட்டு முறைக்கு ஒத்துவராத அறிவு பயனற்றது. அறிவுடன் இணையாத செயற்பாட்டு முறை குருட்டுத்தன்மையாகும். இவ்விரு குறைகளை

நீக்கி, தமிழ் உலகில் வாழ்ந்த, தமிழ்ச் சான்ருேர்களாகிய இரட்டைப் புலவரே போன்று, சிவபரம் பொருளை உலகத்துயிர்கள் அறியவும் அடையவும் இணைந்து தொண்டாற்றிய பெருந்தகைகளே ஞானக் கன்றும் தமிழ் நாவரசும். முன்னவர் குருவாக நின்ருர், பின்னவர் கடமைப்பாட்டாளராக நின்ருர். எந்த ஒன்று இல்லையாஞலும் குறையே. இவ்வருமையை உணர்ந்த சிவப்பிரகாச அடிகள்

"வீட்டிற்கு வாயில் எனுந்தொடை சாத்து சொல் வேந்த பொது
ஆட்டிற்கு வல்லன் ஒருவற்கு ஞான அமுது உதவி
நாட்டிற்கு இலாத குடர் நோய் நினக்கு முன் நல்கினும் என்
பாட்டிற்கு நீயும் அவனும் ஒப்பீர் எப்படியினுமே"

என்று தம் **நால்வர் நான்மணி மாலையில்** குறிப்பிட்டருளுவாராயினர்.

இவ்வாறு அறியும் நெறியாலும் அடையும் துறையாலும் தத்தம் தொண்டினைச் செய்து, உலகத்துயிர்களை வாழவைத்த இருபெருங் குரவர் தம் திருமுறைகளையும் முதல் ஆறு திருமுறைகளாகவும், பின் வந்த சுந்தரமூர்த்தி நாயனருடைய திருமுறையை ஏழாந்திருமுறை யாகவும் தொகுத்தருளிஞர்கள். இத்தொகுப்பு நம்பியாண்டார் நம்பியால் தொகுக்கப் பெற்றது எனக் கருதுதலே மரபு.

## திருமுறைக்காலமும் மெய்கண்டாரும்

நம்பியாண்டார் நம்பிகள் காலத்துக்குப் பின் திருமுறைகளைத் தொகுத்தல் என்ற வரலாற்று நிகழ்வு ஒன்று நடைபெற்றிருக்க வேண்டும். பதிஞெராந் திருமுறை வரையிலும் நம்பியாண்டார் நம்பி யே தொகுத்திருக்க வேண்டும் என்ற கருத்தினைக் கொள்ளும் திரு முறைச்செல்வர். க. வெள்ளைவாரணஞர் அவர்கள் நம்பியாண்டார் நம்பிகள் தம்முடைய பாடல்களையும் தாமே திருமுறைகளாகத் தொகுத்துக் கொள்வாரா? என எழுப்பப்பெறும் விஞவுக்கு விடை யாக மன்னனுடைய வேண்டுகோள் காரணமாக அவைகளையும் இணைத்துப் பதிஞெராந் திருமுறை தொகுக்கப் பெற்றது என்று விளக்கமளிக்கிருர்கள். ஆயினும், நம்பியாண்டார் நம்பிகள் கி.பி. ஒன்பதாம் நூற்ருண்டின் இறுதியும் கி. பி. பத்தாம் நூற்ருண்டின் முதலும் ஆகிய காலத்தில் வாழ்ந்த பெருந்தகையாதலின், பன்னிரண்டாம் நூற்ருண்டினராகிய சேக்கிழார் பாடிய திருத்தொண்டர்புராணம் திருமுறைகளுள் ஒன்ருகச் சேர்க்கப் பெற்ற நிகழ்ச்சியானது பின்னர் உண்டாகியிருக்க வேண்டும் என்று சான்ருேர் கொள்வர்.

மேலே கூறப் பெற்ற பன்னிரு திருமுறைகளும் தொகுக்கப் பெற்ற காலத்துக்குப் பின்னரே மெய்கண்டார் வருகிருர். மெய் கண்டாரின் காலம் கி. பி. பதின்மூன்ரும் நூற்ருண்டின் முற்பகுதி எனச் சித்தாந்த வித்தகர் ஔவை சு. துரைசாமிப்பிள்ளையவர்கள் அண்ணுமலைப் பல்கலைக் கழக வெளியீடாகப் பதிப்பித்த **சிவஞான**

*போதச் சிற்றுரையில்*, எழுதிய மெய்கண்ட தேவர் வரலாற்றில் நன்கு விளக்கியுள்ளார்.

சிவபரம் பொருள் நந்தியெம் பெருமானுக்கு உபதேசித்த சைவ சித்தாந்த மெய்ப் பொருளுண்மையை நந்தியெம் பெருமான் சனற் குமாரருக்கு உபதேசிக்க, அவர் சத்தியஞானதரிசனிகளுக்கு உபதேசிக்க, அவர் பரஞ்சோதியாருக்கு உபதேசிக்க, அவர் திரு வருள் ஆணையால் ஈராட்டைக் குழவியாய்த் தெருவில் விளையாடிக் கொண்டிருந்த சுவேதவனன் என்ற குழந்தைக்கு உபதேசம் செய்து, தன் குருவின் பெயராகிய சத்தியஞான தரிசனிகள் என்பதைத் தமிழில் 'மெய்கண்டார்' என அருள் நாமம் அமைத்துச் சென்றுர் என்பது வரலாறு. இவ்வகையில் நந்தியெம் பெருமானை அகச்சந்தான முதல்வராகவும், மெய்கண்டாரைப் புறச்சந்தான முதல்வராகவும் கொண்டு சைவசித்தாந்தத் தெளிபொருளுண்மைகள் விளக்கப் பெறுவன வாயின என்பது சான்றோர் பலரும் ஒப்ப உணர்த்தும் கருத்து.

அடுத்து, மெய்கண்டார் தமக்கு உபதேசமாகக் கிடைத்த சைவ சித்தாந்த சாத்திர உண்மையினைத் திருவெண்ணெய் நல்லூர்ப் பொல்லாப் பிள்ளையாரின் திருமுன்னர் அமர்ந்து, நிட்டை கூடி, தாம் உபதேசமாகக் கேட்டதைச் சிந்தித்துத் தெளிந்து, உலக மக்களுக்குச் '*சிவஞானபோதம்*' என்னும் நூலாக வெளிப்படுத்தி யருளினுர்.

மெய்கண்டார் தாம் திருவருளால் உபதேசமாக அறியப் பெற்ற ஒன்றைச் *சிவஞானபோதம்* என்ற நூலாக வெளிப்படுத்தினுர் என்ற கொள்கையில் அறிஞர்களிடையே கருத்து வேறுபாடு ஏதும் இல்லை. ஆயினும் ***சிவஞானபோதம்*** என்ற இந்நூல் வடமொழியில் உள்ள இரெளரவ ஆகமத்தில் பாவவிமோசனப் படலத்தில் அமைந்த பன்னிரண்டு சூத்திரங்களின் மொழி பெயர்ப்பாக அமைக்கப் பெற்றுள்ளது என்ற கொள்கை சிவஞானபோதத்துக்கு மாபாடியம் அருளிய சிவஞானமுனிவரை உள்ளிட்ட அறிஞர் பலரும் எடுத்துக் காட்டிய ஒன்று. "*திருமுறைத் தெளிவே சிவஞானபோதம்*" என்ற *இந்நூல் அதனை மறுக்கவோ ஏற்கவோ எழுந்த நூலன்று*, அது ஒரு கொள்கை. தமிழகச் சான்றோர்கள் மேற்கொள்ளும் மரபு வழியினை உட்கொண்டு, பன்னிருதிருமுறைகளிலிருந்து பிழிந்தெடுக்கப் பெற்ற தெளிவாகச் '*சிவஞானபோதம்*' விளங்குகின்றது என்ற உண்மை யைத் தெளியவைப்பதே இந்நூலின் நோக்கம். இவ்வகையில் தமிழகச் சான்றோர்கள் மேற்கொள்ளும் முறை ஒன்றினை எடுத்துக் காட்டுதல் நன்மை பயப்பதாகும்.

## தமிழகமரபும் தமிழகச் சமய மரபும்

சங்க இலக்கியங்களை மேல்கணக்கு என்றும் கீழ்க்கணக்கு என்றும் இருவகைகளாகப் பிரித்துள்ளனர். மேல்கணக்கில்

பதினெட்டு நூல்கள். கீழ்க்கணக்கு நூல்களும் பதினெட்டே. மேல் கணக்கு நூல்களும் எட்டுத்தொகை என்றும் பத்துப்பாட்டு என்றும் இருவகைகளாகப் பிரிந்து இயங்குகின்றன. மேல்கணக்கு என்பவை யாவும் அக்கால மக்களுடைய வாழ்வியல் நிகழ்ச்சிகள். தனிமனி தனின் வாழ்வியல் நிகழ்வுகள் பலவும் இணையத் தொகுக்கப் பெற்ற வைகளே எட்டுத்தொகை நூல்கள். தனிமனிதன் சமூக இயல்பின னுகிச் சமூகத்தோடு இணையநின்று, வாழ்ந்து காட்டிய வாழ்வியல் நிகழ்வுகளை வெளிப்படுப்பவைகளே பத்துப் பாட்டுக்கள். இவ்வாறு சான்றோர்கள் அல்லது சமூகத்திற் சிறந்து நின்றவர்கள் வாழ்ந்து காட்டிய வாழ்வியல் நிகழ்வுகளிலிருந்து, வாழ்வியற் சட்டங்கள், வாழ்வியல் அறங்கள், வாழ்வியல் மேல் வரிநியதிகள் வடிகட்டிப் பிழிந்து எடுக்கப் பெறுகின்றன. அத்தகைய அறக்கோட்பாடுகளே- வாழ்வியல் நிகழ்வுகளிலிருந்து எடுக்கப் பெற்ற அறச்சட்டங்களே 'கீழ்க்கணக்கு' எனப்பெறுவனவாயின. இதனை அப்பரடிகள்

> தொழுது தூமலர் தூவித் துதித்துநின்று
> அழுது காமுற்று அரற்று கின்ருரையும்
> பொழுது போக்கிப் புறக்கணிப்பாரையும்
> எழுதுங் ***கீழ்க்கணக்கு*** இன்னம்பர் ஈசனே (*5—135—8*)

என்று குறிப்பிட்டுக் காட்டுவராயினர். மக்கள் வாழ்ந்துகாட்டிய, தனிமனிதனுக நின்றும் சமூகத்தோடு இணைந்தும்வாழ்ந்துகாட்டிய வாழ்வியல் நிகழ்வுகள் மேல்கணக்கு ஆயின; அவற்றிலிருந்து பிழிந்து எடுக்கப் பெற்ற தெளிவே, இலக்கியத்திலிருந்து எடுபடும் இலக்கணம் என்ருற்போல, எள்ளினின்று எடுபடும் எண்ணெய் என்ருற்போலக் கீழ்க்கணக்கு ஆயிற்று. எனவே, கீழ்க்கணக்கு என்ற வகையில் காணப்பெறும் பதினெட்டு நூல்களும் வாழ்வியல் அறக் கோட்பாடுகளே எனக் கொள்ள வேண்டும்.

மேலே குறிப்பிடப்பெற்ற முறையில்தான் தமிழ்ச்சான்ருேர்கள் எந்த ஒரு உண்மையையும் தெரிந்துகொள்வதை மரபாகக் கொண்டிருந்தார்கள் என்பதை "யாதும் ஊரே யாவருங் கேளிர்" என்று தொடங்கும் புறநானூற்றுச் செய்யுளில், கணியன் பூங்குன்றனுர்,

> "தீதும் நன்றும் பிறர்தர வாரா
> நோதலும் தணிதலும் அவற்ருேரன்ன"

என்பனவாய வாழ்வியல் அறங்களை யெல்லாம் "திறவோர் காட்சியில் தெளிந்தனம் ஆதலின்" என்று குறிப்பிட்டுக் காட்டுவதிலிருந்து தெளியலாம். இத்தகு காரணம் பற்றியே ஆசிரியரும் 'கணக்காயர்' எனப்பெற்ருர். இதன் பொருளை விளக்குவார் போல நச்சினர்க்கினியர் ஆசிரியரைக் 'கற்கப்படுவோர்' என்ற சொல்லாற் குறிப்பிட்டார். அறச்சட்டங்களை வாழ்வியல் நெறிகளாக அமைத்து வாழ்ந்து காட்டுகிறவனே கணக்காயன். அவனுடன் தங்கியிருந்து, அவன் வாழ்ந்து காட்டும் வாழ்வியல்களிலிருந்து வாழ்வியல்

அறங்கள் இன்ன தன்மையன என்பதும், வாழ்வியல் அறங்களைக் கடைப்பிடிக்கும் முறை இத்தகையது என்பதும் மாணுக்கன் தெரிந்து கொள்ள வேண்டியவன். ஆசிரியனிடம் சில நூல்களைப் படிப்பது, அவைகளிலும் சிலபகுதிகளைப்படிப்பது என்பவை வாழ்வியல் அற முறைக்கு ஒவ்வாதன. ஆசிரியனையே நூலாகக் கற்கவேண்டும் என்ற காரணத்தால்தான் நச்சிஞர்க்கினியர் ''கற்கப்படுவோன்'' என்று குறிப்பிடடார்.

வாழ்வியல் வரலாற்று நிகழ்வுகளிலிருந்து வாழ்வியல் அறக் கோட்பாடுகள் எடுக்கப் பெறுகின்றன. பின்னுள்ளோர் பின்னர் அதனை வாழ்வியல் அறமாக வைத்துக்கொண்டு செயல்படுத்த முற் படுகிருர்கள். தமிழகத்தைப் பொறுத்தவரையில் அறச் சட்டங்கள், அறக் கோட்பாடுகள் அறிவாராய்ச்சியால் எழுந்தவை அல்ல ; வாழ் வியல் நிகழ்வுகளிலிருந்து எடுக்கப் பெற்றவைகளே. இவ்வகையில் அருளாளர்களின் அருளியல் அனுபவங்களை அடிப்படையாகக் கொண்டே அருளியல் சார்ந்த கோட்பாடுகளையும் பிழிந்து தெளி வாக எடுத்தல் வேண்டும். அவ்வாறில்லையாயின் அறக்கோட் பாடுகள் வாழ்வியல் நடைமுறைக்கு ஒவ்வாத கருத்துக்கள் என்பன வாகக் கருதப்பெற்று விடும் என்பதுமட்டுமன்று ; தமிழக மரபும் அன்று என்பதை உணர வேண்டும்.

தமிழகத்தில் பல தத்துவக் கொள்கைகள் சிறப்பிடம் பெற முடியாமைக்கு இதுவே அடிப்படைக் காரணம் என்பதை வரலாற் றுக் கண்கொண்டும், தத்துவநெறியியல் அறிவுகொண்டும், வாழ் வியல் கண்ணேட்டத்தின் துணைநின்றும் அறிந்தால் தெளிவுற உணர முடியும்.

மேலே கூறப்பெற்ற அடிப்படையில் பன்னிரு திருமுறைகள் அருளாளர்களின் அருளியலனுபவங்களை விளக்கும் வாய்மொழி களாகவும், மெய்ப்பொருளியற் கருத்துக்களை நேர்நிறுத்திக் காட்டும் அளவையியல் மெய்ம்மை மொழிகளாகவும், அவைகளையெல்லாம் கடைப்பிடித்து வாழ்ந்து காட்டிய வரலாற்று முறையமைந்த மேல் கணக்கு நூல்கள் எனக் கொள்ள வேண்டும். பன்னிருதிருமுறைகளை அருளியல் சார்ந்த மேல்கணக்கு நூல்கள் எனக் கொள்வோமாயின் *'சிவஞானபோதம்'* பன்னிருநூற்பாக்களாய், மேல்கணக்கு நூல்க ளாகிய பன்னிரு திருமுறைகளின் தெளிவாய் எடுத்துக் கொடுக்கப் பெற்ற அருளியல் சார்ந்த கீழ்க்கணக்கு நூல் என்று துணிவது தமிழகத்தின் மரபுவழிச் சிந்தனை என்பது உணர்வார்க்கு உணரும் தன்மைத்தே.

திருமுறைகள் பலவாய கருத்துக்களைப் பரந்துபட்டுச் சொல்லி யும், செயற்பாட்டு முறைமையமைத்துக் காட்டியும் சொல்லும் வாழ் வியல் அமைப்பினை உட்கொண்டமைந்த காரணத்தால் அவற்றி லிருந்து அடிப்படைத் தெளிவாக அமைந்த கருத்துக்களை எடுத்துத் தொகுத்துக் கொள்ள வேண்டும் என்ற மரபினைக் குருமுதல்வராக

நின்ற ஞானசம்பந்தப் பெருந்தகையே எடுத்துக் காட்டியுள் ளார்கள்.

சிவபாதவிருதயர் தம்முடைய பூசைக்காலத்தில் ஞானசம்பந்தப் பிள்ளையார் அருளிய திருப்பதிகங்களைப் பாடும் மரபினை மேற் கொண்டார். ஆனால் நாள்தோறும் பதிகங்கள் பலவாருகப் பல்கிப் பெருகவே அவைகள் அனைத்தையும் பாடிப் பூசைசெய்தல் அரியதா யிற்று. அவருடைய இடர்ப்பாட்டினை அறிந்த திருஞானசம்பந்தர், அவருக்குச் சிலமுக்கியப் பதிகங்களை மட்டும் தொகுத்துக் கொடுத் தலோ சில முக்கியப் பாட்டுக்களை மட்டும் இணைத்துக் கொடுத்தலோ செய்யவில்லை. அவ்வாறு செய்வதுதான் இன்றும் காணக் கூடிய உலகியல் வழக்கம். திருஞானசம்பந்தர் திருமுறைகளின் உட்பொரு ளாய், திருமுறைத் தெளிவாய் அமைந்த கீழ்க்கணக்குப் பதிகமாகத் திருவெழு கூற்றிருக்கை அருளிச் செய்கின்ருர்கள். திருவெழுகூற் றிருக்கைப் பதிகம் முழுவதும் திருநெறிக் கொள்கைகளை (சாத்திர நுட்பங்களை) எடுத்து வரிசைப்படுத்திக் கொடுத்திருப்பதைக் காண லாம்.

இக்கொள்கையை வலியுறுத்தும் சான்று இரண்டினை முறையே அமைத்துக் காணுதல் நன்மை பயப்பதாம்.

'அகத்தியனுர் தேவாரத் திரட்டு' என்ற நூல் இருபத்தைந்து தேவாரப் பதிகங்களைக் கொண்டது. இது சிவாலய முனிவருக்காக அகத்தியர் திரட்டித் தந்தது. அவ்வாறு திரட்டுவதற்கு அடிப்படை யாக அமைந்தவை எட்டுவகையான பொருளடைவுகள். குருவருள், திருநீறு, ஐந்தெழுத்து, கோயில், சிவனுரு, சிவனடி, சிவநெறிப் பாடல்களாக அமைந்த அருச்சனை, தொண்டு என்ற இவ்வெண் வகைக் கருத்துக்களே திருமுறைகளின் அடிப்படை அறங்கள் என நுனித்துணர்ந்து, அத்தகைய பொருட்பாகுபாட்டின் மூலம் திருமுறை களை இணைத்துக் காட்டுவாராயினர். அகத்தியர் தேவாரத் திரட்டின் பொருட்பாகுபாட்டினைத் தெளிவுறுத்தும் வெண்பா ஒன்றைக் காண லாம்.

குருவருளும் வெண்ணீ றெழுத்தஞ்சும் கோயில்
அரனுருவும் என்தலைமேலாக்கும்—திருவடியும்
சிட்டான அர்ச்சனையும் தொண்டும் சிவாலயர்க்கென்
றிட்டார் அகத்தியனுர் எட்டு

என்பதே அப்பாட்டு.

அகத்தியனுரேயன்றி, சந்தானுசாரியர்களில் இறுதியில் நின்ற பெருந்தகையும் 'சித்தாந்த அட்டகம்' என எட்டுச்சாத்திர நூல்களை இயற்றிச் சைவசித்தாந்தக் கொள்கையை அரண் செய்து நிலை நாட்டியவருமான உமாபதி சிவாசாரியார் தேவார அருள் முறைத் திரட்டு'' என்ற ஒரு தொகுப்புநூலை, பதிமுதுநிலை, உயிரவை நிலை, இருள் மலநிலை, அருளதுநிலை, அருளுருநிலை, அறியும்நெறி, உயிர்

விளக்கம், இன்புறுநிலை, அஞ்செழுத்தருள்நிலை, அணைந்தோர்தன்மை என்ற பத்துவகையான பொருட்பாகுபாட்டுத் தலைப்புக்களை அமைத்துக்கொண்டு, அவைகளுக்குச் சான்றாக மூவர் தேவாரப் பதிகங்களிலிருந்தும் தொண்ணூற்றென்பது பாடல்களை மட்டும் எடுத்துக் காட்டி முடித்துள்ளார்கள். இப்பத்துத் தலைப்புக்களிலேயே 'திருவருட்பயன்' என்ற ஒரு சாத்திரநூலையும் உமாபதி சிவம் இயற்றியுள்ளார்கள்.

அகத்தியனார் எண்வகையாகப் பொருட்பாகுபாடுசெய்து திருமுறைகளைச் சிந்திக்கவைத்தார் என்பதும் உமாபதி சிவம் பத்துவகையாகப் பொருட்பாகுபாடு செய்து திருமுறைகளைச் சிந்திக்கவைத்தாரென்பதும் நாம் உணர வேண்டியவைகளே. அவற்றோடு நில்லாமல் குருமுதல்வராக நின்ற ஞானசம்பந்தர் **திருவெழுகூற்றிருக்கையை** அருளியது போன்றே, திருமுறைகளை மூலமாக வைத்துக்கொண்டு பொருட்பாகுபாட்டினை உளங்கொள வைத்தார்கள் என்பதையும் தெரிந்துகொள்ளலாம்.

இத்தகைய மரபு முறையினை ஒட்டியே பன்னிரு திருமுறைகளையும் பன்னிரு பொருட் பாகுபாடுடைய ஒருதொகுப்பென அமைத்துக்கொண்டு, பன்னிரு பொருட் பாகுபாட்டினை எடுத்துச் சுருங்கச் சொல்லி, விளங்க விரித்துரைக்கு முகத்தால் *சிவஞானபோதம்* திருவருளால் வெளிப்படுத்தப் பெற்றுள்ளது என்று கொள்ளுதல் இழுக்காகாது என்பதுடன் தமிழர் மரபை ஒட்டியும், சைவசமயக் குருமுதல்வர், சந்தானசாரியர் மேற்கொண்ட மரபை ஒட்டியும் மேற்கொண்ட முறை என்பதைத் திருவருள் கடைக்கூட்ட உணர்ந்து தெளிதல் வேண்டற்பாலதாம்.

# 2. பொல்லாரும் நல்லாரும்

## *முன்னுரை*

மெய்கண்ட தேவநாயனர் அருளிய சிவஞான போதம் என்ற நூலில் அவரே அருளிய மங்கல வாழ்த்துச் செய்யுள் ஒன்றும், அவையடக்கச் செய்யுள் ஒன்றும் காணப் பெறுகின்றன.

நூலுக்கு முன்னுரையாகச் சில கருத்துக்களைத் தந்துரைக்க வேண்டியது நல்லாசிரியனின் கடமை. நூல் எழுதும் ஆசிரியன் சில வரையறைகளைத் தெளிவுறுத்தி முன்னுரையாகக் கொடுக்கவில்லையானல், படிப்பவர்கள் குன்று முட்டிய குரீஇப் போலவும் குறிச்சி புக்க மான் போலவும் இடர்ப்படுவார்கள் என்பது சான்ருேர் வாக்கு. இவ்வகையில் மெய்கண்டாரே அருளிய தற்சிறப்புப் பாயிரங்களாக இரண்டு செய்யுட்கள் நமக்குக் கிடைக்கின்றன. ஆயினும் ஆசிரியனல் சில செய்திகளைச் சொல்லுதல் இயலாது. எடுத்துக்காட்டாக, நூல் செய்த ஆசிரியன் தன்னுடைய பெயரை, தகுதியை விரிவுபெறச் சொல்லிக் கொள்ள இயலாது. இவ்வகையில் நூலாசிரியனின் குரு, நூலாசிரியனுடன் பயின்றவன், நூலாசிரியனின் மாணக்கன், நூலாசிரியன் கருத்தினைப் படித்து உணர்ந்து சுவைத்து அனுபவித்தவன் என்ற நால்வர்களில் ஒருவன் பாயிரம் (முன்னுரை) செய்யலாம் என்று இலக்கணம் வழிவகுக்கிறது. நூலாசிரியனுக்கு வேருக ஒருவன் பாயிரம் எழுதினல் அது சிறப்புப் பாயிரம் என்றும், நூலாசிரியனே எழுதும் முன்னுரை அல்லது பாயிரம் தற்சிறப்புப் பாயிரம் என்றும் வழங்கப் பெறும்.

மெய்கண்ட நாயனர் தாம் நூலெழுதியதோடு அமைந்து விடவில்லை. தாமே மாணக்கர்களுக்குச் சிவஞானபோதத்தைப் பாடமாகவும் சொல்லி வந்துள்ளார். சகலாகம பண்டிதர் எனப் பெறும் அருணந்தி சிவாசாரியாரும் மெய்கண்டாருடைய மாணக்கரே. அருணந்தி சிவாசாரியார் அருளிய நூல் *சிவஞானசித்தியார்*. நேரே ஆசிரியர் முன் அமர்ந்து பாடங் கேட்ட திறமை மிக்க நன் மாணக்கர் ஒருவரால் அருளப் பெற்ற விரிவுரை என்பதாகவே சிவஞான சித்தியார் என்ற நூல் கருதப்பெறுகிறது.

சிவஞான போதத்துக்குச் சிறப்புப் பாயிரப் பாக்கள் இரண்டும், தற்சிறப்புப் பாயிரப் பாக்கள் இரண்டும் காணப் பெறுகின்றன. சிறப்புப் பாயிரப் பாக்கள் இரண்டனுள் "மலர்தலை" என்று தொடங்கும் சிறப்புப் பாயிரம் அருணந்தி தேவ தம்பிரானல் இயற்றப்

பெற்றது என்று பாண்டிப் பெருமாள் விருத்தியானது கூறுகின்றது. ஒருவேளை அருணந்தி சிவாசாரியாரை உளங் கொண்டு கூறியதாகக் கொள்ளலாமோ என்ற கருத்தும் தோன்றுகிறது.

இங்கே தலைப்பாகக் கொடுக்கப் பெற்ற பொல்லாரும் நல்லாரும் என்ற இரு சொற்களும் மெய்கண்டார் தாம் அருளிய தற்சிறப்புப் பாயிரத்தில் காணப் பெறும் இரு சொற்களாகும். 'பொல்லார்' என்பது திருவெண்ணெய் நல்லூரில் 'திருவருட்டுறை' என்னும் திருக் கோயிலில் தென்மேற்கு மூலையில் அமைந்த பொல்லாப் பிள்ளை யாரைக் குறிக்கும். 'நல்லார்' என்பது சிவனடியே தம் சேர்வுப் பொருள் எனக் கருதி, அதனிடத்துத் தம்மை இணைத்து, அது செலுத்தச் செல்லும் மரபினைப் பின்பற்றும் சான்றோரைக் குறித்தது. இவற்றின் விரிவை இத்தலைப்பிற் காணலாம்.

## மெய்கண்டாரின் வார்த்திகம்

மெய்கண்டார் அருளிய சிவஞானபோதம் பன்னிரண்டு நூற் பாக்களைக் கொண்டது. அவற்றுடன் மங்கல வாழ்த்தும், அவை யடக்கமும் என்ற இரு தலைப்புக்களில் இரண்டு செய்யுட்கள் காணப் பெறுகின்றன. மேலும், சிவஞான போத நூற்பாக்களை நன்கு விளங்கிக் கொள்ளும் முறையில் "மேற்கோள், ஏது, எடுத்துக்காட்டு" என்பவைகளை இணைத்துக் காட்டி, 'வார்த்திகம்' என்று சொல்லப் பெறும் ஓர் உரையும் காணப் பெறுகிறது. இவ்வுரையை மெய் கண்டாரே இயற்றினர் என்ற கருத்தினை ஏற்பதில் அறிஞர்களிடையே கருத்து வேறுபாடு காணப் பெறுகிறது.

மெய்கண்டார் அருளிய 'சிவஞானபோதம்' வடமொழியில் அமைந்த இருபத்தெட்டுச் சிவாகமங்களில் ஒன்றாய இரௌரவ ஆகமத்துள் பன்னிரண்டாவது அத்தியாயம், எழுபத்து மூன்றாவது பாப விமோசனப் படலத்து அனுஷ்டுப்புச் சந்தசாய்த் துவாதச சூத்திர வடிவமாக அமைந்துள்ள சிவஞானபோதத்தின் தமிழ் மொழி பெயர்ப்பே என்ற கொள்கையுடையவர்களிலேயே இருவகையினர் உண்டு. ஸ்ரீமெய்கண்டார் தமிழ்ப்படுத்தினராயினும் சிவஞானபோதம் சிவபெருமான் திருவாக்கே எனக் கொண்டு, சிவபெருமான் திருவாக் காயின் அது அபேதபரமான உண்மையைத்தான் கூறும் எனக் கொண்டு, ஸ்ரீ மெய்கண்டார் தனக்கியல்பாயுள்ள பெருங்கருணை காரணமாக நம்மனோருய்தற் பொருட்டு ஆரியத்தினின்றும் தமிழில் பன்னிரண்டு சூத்திர வடிவமாக மொழிபெயர்த்து, அச்சூத்திரத்தின் பொருளை மிகச் சுருக்கமாக நம்மனோரறிதற் பொருட்டு வசன வடிவாகவும் செய்யுள் வடிவாகவும் வரைந்தருளினர் என்று "சிவ ஞானபோத மூலமும் தெளிபொருள் விளக்கவுரையும்"என்ற நூலின் முன்னுரையில் ஸ்ரீ சாது இரத்தின சற்குரு பாத சேகரரும், தருக்க வேதாந்த போதகாசிரியருமாகிய கோ. வடிவேலுச் செட்டியார் அவர்கள் எழுதியுள்ளார்கள். அம் முன்னுரையிலிருந்து, மெய் கண்டார் சிவஞானபோதத்துக்கு ஒரு சிறிய உரையையும் எழுதி

யுள்ளார் என்பதை ஒப்புக்கொள்ளுகிறார். ஆயினும் தாம் எழுதிய உரையில் மெய்கண்டார் உரையைச் சேர்க்கவில்லை. மெய்கண்டார் மொழி பெயர்த்தருளிய பன்னிரு நூற்பாக்களோடு அவர் அமைத்த அதிகரணப் பிரிவுகள், எடுத்துக்காட்டு வெண்பாக்கள் ஆகிய வைகளையும் இணைத்து வைத்துத் தம்முடைய உரையை எழுதாமைக் குரிய காரணம் தெரியவில்லை. சிவஞானபோதத்துக்கு மட்டும் உரை எழுதப் புகுந்தமையால் மெய்கண்டார் உரைக்கும் தாம் உரை வகுக்க வேண்டியதில்லை எனக் கருதி அவ்வாறு செய்திருக்கலாம்.

இனி, பிறிதொரு சாராராகிய சிவஞான முனிவரை உள்ளிட்ட சான்றோர்கள் 'சிவஞானபோதம்' வடமொழியின் தமிழ்மொழி பெயர்ப்பே என்பதை உளங்கொண்டு மெய்கண்டார் எழுதிய உரையையும் நூற்பாக்களைப் போலவே மூலம் எனக் கொண்டு உரை எழுதுகின்றார்கள். பேராசிரியர், கோ. வடிவேலுச் செட்டியார் அவர்களும் மாதவச் சிவஞான சுவாமிகளும் 'சிவஞானபோதம்' ஒரு மொழிபெயர்ப்பு என்ற கொள்கையில் ஒற்றுமை உடைய வர்களாயினும், முன்னவர் சிவஞானபோதம் அபேதபரமான நூல் என்றும் பின்னவர் அது சித்தாந்த பரமான நூல் என்றும் வேறு பட்டு நிற்பாராயினர்.

## சிவஞானபோதச் சிறப்புப்பாயிரம்

இந்நூலின் சிறப்புப் பாயிரமாக அமைந்த பாடல்கள் இரண்டு. அவையிரண்டுமே தமிழகச் சான்றோர்கள் மேற் கொள்ளும் மரபு முறையை ஒட்டிய விளக்கங்களை நாம் அமைத்துக் கொள்வதற்குப் போதிய சான்றுகளைக் கொடுக்கவில்லை. இந்நூன்முகத்து உரைக்கப் பெறுவதாகிய சிறப்புப் பாயிரம் :—

"மலர்தலை யுலகின் மாயிருள் துமியப்
பலர்புகழ் ஞாயிறு படரின் அல்லதைக்
காண்டல் செல்லாக் கண்போல் ஈண்டிய
பெரும் பெயர்க் கடவுளிற் கண்டு கண் இருள் தீர்ந்து
அருந்துயர்க் குரம்பையின் ஆன்மா நாடி
மயர்வற நந்தி முனிகணத் தளித்த
உயர் சிவ ஞான போதம் உரைத்தோன்
பெண்ணைப் புனல்சூழ் வெண்ணெய்ச் சுவேதவனன்
பொய்கண் டகன்ற மெய்கண்ட தேவன்
பவநனி வன்பகை கடந்த
தவரடி புனைந்த தலைமை யோனே"

என்பது. இதனோடு சிறப்புப்பாயிரம் என்ற பெயரிலேயே வேறொரு வெண்பாவும் காணப் பெறுகிறது.

"எந்தை சனற்குமரன் ஏத்தித்தொழ இயல்பாய்
நந்தி உரைத்தருளும் ஞான நூல் – சிந்தை செய்து

தானுரைத்தான் மெய்கண்டான் தாரணியோர் தாமுணர
ஏது திருட் டாந்தத்தா லின்று''

என்பதே அது.

முதலில் உள்ள பாயிரச் செய்யுளைப் பாடியவர் 'அருணந்தி தேவ தம்பிரான்' என்று கூறும் **பாண்டிப் பெருமாள் விருத்தியுரை**, இரண்டாவது சிறப்புப் பாயிரத்தை "நூன்மரபு - தனியன்" என்றே கொள்ளுகிறது. தனியன் என்பது தனிப்பாடல் என்ற பொருள் தரும். இயற்றினர் பெயர் தெரியவில்லை. "மலர்தலை" என்று தொடங்கும் சிறப்புப் பாயிரம் நூலின் முன்னும், "எந்தை" என்று தொடங்கும் சிறப்புப் பாயிரம் நூலின் பின்னும் வைத்தே பதிப்புச் செய்யப் பெற்றுள்ளன.

"எந்தை சனற்குமரன்" என்ற சிறப்புப் பாயிரத்துக்கு உரை எழுதியிருக்கிறார் பாண்டிப் பெருமாள். ஆனல், சிவஞான போதத்துக்குச் சிற்றுரையும் பேருரையும் எழுதிய மாதவச்சிவஞான சுவாமிகள் தம்முடைய இரண்டு உரைகளிலும் இச்செய்யுளுக்கு உரை எழுதவில்லை. எனினும் "எந்தை" எனத் தொடங்கும் சிறப்புப் பாயிரம் 'மலர்தலை' எனத் தொடங்கும் சிறப்புப் பாயிரத்துக்கு முன்னே அமைந்திருந்த செய்யுளாகும் என்ற கருத்து, சிவஞான முனிவருக்கு உண்டு என்பது அவருடைய பாடியத்தால் நமக்குத் தெரிய வருகிறது.

"எந்தை சனற்குமரன் என்பதனல் பெறப்பட்டதனையே மாணுக்கர்க்கு நூல்முகத்து உணர்த்துதற் பொருட்டு ஈண்டுத் தந்துரைத்தது இது; ஆதலால் இது கூறியது கூறல் ஆகாது" என்று சிவஞான மாபாடியத்தில் எழுதுவதால் சிறப்புப் பாயிரம் இரண்டனுள் "எந்தை" எனத் தொடங்கும் செய்யுளே முதற் செய்யுளாகவும், "மலர்தலை" எனத் தொடங்கும் செய்யுள் இரண்டாஞ் செய்யுளாகவும், அமைக்கப் பெற்றிருந்தன என்பதைச் சிவஞான முனிவர் கருதினர் என்பது தெளிவாகும். இவ்வகையில் நோக்கினல் "எந்தை" என்ற வெண்பாவினை முன்னர் எழுதி, அதற்கு விளக்க விரிவுரையும் அவர் எழுதியிருத்தல் வேண்டும். உரை காணு தொழிந்தது மன்றி, அச் செய்யுளும் இறுதியில் வருதற்குரிய காரணமும் தெரியவில்லை.

இனி, இவ்விரண்டன் பொருளையும் உற்று நோக்கும் போது "மலர்தலை யுலகின்" என்ற சிறப்புப் பாயிரத்தின் மூலம் மெய்கண்டார் சிவஞான போதம் உரைத்தார் என்ற கருத்து வெளிப்படுகிறதேயன்றி, அவர் சிவஞான போதத்துக்கே ஏது, திருட்டாந்தத்துடன் ஓர் உரையும் எழுதினர் என்ற கருத்து வெளிப்படவில்லை அவ்வாறே "எந்தை சனற்குமரன்" என்ற சிறப்புப் பாயிரத்தின் மூலம் மெய்கண்டார் ஞான நூல் ஒன்று ஏது, திருட்டாந்தத்துடன் செய்தார் என்ற கருத்து வெளிப்படவில்லை. இவ்வடிப்படையில்

இரண்டு சிறப்புப் பாயிரங்களுமே சிறப்புப் பாயிர இலக்கண முறைப்படித் தெரிவிக்க வேண்டிய செய்திகளை முழுமையாகத் தெரிவிப்பனவாக அமைய வில்லை.

அடுத்து, இவ்விரு பாயிரங்களுமே, நந்தி முனிகணத்து அளித்த உயர் சிவஞான போதம் என்றும், நந்தி உரைத்தருளும் ஞானநூல் என்றும் கூறுவனவற்றைக் கொண்டு நோக்குமிடத்து, நந்தியெம் பெருமான் அருளிய அல்லது ஞானநூலாகச் செய்தமைத்த என்று பொருள் கொள்ள வேண்டிய நிலைமை ஏற்படுகிறது அவ்வாறு யின் மெய்கண்டார் அந்நூலை எடுத்துரைத்த ஒன்றற்குமட்டுமே உரியவராகின்றார். "எந்தை சனற்குமரன்" என்ற சிறப்புப் பாயிரச் செய்யுளை நன்கு சிந்தித்தால் "நந்தி உரைத்தருளும் ஞானநூல்" என்ற சிவஞான போதத்தை மெய்கண்டார் எடுத் துரைத்தோ மொழிபெயர்த்துரைத்தோ வெளிப்படுத்தினர் என்ற அளவிலேயே கொள்ள முடிகின்றது. இத்தகைய கருத்து வலிமை யாகப் பதிந்த காரணத்தாலேயே மாதவச் சிவஞான சுவாமிகள் "உயர் சிவஞான போதம்" என்ற சிறப்புப் பாயிரத் தொடருக்கு உரை எழுதும் போது "சரியை முதலிய மூன்று பாதப் பொருள்களை ஆராயும் நூல்களின் மேற்பட்ட ***சிவஞான போதம்*** என்னும் வடநூலை மொழிபெயர்த்துக் கூறி, வார்த்திகம் எனப் பெறும் பொழிப்புரை செய்தோன்" என எழுதி விளக்கினர். எனவே, பாயிரங்களாக அமைந்த இரண்டு செய்யுட்களும் நூன்மரபு முதலிய செய்திகளைத் தெளிய உணர்த்தாமையோடு கவர்பொருள் பெற நின்றமையும் சிவஞானமுனிவர் இவ்வாறு கொள்வதற்குரியகாரண மாயிற்று என்று கொள்ளலாம்.

## *மெய்கண்டாரின் சிறப்புப் பாயிர விளக்கம்*

ஆயினும், இங்கே நமக்கு எழும் ஐயங்கள் எல்லாவற்றையும் முற்ற நீக்கித் தெளிவு பெறுத்தும் வகையில், மெய்கண்டார் அருளிய இரண்டு தற்சிறப்புப் பாயிரச் செய்யுட்கள் நமக்கு விளக்கம் தருகின்றன.

"கல்லால் நிழன்மலை
வில்லார் அருளிய
பொல்லார் இணைமலர்
நல்லார் புனைவரே"

என்பது மங்கல வாழ்த்துச் செய்யுள். இதனை அடுத்து அவை யடக்கமாகக் கீழேவரும் செய்யுளை அமைத்தருளுகின்றார்.

"தம்மை உணர்ந்து தமையுடைய தன்னுணர்வார்
எம்மை உடைமை எமையிகழார் – தம்மை
உணரார் உணரார் உடங்கியைந்து தம்மிற்
புணராமை கேளாம் புறன்"

மேலே குறிப்பிடப் பெற்ற இரண்டு பாடல்களையும் அருளிச் செய்த மெய்கண்டார் தாம் எழுதிய அல்லது எழுதப்புகுந்த நூலுக்கு என்ன பெயர் வைத்தார் என்பதுபற்றிக் குறிப்பிட வேயில்லை. மேலும், தாம் எந்தநூலைப் பின்பற்றிச் செய்யப் புகுகிறார் என்பதையோ தாம் இந்நூல் செய்தற்கு உரிய காரணம் என்ன என் பதையோ மெய்கண்டார் குறிப்பிட்டுக் காட்டவேயில்லை.

'கல்லால்' என்று தொடங்கும் முதற்செய்யுளை 'மங்கலவாழ்த்து' என்று கொள்வர் சான்றோர். வாழ்த்து, வணக்கம், பொருளியல்பு உரைத்தல் என வாழ்த்து மூவகைப்படும் என்று கொண்டு, நூலில் வருகின்ற பொருள்களையெல்லாம் தன்னகத்தே குறிப்பாக நின்று விளக்கிக்காட்டுவதே பொருளியல்பு உரைத்தல் என்ற மூன்றும் வகைப்பட்ட வாழ்த்தின் விளக்கம் என விளக்கம் செய்து, 'கல்லால் நிழல்' என்ற செய்யுள் பன்னிரண்டு சொற்களைக் கொண்டு விளங்குவதால் பின்வரும் நூலின் பன்னிரண்டு நூற்பாக் கருத்துக் களையும் தன்னளவில் சுருக்கிக்காட்டும் கண்ணாடியாக இம் முதற் செய்யுளாகிய மங்கலவாழ்த்து விளங்குகிறது என்று அருமைக்கும் அழகுக்கும் வியப்புக்கும் உரிய விளக்கம் ஒன்றைக் கொடுத்திருக் கிறார் சிவஞான முனிவர்.

இனி, உரையெழுதுவார் மாட்டுப் பொதுவாக உளதாம் சிக் கல்கள் முனிவருக்கும் உண்டாகின்றன.

(1) இடையூறு நீக்குவதற்குரிய விநாயகக் கடவுளை வாழ்த்துவது.
(2) விநாயகனுக்கும் சிவனுக்கும் உள்ள உறவு.

"சாக்கிரத்தே அதீதத்தைப் புரியும் தமக்கு இடையூறு சிறிதும் அணுகாமை அறிந்தாராயினும், ஆன்றோர் ஆசாரம் பாதுகாத்தற் பொருட்டும், மாணாக்கர்க்கு அறிவுறுத்தற் பொருட்டும், முதற்கண் இடையூறு நீக்குதற்குரிய விநாயகக் கடவுளை வாழ்த்துவதாகிய மங்கல வாழ்த்து" என்பது சிவஞான முனிவர் கூறும் முன்னுரை. மெய்கண்டார் பெருமையை உணர்த்துவது போலவே விநாயகப் பெருமானின் பெருமையையும் உணர்த்தும் சிவஞான முனிவர் "இடையூறு நீக்குதற்குரிய விநாயகக் கடவுள்" என்றே குறிப்பிட்டுக் காட்டுவது இடையூற்றுக்கும் விநாயகருக்கும் உள்ள தொடர்பு மறுத்தற்கியலாதது என்பதைக் குறிப்பிடவே. ஆயினும், வரலாற்று நிகழ்வினை வைத்தும், மெய்கண்டாரின் வாழ்க்கை நிகழ்வினை வைத்தும் விநாயகரை ஞானத்தோடு தொடர்புடையவர் எனக் கொள்வது சிறப்புடைய ஒன்றாகும்.

## விநாயகப்பெருமானின் இன்றியமையாமை

ஞானநூல் ஒன்று வெளிவர வேண்டுமாயின் அது விநாயகப் பெருமானின் கைச்சாத்து என்னும் இலச்சினை பெற்றே வெளிவருதல் வேண்டும் என்பது பொது நியதி.

தேவாரப் பதிகங்கள் இன்று நமக்குக் கிடைப்பனவாக அருளிச் செய்த பெருமை திருநாரையூர்ப் பொல்லாப் பிள்ளையாருக்கே உண்டு. அவ்வாறே, மெய்கண்டார் மூலமாகச் சைவசித்தாந்த நுண் பொருளை விளக்கும் சிவஞான போதம் வெளிவருதற்குத் துணை நின்றவர் திருவெண்ணெய் நல்லூர்ப் பொல்லாப் பிள்ளையாரே. இனி, பிற்காலத்தே எழுந்த அருணகிரிநாதரின் திருப்புகழும் வெளிப்படக் காரணமாக இருந்தவர் ஆதிகுமாரவயலூர் என்ற பதியில் எழுந் தருளியுள்ள பொல்லாப்பிள்ளையாரே. அருணகிரியார் திருவருளை யில் முருகனருள் பெற்றதும் பாடிய "முத்தைத்தரு" என்ற திருப் புகழுக்குப்பின் நீண்டகாலம் திருப்புகழ்பாட இயலாதவராகவே இருந்தார். பின்னர் ஆதிகுமாரவயலூர்த் தலத்துப் பொல்லாப் பிள்ளையார் திருமுன்பில் நின்றபோதுதான் திருப்புகழில் அமைக்க வேண்டிய பொருளமைப்பு முதலியவைகள் பொல்லாப் பிள்ளை யாரால் வகுத்தமைத்துத் தரப்பெறுகின்றன.

இவ்வாறே, நீடாழி உலகத்து மறைநாலோடு ஐந்து என்று நிலை நிற்குமாறு, வாடாத தவவாய்மை முனிராசன் மாபாரதஞ் சொன்ன போது, விநாயகப் பெருமான் தம் ஒருகொம்பை ஒடித்து எழுதினர் என்ற குறிப்பும் எந்த ஒருஞானநூலும் விநாயகப் பெருமான் கைச்-சாத்துப் பெற்றே வெளிவருகிறது என்பதை அறிவுறுத்தத் தான்.

## குருவணக்கம்

மெய்கண்டாரும் இத்தகைய மரபு வழியைப் பின்பற்றிய-தோடன்றித் தமக்கும் குருவாக நின்று, தாம் பரஞ்சோதியார்பால் கேட்டுணர்ந்த கருத்துக்களைச் செம்மையான முறையில் சிந்திக்கவும், தெளியவும், அனுபவித்தறியவும், மீளவும் உயிர்களின் நலங்கருதி வழங்கவும் துணைநின்று அருள் செய்த காரணமாகத் தமக்குக் குருவாக நின்ற பொல்லாப் பிள்ளையாரை வணங்கு முகத்தான் வணக்கம் கூறினர் என்று கொள்ளுதல் தவறுடையதாகாது.

## மலைவில்லார்

இரண்டாவதாக, சிவஞான முனிவர் "மலைவில்லார் அருளப் பொல்லார் தாள் புனைவர் எனவே அவ்விருவரும் தம்முள் வேற்றுமை யின்மை பெற்றும்; உலகத்துப் புதல்வர்கள் மாட்டுச் செய்யும் வழிபாடு தந்தையர்க்குக் கழிபேருவகை பயப்பிக்குமாதலின், அந் நயம் பற்றி அங்ஙனம் கூறியதூஉமாம்." என எழுதுவதிலிருந்து சிவஞான முனிவர் பேதாபேதத்தை எவ்வளவு தெளிவாக விளக்கு கின்றார் என்பதை உணரலாம்.

தந்தையும் மகனுமாய வேறுபாடு இருவர்க்கும் உண்டு எனினும் இருவருக்கும் வேறுபாடில்லை; வேறுபாடு உண்டு என்பதே வலிவு பெற்ற கருத்து என்றாலும் பிள்ளைக்குச் செய்யும் வழிபாடு காரண மாகத் தந்தை பெரிதும் மகிழ்வான் என்ற இருவகை விளக்கம் கொடுத்துள்ளார்.

மாதவச் சிவஞான யோகிகள் கூறும் விளக்கத்தை வேதவாக்கெனக் கொண்டு ஆராயும் போது, ஒரு முரண்பாடு தெற்றெனத் தெரிகிறது.

சாக்கிரத்தே அதீதத்தைப் புரியும் சிவஞானச் செல்வராகிய மெய்கண்டார் இந்நூல் இனிது முடிவதற்குச் சிறிதும் இடையூறு அணுகாது என்பதை அறிந்திருந்தாராயினும், ஆன்றோராசாரம் பாதுகாக்கவும் மாணுக்கர்க்கு அறிவுறுத்தவும் இடையூறு நீக்கும் விநாயகக் கடவுளை வாழ்த்துகிருர் என்று கூறிய முன்னுரையும் மலை வில்லாராகிய சிவன் மேன்மேற் கருணை கூர்ந்தருளுவதற்காக (அருளிய—அருளுவதற்காக) விநாயகப்பெருமானுடைய திருவடிகளை நல்லார் புனைவர் என்று உரை வகுத்திருப்பதும் முன்பின் முரணுமை என்ற அளவையியல் நெறிமுறையின் வண்ணம் முரண்பட்ட கருத்துக்களே. ஆயினும் மாதவச் சிவஞானயோகிகள் யாண்டும் பொதுவியல்பு சிறப்பியல்பு என வகுத்துக்கொண்டு விளக்கம் செய்வது அவர்க்கு இயல்பாகலான் இடையூறு நீக்கம் என்பதனை விநாயகப் பெருமானின் பொதுவியல்பு என்றும் அவரை வணங்கவே மலைவில்லார் அருள்நலம் கிட்டும் என்பதனைப் பொல்லாப் பிள்ளையாரின் சிறப்பியல்பு என்றும் அறிவுறுத்திஞராகக் கொள்ளலாம்.

## கயிலையும் கல்லாலும்

இனி, 'மலைவில்லார்' என்பதற்கு "நந்தியெம் பெருமானுக்கு இந்நூலால் மலைவு தீர்த்தருளிய முதலாசிரியர்" என்று உரைகாணுகின்ருர் சிவஞானமுனிவர். இருவேறு இடங்களில் நடைபெற்ற இருவேறு நிகழ்ச்சிகளை இணைத்து உரையெழுதுகிருர் சிவஞான முனிவர்.

கல்லால மரத்தின்கீழ் மலைவு தீர்த்தது நால்வருக்கு. திருக்கயிலையில் மலைவு தீர்த்தது நந்தியெம் பெருமானுக்கு.

> "கல்லாலின் புடையமர்ந்து நான்மறை ஆறங்கம் முதற் கற்ற கேள்வி
> வல்லார்கள் நால்வருக்கும் வாக்கிறந்த பூரணமாய் மறைக்கப்பாலாய்
> எல்லாமாய் அல்லதுமாய் இருந்ததனை இருந்தபடி இருந்து காட்டிச்
> சொல்லாமற் சொன்னவரை நினையாமல் நினைந்து பவத் தொடக்கை வெல்வாம்"

என்ற செய்யுளின் மூலம் சனகாதி முனிவர் நால்வருக்கும் உண்டாகிய ஐயங்களை நீக்கிஞன் இறைவன். இதற்கென இறைவன் கொண்ட கோலம் குருமூர்த்திக் கோலமாக விளங்கும் தட்சிணுமூர்த்திக் கோலம். இங்கே "சிவஞான போதம்" என்ற நூலின் மூலம் ஐயம் அறுத்தார் அக்குருமூர்த்தி என்று கொள்ளும் மரபு இல்லை. தன்னுண்மை நிலையைக் காட்டிச் சொல்லாமற் சொன்னவர் என்ற

குறிப்பே காணப்பெறுகிறது திருக்கயிலேயில் நந்திபெருமானுக்கு ஐயமறுத்தார் என்ற நிகழ்வும் உண்டு. அது 'சிவஞான போதம்' என்னும் நூலால் என்பது சிவஞான முனிவர் கூற்ருல் அறிகிருேம். திருக்கயிலேயில் சீகண்ட பரமசிவனுக, திருநீலகண்டனுக இருந்து உபதேசித்த காலத்தே உடன் முனிவர்கள் கூட்டம் இருந்திருக்க லாம். அம்முனிவர்களுள் சனகாதி நால்வரும் உடனிருந்திருக்கலாம். ஆனுல், அது நிகழ்ந்தது திருக்கயிலேயில். அந்நீலகண்ட சிவமேகல்லாலின் புடையமர்ந்துஅங்கே உள்ள நால்வருக்கு மட்டும் அருள் செய்ததாகத்தான் வரலாறு நமக்குக் கிடைக்கிறது. தட்சிணு மூர்த்தி எனப்பெறும்குருவிடம் நேர்நின்றுஉபதேசம்பெற்றவர்களே, நந்தி யெம்பெருமானிடத்திலும் சீடர்களாக இருந்து உபதேசம் பெற் ருர்கள் என்ற செய்தியையும் நாம் உளங்கொள வேண்டியவர்களா வோம். ஆலமர்கடவுள் பரமாசாரியனுக நின்றுணர்த்திய நிலேயுடன் நந்தி யெம்பெருமான் உணர்த்திய நிலேயையும் இணேத்து எழுதப் பெறும் சிவஞானமுனிவர் உரையானது மெய்கண்ட தேவர் அருளிய "கல்லால் நிழல்மலேவில்லார்" என்ற மங்கல வாழ்த்துச் செய்யுளுக்கு எத்துணேயளவுக்குப் பொருந்தும் என்பதை அறிஞர்கள் ஆய்ந்து தெளிதல் வேண்டும்.

## *'இல்லார்' என்பதன் உரை*

மேலும், மலேவில்லார் என்பதற்கு உரையெழுதும்போது "இல்லார் இல்லாகச் செய்தார் எனப் பண்படியாகப் பிறந்த விணேப் பெயர்" என்று சிவஞான முனிவர் எழுதுகிருர். இதற்கு விளக்கம் கூறுகின்ற போக்கில் "அபாவமாவது (இன்மையாவது) பாவம் போலப் பாவப் பொருளின் தன்மையேயன்றி வேறன்று" எனவும் "பாவப்பொருளின் புலனுகாமையே அபாவம் என்னும் சொற்குப் பொருள் என்பது சித்தாந்தம்" என்று கூறுகிருர். இதனேச் சித்தாந்த கலாநிதி ஔவை சு. துரைசாமிப்பிள்ளேயவர்கள் அண்ணுமலேப் பல் கலேக் கழகச் சார்பில் பதிப்பித்த *சிவஞானபோதச் சிற்றுரையில்* தம் குறிப்புரையாகக் குறிப்பிட்டு, இத்தகைய கொள்கை இலக்கண வுரைகாரராகிய சேனுவரையர் கொள்கையோடு மாறுபட்டுள்ளது என்பதையும் சுட்டிக்காட்டுகிருர். தொல்காப்பியம், சொல்லதிகாரம் 214ஆம் நூற்பாவின் உரையில் சேனுவரையர் "இன்மை பொருட்கு மறுதலேயாதலின், பொருளின்கட் கிடக்கும் பண்பெனப்படாது" என எழுதியுள்ளார்.

அபாவமாவது பாவம்போலப் பாவப்பொருளின் தன்மையே— இன்மையாவது உள்பொருளின் உளதாந் தன்மைபோலவே அமைந்துள்ள இன்மைத்தன்மை எனக் கொள்ளின் அப்பொருள் உண்மையும் இன்மையும் இணேந்த பொருள் எனக்கொள்ள வேண்டி வரும். இக்கொள்கையும் சமணம் கூறும் "அத்திநாத்தி" என்பதும் ஒன்றேயாதலின் சிவஞானமுனிவர் கொள்ளும் உரை சைவசித்தாந்த இயலார் கொள்ளும் பொருளுண்மைக் கொள்கைக்கும் முரணுகும் என்பதை அறிஞர்கள் ஆய்தல் வேண்டும்.

மெய்கண்டார் காணும் அல்லது தாம் கண்டு நமக்குக் காட்டும் பொருளுண்மையைத் தெளிதல் பயனுடைய ஒன்றும்.

மங்கலவாழ்த்தினைக் குருமுதல்வர் வணக்கமாகக் கொள்வதே மெய்கண்டாரின் கொள்கையெனத் தெளிதல் வேண்டும். குருவும் இறைவனும் வேறுபட்டவரல்லர் என்ற கொள்கையைச் சைவசித் தாந்தத்துக்கு அடிப்படைத்தளமாக அமைத்தவர் மெய்கண்டார். அதனாலேயே "தம்முதல் குரு" எனப் பின்னரும் அமைத்துக் காட்டினார்.

பரஞ்சோதிமுனிவர் தமக்கு அருளிய வரலாறு இருப்பவும் பொல்லாப்பிள்ளையாரை மட்டும் கொள்வதுஎவ்வாறு பொருந்தும் என்ற வினாஎழும். தமக்கு உபதேசம் செய்தருளிய குருவும், கல்லால் மரத்தின்கீழ் நின்று அருளிய ஆலமர் செல்வனும், இப்பொல்லாப் பிள்ளையாரும் தம்மைப் பொறுத்தவரையில் ஒன்றுகவே கருதிய காரணத்தாலேயே இத்தகைய பொதுமை நிலை சார்ந்த குருவணக்கத்தை அருளுவாராயினர். இவ்வகையில் திருஞானசம்பந்தர் திருமுறையைப் பின்பற்றியே, அவர் பெய்த சொல்லைப் பயன்படுத்தியே இம் மங்கலவாழ்த்தினை மெய்கண்டார் அருளியுள்ளார்.

"பிடியதனுருவுமை கொள மிகுகரியது
வடிகொடு தனதடி வழிபடும் அவரிடர்
கடிகணபதி வர அருளினன் மிகு கொடை
படிவினர் பயில்வலிவலம் உறை இறையே"

என்பதனை ஒட்டியே "அருளிய" என்ற சொல்லைப் பெய்தருளினர். அடுத்து, 'பொல்லார்' என்ற சொல் உளி கொண்டு செதுக்கப் பெருதவர் என்ற பொதுப் பொருளோடு, தானே தோன்றியவர் என்ற சிறப்புப் பொருளையும் தருவதாகக் கொள்ளின் கல்லால் நிழல் அமர்ந்தவருக்கும் இப் பொல்லாருக்கும் வேற்றுமை இல்லை. இருவரும் தாந்தோன்றிய பெருந்தகைகளே யெனின், ஒரே பொருள் இவ்வாறு தம்மைத் தோற்றுவித்துக் கொண்டது என விளக்கம் கொள்ளலாம்.

## 'மலவின்மை' என்ற பொருளுக்கு மூலம்

அடுத்து "மலவில்லார்" என்பதற்கு மலவு இல்லாமை என்பதால் உணரப் பெறுபவர். பரம்பொருளை அறியும் தன்மையில் மாறுபட்ட கொள்கைகளெல்லாம் எழுந்தபோது ஒருகொள்கையைத் தவறு என்றும் இன்னொரு கொள்கையை உயர்வு என்றும் கொண்ட காலத்து உணரப் பெறுபவன் அல்லன்; அனைத்துக் கொள்கைகளும் பொருமறம் இலாமை ஒத்து நிற்க உணரும் உணர்வின்கண் உள்ளவன் என்ற ஓர் உண்மையைப் புலப்படுத்தவே மெய்கண்டார் 'மலவில்லார்' என்றதொடரைப் பயன்படுத்துகின்றார். எடுத்துக்காட்டாக, இறைவனை நிர்க்குணன் என்றும் சகுணன் என்றும் சொல்லப்பெறும் கொள்கைகள் உள்ளன. இரண்டும் முரண்பட நின்று, அவனை

உணர்ந்து கொள்ளும் வகையில் நமக்கு மயக்கத்தை விளைவிப்பவை களே. உண்மையில், மலைவு அல்லது மயக்கம் கொள்கைகளிலும் இல்லை ; அவனிடத்தும் மலைவு கொள்ளுதற்குரிய முரண்பாடுகள் இல்லை. இதனாலேயே அவன் அவ்வப் பொழுதும் முனிவர்களுக்கும் ஏனையோர்களுக்கும் உண்டாம் கொள்கை முரண்பாடுகளைத் தீர்த்து வைப்பவன் எனப்பெறுகிறான். அதேசமயத்தில் அவனிடத்திலும் முரண்பாடுகள் கொண்ட பொருள்கள் பலவற்றைக் காணலாம். ஆயினும், முரண்பாடுகள் இல்லை என்ற பொருள் படும் வண்ண மாகவே அச்சொல்லைப் பெய்தருளினார்.

''மலைவின்மை—முரண்பாடு'' இன்மை என்ற அடிப்படையை வகுத்துக் கொண்டு நூல் செய்யப் புகுகின்றார் ஆகையால் அதனை அருளும் பரம்பொருளை ''மலைவில்லார்'' என்றே சுட்டிக் காட்டி யருளுவாராயினர். திருஞானசம்பந்தப் பெருமான் திருக்கயிலைக் காட்சியைத் திருப்பிரமபுரத்தில் பெண்ணினல்லாளுடன் இணைந்த பெம்மான் என்று கண்டு காட்டியருளியது போன்றே மெய்கண்டார் 'மலைவின்மை' என்ற ஒரு அடிப்படைக் கருத்தினை மூலமாகக் கொண்டே தம்முடைய சாத்திரநூலை அமைத்துக் காட்ட முற்படு கின்றார் என்ற உண்மையைத் தெளியலாம். மெய்கண்டார் இத் தகைய ஒரு அடிப்படைக் கருத்தைக் கொள்ளுதற்கு உரிய மூலமாக இருந்தது காரைக்காலம்மையார் பாடிய அற்புதத்திருவந்தாதியே என்பதை நோக்கிக் காணுதல் வேண்டும்.

நூலறிவு பேசி நுழைவிலாதார் திரிக
நீலமணி மிடற்றான் நீர்மையே—மேலுவந்தது
எக்கோலத்து எவ்வுருவாய் எத்தவங்கள் செய்வார்க்கும்
அக்கோலத்து அவ்வுருவே யாம்.

என்றும்,

''பிறர் அறியலாகாப் பெருமையரும் தாமே
பிறர் அறியும் பேருணர்வும் தாமே''

என்றும்,

''ஏதொக்கும் ஏது ஒவ்வாது ஏதாகும் ஏதாகாது
ஏதொக்கும் என்பதனை யார் அறிவார்''

என்றும் இவ்வாறே முன்பின் முரணாக விளங்கும் கருத்துக்களை யெல்லாம் ஒவ்வொருபாட்டிலும் இணைத்துச் செல்வதைக் காணலாம். இவ்வாறு மலைவு கொள்வதற்குக் காரணமாகப் பலவகை அணிகள், உருவங்கள், செயல்கள், கருத்துரைகள் ஆகியவைகளுக்குக் காரணமாக இருந்தாலும், அவன் இத்தகைய மலைவுகளுக்கு அப்பாற் பட்ட நிலையில் விளங்கி நிற்பவன் என்ற கருத்தை அடிப்படையாகக் கொண்டே சைவசித்தாந்தம் விளக்கம் செய்யப் பெறுகிறது. ஆத லின், சைவசித்தாந்த உண்மைகளின் மூலநாயகனாக நிற்கும் பரம் பொருளை ''மலைவில்லார்'' என்ற சொல்லாற் குறிப்பிட்டுக் காட்டினார்

மெய்கண்டார். இதனாலேயே பொய் காட்டிப் பொய்யகற்றிப் போதானந்தப் பொருளாம் மெய்காட்டும் மெய்கண்டான்'' என மெய்கண்டார் சிறப்பித்தோதப் பெற்றார் என்பதாம்.

''மலவின்மை'' என்ற அடிப்படையிலேயே உண்மைப் பொருளியல்பை உணர்த்தியருளுகிறார் மெய்கண்டார். திருஞான சம்பந்தர் எவ்வாறு பரம் பொருளைக் கண்டாரோ அவ்வாறே 'உண்மை' என்பதனை நேர்நிறுத்தி அனுபவத்திற் கண்டு, அதன் இலக்கணமாக 'மலவின்மை'' என்பதை அமைத்துக் காட்டியருளு கின்றார்.

அடுத்த நிலையில், மலவில்லாராகி நின்ற பொருளே பொல்லா ரைத் தோற்றுவித்தது என்பது அப்பொருள் அருள்வடிவாக நின்று அருளைப் பொழிகின்றது என அறிவுறுத்தினார். திருவருளைப் பொழிந்து, ஞானத்தைத் தந்து திருவடியில் இணைத்துக் கொள்ளுதல் அப்பரம் பொருள் தாமே தம்மை வகுத்தெடுத்து வைத்துக் கொண்டு செயற் படும் வரைமுறை.

பரம்பொருளை அளவையியல் நெறியில் நின்று அறிய விரும்பும் தத்துவஞானிகளுக்கு அப்பொருள் ''மலவில்லாதது'' என்ற கருத் தை வழங்குகிறது. பரம்பொருளைப் பத்தியால் பரவுதல் செய்து துய்த்து மகிழவல்லவர்களுக்கு அப்பொருள் அருள்நிலையாகக் காட்சி வழங்குகிறது. பரம்பொருளை அறத்தின் முடிந்த பொருளாகும் நன்மை எனக் கருதி அறஞ்செய்வதன் மூலம் அடைய விரும்புபவர்களுக்கு அப்பொருள் ''நன்மை'' என நின்று விளக்கம் தருகிறது. இம் மூவருக்குமே அடிப்படை உண்மையாக இருப்பது மலவின்மை யே. அளவைநெறியால் நின்றும் ஆகம நெறியால் அறிந்தும் விளங்கிக் கொள்ள முற்படும் தத்துவஞானிகளுக்கு

''ஒன்றுரைத்தது ஒன்றுரையாச் சாத்திரங்கள் ஒன்றாக
நின்றுரைத்து நிச்சயிக்க மாட்டாவால்''

என்றும்,

''யாதேனுங் காரணத்தால் எவ்வுலகில் எத்திறமும்
மாதேயும் பாகன் இலச்சினையே—ஆதலினால்
பேதமே செய்வாய் அபேதமே செய்திடுவாய்
பேதா பேதஞ் செய்வாய் பின்''

என்றுங் கூறுவனபோல முரண்பாடுகளுக்கு அப்பால் முரண் பாடுகள் கடந்த நிலையில் விளங்குவதே அப்பொருள் என்றும்; பக்தியால் அப்பரம்பொருளைத் துய்த்து மகிழ வேண்டும் நிலையில் உள்ளவர்களுக்கும் துய்ப்பானும் துய்க்கப்படுபொருளும் ஆகிய வேற்றுமை கடந்த நிலையில் விளங்குவது என்ற பொருளில் 'மலவு இல்லார்' என்றும்; அறக்கொள்கையின் முடிவில் பரம் பொருளை அறிய முற்படுங்காலத்தில் அறம் என்றும் மறம் என்றும் கருதப் பெறும் வேறுபாடுகளுக்கு அப்பாற்பட்ட நன்மை என்பதே அது

என்ற பொருளில் "மலைவு இல்லார்" என்றும்; இவ்வாறு மூவகை யாலும் பரம்பொருளை அறிய, துய்க்க, அடைய முற்படுவோர் அனை வருக்கும் மூலக் கருத்தாகிய "*மலைவில்லாமை*" என்ற தொடரை அருளி, அதுவே பரம்பொருளின் உண்மைநிலை எனவும் கூறி, பொய் யகற்றி, மெய்கண்ட காரணத்தால் அவர் மெய்கண்டாராயினர்.

## *மலைவின்மையும் நன்மையும்*

மெய்ப் பொருளியலாய்வுலகில் "*பரம் பொருளின் தன்மை மலை வில்லாமையே*" என்று மெய்கண்டார் கொள்ளும் கருத்து உலகப் பொதுமை வாய்ந்ததாக வைத்து எண்ணப் பெற வேண்டியதே. எதிர்மறை முகத்தால் "மலைவில்லார்" என்று கூறினும் உடன்பாட்டு முகத்தால் "*நன்மை*" என்பதே அவர்காட்டும் பரம்பொருளின் தன்மையாகும்.

நன்மை வேறு; நன்று வேறு. ஒவ்வொரு துறையிலும் முரண் பாடு கொண்ட இருவேறு கருத்துக்கள் உண்டு. அவற்றின் இணைப் பாக இல்லாமல் அவற்றைக் கடந்த ஒன்று அத்துறையில் நன்மை. இவ்வாறு பல்வகைத்துறைகளிலும் வந்த கடந்த நிலையாகும் நன் மைகள் அனைத்தும் இணைந்த நன்மையே இங்கே குறிப்பிடப்பெறும் நன்மை. எனவே மங்கல வாழ்த்துப் பகுதியில் சைவசித்தாந்தப் பெருவுண்மையின் மூலப் பொருள் 'மலைவின்மை' என்ற அடிப்படை யில் "மலைவில்லார்" எனவும், அப்பொருளே அனைவருக்கும் அனுபவப் பொருளாய் உடன்பாட்டு நிலையில் "நன்மை" என்ற பொருளாய் விளங்கி "நல்லார்" என்ற உடன்பாட்டுச் சொல்லால் குறிக்கப் பெறுகிறது எனவும், அப்பரம் பொருளின் திருவடிகளில் இணைந்தவர்கள் நல்லார்களே எனவும் கூறியருளினர் எனக்கொள்ள வேண்டும்.

இவ்வாறு துறைகள் பல; துறைகள் பலவற்றின் முடிவுகளாகிய நன்மைகள் பல; நன்மைகள் பலவற்றின் இணைப்பு எனப்பெறும் முழுமைவாய்ந்த "*நன்மை*" என்பதே அப்பரம் பொருளின் உடன் பாட்டுத்தன்மை என்பதை மெய்கண்டார் அப்பரடிகள் தேவாரத்தி லிருந்து எடுத்த ஒரு தெளிவாக நமக்குத் தந்தருளுகின்றார்.

அப்பரடிகள் திருச்சத்திமுற்றம் என்ற திருத்தலத்துக்குச் சென்று அங்குள்ள சிவக்கொழுந்தினை வழிபட்டபின் "கோவாய் முடுகி அடுதிறற் கூற்றம் குமைப்பதன்முன், பூவார் அடிச்சுவடு என்மேற் பொறித்து வை" என்று வேண்டுகின்றார்கள். அப்போது "நல்லூ ருக்கு வா" என்றோர் அருளோசை எழுகிறது. அவ்வண்ணமே திரு நல்லூரை அடைந்தபோது "உம்முடைய நினைப்பதனை முடிக்கின் றோம்" எனக் கூறி, அவர்தம் திருமுடியினில் தம் திருவடியை அமைத்தருளுகின்றார். திருவடி அனுபவத்தை அப்பரடிகள் கூறியருளும் அருள்வாக்கிற் காணலாம்.

"........................ சிறந்து வானோர்
இனந்துருவி மணிமகுடத்து ஏறத் துற்ற
இளமலர்கள் போதவிழ்ந்து மதுவாய்ப் பில்கி
நனைந்தனைய திருவடி என் தலைமேல் வைத்தார்
நல்லூர் எம்பெருமானார் நல்லவாறே"

என்றும், நன்னலத்த திருவடி என்றும், நாடேறு திருவடி என்றும், நற்றவர்சேர் திருவடி என்றும், நலங்கிளருந்திருவடி என்றும், நன்றருளுந் திருவடி என்றும் குறிப்பிட்டருளுகின்றார். இப்பதிகம் முழுவதிலும் இறைவன் அமைத்தருளிய பலவகைத் துறைகளையும், அவற்றிக்கெல்லாம் முடிந்த முடிவாகப் பலவகை நன்மைகளையும் வைத்துள்ளான் இறைவன் என்பதையும், அந் நன்மைகளின் முடிந்த முடிவாகிய "முழுத்தநன்மை" யாக விளங்குபவனே இறைவன் என்பதையும் விளக்கியருளுவதைக் காணலாம். "நல்லவாறே" என்ற தொடர் நன்மை என்பதன் நுட்பம் பலவற்றையும் உணர்த்தும் கருத்தமைவோடு ஒவ்வொரு செய்யுளின் இறுதியிலும் அமைத்தருளுகிறார் அப்பரடிகள்.

இதுகாறும் எழுதிப் போந்தவற்றால், மெய்கண்டார் அமைத்தருளிய மங்கலவாழ்த்தானது கல்லால் நிழலில் தங்கிய பரம் பொருளானது மலவின்மை, நன்மை என்ற இரு பண்புகளாய் எதிர்மறையாலும் உடன்பாட்டாலும் உணர நின்ற ஒன்று என்பதும், மலவில்லாரும் பொல்லாரும் இடமாற்றங்களால் இருவரேயாயினும் ஒருவரே எனவும், அவ்வாறு அமைந்தது திருவருளே எனவும், திருவடியே நன்மையின் முடிவிடம் எனவும், அதனைச் சூடுபவர்கள் நல்லார் எனவும் அமைத்துக் காட்டினாராகக் கொள்ளல் வேண்டும்.

## மெய்கண்டாரின் அவையடக்கம்

இனி, இரண்டாவதாகிய அவையடக்கச் செய்யுள் மேலும் சில உண்மைகளைத் தெளிய வைக்கிறது.

அவையடக்கத்துக்கு முன்னுரை எழுதவந்த மாதவச்சிவஞான சுவாமிகள் "இஃது அவையடக்கம் கூறுமுகத்தானே ஈண்டுஎடுத்துக் கொண்ட சித்தாந்த சைவரின் உயர்வும் ஏனைச் சமயத்தார்களது இழிவும் கூறுகின்றது" என்று குறிப்பிட்டருளுகின்றார்கள்.

மெய்கண்டார் அவையடக்கம் கூறும் முறையைப் பின்பற்றுவதிலிருந்தே பின்வரும் நூற்பொருளுக்கும் தமக்கும் உள்ள உரிமையைத் தெளிவாகச் சொல்லிவிட்டார் என்றே கொள்ளுதல் வேண்டும். முன்னர் இருந்த ஒன்றை மொழிமாற்றம் செய்ய முற்படும் நிலையில் பொருட்கருத்தைப் பொறுத்தவரையில் மொழிபெயர்ப்பாளன் கவலைப்படவேண்டிய நியாயம் இல்லை. சுருங்கச் சொன்னால் அவையடக்கம் கூறவேண்டிய அவசியம் இல்லை. ஒருமொழியில் உள்ள சில மூலக்கருத்துக்களை வைத்துக்கொண்டு வேற்றுமொழியில் நூல் செய்யும்போது அது நேர் மொழிபெயர்ப்பாகாமல் சிற்சில

மாற்றங்களையும் உடன் கொண்டு செல்லுகின்றமையால் மாற்றங்களை மேற்கொண்டமைக்காக முதனூலாசிரியனை அவையடக்கம் மூலமாக வணங்கியும், எழுத முற்படும் மொழியிலுள்ளவர்களுக்கு மூலத்தில் உள்ள செய்தியோடு சில மாற்றமும் செய்துள்ளேன் என்ற வகையில் அவர்களுக்கும் அவையடக்கம் கூறுமுகமாக வணக்கம் செய்தும் அவையடக்கம் கூறல் மரபு. இதனைக் கம்பராமாயணம் போன்றவற்றிற் காணலாம். மெய்கண்டார் அத்தகையதொரு அவையடக்கத்தைக் கூறுவதாகக் கொள்வதற்கில்லை.

*மெய்கண்டார் காட்டும் தத்துவ ஆய்வின் அடிப்படைவிதி*

மெய்கண்டார் இச் செய்யுள் மூலம் மெய்ப்பொருளியலை - புலன் கடந்த பொருளியலை அறிவதற்குக் கடைப்பிடிக்க வேண்டிய முறை ஒன்றினை எடுத்துச் சொல்லுகின்றார். "தம்மை உணர்ந்து தமையுடைய தன்னை உணரும் முறை" என்பது மெய்கண்டாரின் சொல்லமைப்பு.

தம்மை உணர்ந்து, தம்மை உடைய 'தன்' என்ற ஒன்றை உணர வேண்டும் என்பது அத்தொடரின் விளக்கம். இத்தொடருக்கு "உடைப்பொருளாகிய தம்இயல்பினை உணர்ந்து, தம்மை உடையானாகிய தலைவனை உணரும் சித்தாந்த சைவர்" என உரை எழுதினார். முதன்முதலாகத் தம்மை இறைவனுக்குரிய உடைமைப் பொருளாக உணர வேண்டும் என்ற கருத்தை எழுதிய மாதவச் சிவஞான யோகிகள், அவ்வாறே தம்மை உடைமைப் பொருளாக உணர்ந்த வேறு இருவரையுங் குறிப்பிடுகிறார். பாஞ்சராத்திரிகளும் சிவாத்துவித சைவரும் தம்மை இறைவனுக்கு உடைமைப் பொருளாகவே கொண்டாலும் அவர்களும் குறைபாடுடையவர்களே. பாஞ்சராத்திரிகள் பிறகுற்றங்களுக்கு மேலாக, உடையானல்லாதானை உடையானாகக் கொள்ளும் தவறுடையவர்கள்; சிவாத்துவித சைவர்களோ உடையானது சிற்சத்திக்குப் பரிணமம் கூறுவதனால் தம்மை உணராதவர்களே என்று கூறுகிறார்.

மெய்கண்டார் "தம்மை உணர்ந்து" என்று மட்டுமே கூறினார். சிவஞானமுனிவர் "தம்மை உடைமைப் பொருளாக உணர்ந்து" என விரிவுரையாக எழுதினார். தம்மை இறைவனுக்கு உடைமைப் பொருள் என்று அமைத்துக் கொள்ளும் முறையைவலியுறுத்தும் சிவஞானமுனிவர் எழுத்திலிருந்து-அது தவற்றுக்குக் கொண்டு போய் நம்மைச் சேர்க்காமல் நன் முறையில் மெய்ப் பொருளைப் புரிந்து கொள்ள உதவும் முறை என்று நாம் உறுதிப்படுத்திக் கொள்ள இயலவில்லை. ஏனெனில், அம்முறையைப் பின்பற்றிச் சென்ற பாஞ்சராத்திரிகளும், சிவாத்துவிதசைவரும் உள்ளதை உள்ளவாறு கண்டறிய முடியாதவாறு உழன்றனர் என்பதைச் சிவஞான முனிவரே தெளிவுறுத்துகிறார். ஆயினும், சிவஞான முனிவர் இவ்வாறு கொள்வதற்குக் காரணம் இல்லாமலும் இல்லை. "தம்மை உணர்ந்து தமையுடைய தன் உணர்வார்" என்ற

முதல் வரியில் அமைந்த இரண்டாவது பகுதியாகிய 'தமைஉடைய தன்'' என்பதற்கு அழுத்தங் கொடுத்துச் சிந்தித்தார் சிவஞான முனிவர். எவ்வாருயினும் தம்மை உடைமைப் பொருளாக வைத்து உணரும் முறையே சிறந்தது எனக் கொள்வதற்கில்லே. ஆயினும் மெய்கண்டார் இதனை ஒருவகையில் உலகந்தழுவிய பொதுமை முறையாக அமைத்து வெளியிட்டிருக்கிருர் என்று கொள்வோமாயின் இதன் உண்மையான விளக்கத்தையும் நாம் காணுதல் வேண்டும்.

உலகத் தத்துவ ஞானிகள் பலரும் ''தம்மை உணர்தல்'' என்ற முறையையே உண்மை அறிவைப் பெறும் முதல் முறை எனக் கண்டிருக்கிருர்கள். உன்னேயே அறிய முற்படு அல்லது உன்னேயே நீ அறிவாய் எனத் தொடங்கிய உரை சாக்ரடீஸ் என்ற கிரேக்கத் தத்துவஞானியினுடையது. தற்காலத் தத்துவச் சிந்தனையின் தந்தை எனப் பெறும் டேக்கார்ட் என்பார் கூடத் தன்னேயே முதன்முதல் ஆராயத் தொடங்க வேண்டும் என்று கூறியதோடன்றிச் செயற் படுத்தியுங் காட்டினுர். ''நானுர், என் உள்ளமார், ஞானங்களார்'' என்று இச்சிந்தனையின் தொடக்க முறையைச் செம்மைப் படுத்திக் காட்டுகின்ருர் மாணிக்கவாசகர். மெய்கண்டார் இக்கருத்தை உடன் கொண்டு தான் தம்மை உணர்ந்து என்று குறிப்பிடுகிருரா?

''தம்மை உணர்ந்து'' என்பதற்கு மணிவாசகப் பெருந்தகை அருளிய *திருவாசகம்* முழுமையையும் பொருளாகக் கொள்ளு கின்ருர்.

''நாயிற் கடையாய்க் கிடந்த அடியேற்குத்
தாயிற் சிறந்த தயாவான தத்துவனே''

என்றும், யானே பொய், என் நெஞ்சும் பொய், எல்லாம் பொய் என்றும் யான் விச்சுக்கேடு பொய்க்கு இங்கு ஆகாது என இருந்தும்,

''பொய்யாய செல்வத்தே புக்கழுந்தி நாடோறும்
மெய்யாக் கருதிக் கிடந்தேனே ஆட்கொண்ட
ஐயா என் ஞருயிரே''

என, இவ்வாறு *'திருக்கோத்தும்பி'*, என்ற பகுதிமுழுவதிலும் பாடுவதைக் கண்டு கதறுகின்ருர் மெய்கண்டார்.

''நாயேனைத் தன்னடிகள் பாடுவித்த நாயகனே''

என்று உருகுவதைக் கண்டு உருகுகின்ருர் மெய்கண்டார். மெய்கண் டாரின் வாழ்க்கை அனுபவமும் அவருக்குத் துணே செய்கின்றது.

அச்சுதக்களப்பாளருக்கு மகப்பேறில்லே என்பது ஊழ். அச்சுதக் களப்பாளரின் குருவாகிய அருணந்தி சிவாசாரியார் தேவாரத்திற் கயிறு சாத்திப் பார்க்க,

''பேயடையா பிறிவெய்தும் பிள்ளேயினேடு உள்ளம் நிறை
வாயினவே வரம்பெறுவர் ஐயுற வேண்டா ஒன்றும்

வேயனதோள் உமைபங்கன் வெண்காட்டு முக்குளநீர்
தோய்வினையார் அவர்தம்மைத் தோயாவாம் தீவினையே''

என்ற திருப்பாட்டு வரவே, அதன்வண்ணம் மகப்பேறு பெறும் திருவெய்தினர் அச்சுதக் களப்பாளர். அவருக்குக் குழந்தையாக வந்து பிறக்கும் தகுதியுடையார் வினைப்பயன் காரணமாக வரவில்லை. வினைகளெல்லாம் நீங்கிய நிலையில் இருந்த அருளாளர் ஒருவரே இவ்வாறு வரநேர்கிறது. வந்த அவருக்கு இரண்டாண்டில் திருவருள் நெறியால் பரஞ்சோதியார் உபதேசம் கிடைக்கிறது. இவ்வளவும் மெய்கண்டாரின் வாழ்வியலனுபவம். வினைகள் நீங்கி நின்ற தம்மையும் திருவருள் இவ்வாறு நெறிப்படுத்துகிறது எனக் கண்டார். இதனையே நம்பியாண்டார் நம்பி 'யான் இறைவன் ஒருவன் உண்டு என நினைப்பதற்கு முன்னேமேயே என்னை உணர்ந்தான் இறைவன்; என்னுடைய துன்பங்களைக் கெடுத்தான்; நான் எண்ண முற்படும் நிலையில் தன்னை நினையத் தருகின்றான்' எனத்''தம்மை உணர்தல்'' என்ற முறைக்கு ஒரு விளக்கம் செய்து காட்டினர்.

',என்னை உணர்ந்து என் இடர் கெடுத்துத்
தன்னை நினையத் தருகின்றான்''

என்பது திருநாரையூர்ப் பொல்லாப் பிள்ளையார் திருவிரட்டை மணிமாலையின் முதற் செய்யுளாம்.

எனவே, தத்தம் வாழ்வியல் அனுபவநிகழ்வுகளையே விரிவாக விசாரித்தறிதல் வேண்டும். அவ்வாறு அறியப்புகில் திருவருள் ஒன்று செலுத்த நாமனைவரும் செல்லும் தன்மையுடையேம் என்ற முடிவுக்கு வருவோம். அவ்வாறு வந்தபின் திருவருளின் வழிப்பட்டு, நம் செயலற்று நாம் ஒரு உடைப் பொருளென நிற்கும் நிலை வரும்; அதன்பின் திருவருளே தன்னை உணர்விக்கும். இவ்வாறன்றி, வேறுநிலையில் அறிய முற்படின் அது குறைபாடுடையதேயாகும். இவ்வாறுதான் உணர்தல் முறை அமைய வேண்டும் என்று மெய்கண்டார் கருதுவதற்கு மூலமாக அமைந்தது காரைக்காலம் மையாரின் திருவார்த்தையே.

அருளே உலகெலாம் ஆள்விப்பது ஈசன்
அருளே பிறப்பறுப்பது ஆனல் - **அருளாலே**
**மெய்ப்பொருளை நோக்கும் விதியுடையேன்** எஞ்ஞான்றும்
எப்பொருளும் ஆவது எனக்கு

என்பது ***அற்புதத்திருவந்தாதியில்*** ஒன்பதாம் செய்யுள்.

எனவே, மெய்ப்பொருளை உணரப்புகுவார் தம்மை வழிப் படுத்துவது திருவருளே என்பதை அல்லது தமக்குமேலாக ஒன்று நின்று தம்மைச் செயற்படுத்துகிறது என்பதைத் தம் அனுபவத்தாற் கண்டு தெளிய வேண்டும். பின்னர் தம்மைச் செயற்படுத்தும் அப்பெரும் பொருளின் உடைமையே தாம் எனத் தெளிதல் வேண்டும். பின்னர், அத்திருவருளில் அடங்கித் தம் செயலற்று

நிற்றல் வேண்டும், அதன் பின்னர் திருவருளே கண்ணைக் காணுதல் வேண்டும்.

மேற்கூறிய கருத்தினைச் சாத்திரத் தொடர்களால் குறிப்பிட்டு உணர முற்படின், பாசஞானத்தாலும் பசுஞானத்தாலும் பார்ப்பரிய பரம்பொருளைப் பதிஞானத்தால் உணர்தல் வேண்டும் என்ற தொடர்களால் அறியலாம். பதிஞானத்தால் அறியும் போதுதான் தலைவனையும் அறிய முடியும், தன்னையும் அறிய முடியும், தனக்கு அயலானவற்றையும் அறியமுடியும்.

இவ்வாறு அறியும் முறையை மேற்கொண்டவர்கள் இந்நூலைக் குறை கூறார்; எம்மை இகழார். ஏன் எனில், அவர்களும் திருவருள் வயப்பட்டு நின்று உணர்கின்றாராகலின் திருவருள் வயப்பட்டு நின்று, என் செயலின்றி, நாதன் தன் செயலால் நிகழும் இத்தகைய யான், கேவலம் ஒரு உடைமையாக நின்று வெளிப்படுத்துகின்றேன் என்ற அவ்வளவே, என்பதாகிய என்நிலையை — யான் உடைமை என நிற்கும் நிலையை அவர்களும் திருவருளால் உணர்வராதலின் எம்மை இகழார். ஏனையோர் தம்மை அவ்வாறு உணரவில்லை. முழுமையாக மெய்ப்பொருளைத் தெரிந்துகொள்ளும் ஆற்றல் இல்லாதவர்கள் ஆயினர். அவர்கள் கருத்துக்கள் *உடங்கியைந்து தம்முட் புணராமை* என்ற குற்றத்துக்கு உட்படும். உடங்கியைதல் என்பதை முதற்செய்யுளில் "மலைவின்மை" என்பதாற் சுட்டிக் காட்டினார்; தம்முட் புணராமை என்பதை "நன்மை" என்பதாற் சுட்டிக் காட்டினார். உடங்கியைதல் என்பது வேறுபாடின்றி இணைதல் என்பதையும் தம்முட் புணர்தல் என்பது அனைத்தையும் உளப்படுத்துதல் என்பதையும் இணைத்துக் காட்டி மெய்கண்டார் 'உண்மை' பற்றிய சைவசித்தாந்தக் கொள்கையை வலியுறுத்துவாராயினர்.

மேலே கூறிய இக்கருத்தை விளக்குவது போலவே சிறப்புப் பாயிரம் அமைக்கப் பெற்றிருப்பதையும் கூர்ந்து கவனித்தல் வேண்டும். "மலர்தலை" என்று தொடங்கும் சிறப்புப்பாயிரம் "உலகில் உள்ள இருள் கெடுவதற்காகப் பலராலும் புகழப்பெறும் ஞாயிறு விரிந்து சென்றாலன்றிக் கண்ணனது காணும் தன்மை பெறுதவாறுபோலப் பெரும்பெயர்க் கடவுளாற் கண்டு இருள் நீங்க வேண்டும்" என்று கூறுகிறது. சூரியன் வெளிப்பட்டு வாராத விடத்துக் கண்ணனது வேறுபல விளக்கொளிகளினால் விளங்கிக் கொள்ள முற்பட்ட காலத்தும் முழுமையாக விளங்கிக் கொள்ள முடியாது. ஞாயிறு வந்தாலன்றி, முழுமையாக இருட்டை ஓட்டினாலன்றிக் கண்ணனது எப்பொருளையும் முழுமையாகக் காணுதல் என்பது இயலாததாகும். அவ்வாறே பெரும் பெயர்ப் பொருள் எனப்பெறும் மகாவாக்கியங்களுக்கு மூலம் என உணர்த்தப் பெறும் பரம்பொருள் மூலமாகக் காணும் தன்மை பெற வேண்டும் என விரித்துரைக்கிறது. எனவே, பதியின் துணைகொண்டு, தற்போதமிழந்து அதன் வழிப்படியே இயங்கி, தற்செயலற்று, அறிவிக்க அறியும்

நிலையை மேற்கொண்டு திருவருளின் வழியே இயங்கும் தன்மை பெறுதல் வேண்டும். அதன் துணைக்கொண்டே ஆன்மாவின் தன்மையை உணரவேண்டும், ஆராய வேண்டும் என்று விரித்துக் காட்டுகிறது அப்பாயிரம்.

### கேளாம் புறன்

இனி, அவையடக்கச் செய்யுளின் இறுதியாக நிற்கும் தொடர் ஒன்று நம் சிந்தனைக் குரியது. "கேளாம் புறன்" என்பதே அது. இது புறச்சமயத்தவர்களின் இழிவை உளங்கொண்டு கூறியது என்பது சிவஞான முனிவரின் உரை.

மெய்கண்டார் சிவஞானபோதப் பன்னிரு சூத்திரங்களில் சைவ சித்தாந்த நுண்பொருளைச் சித்தாந்தமாகச் சொல்லியருளவே விழை கின்றார். சுபக்கம் என்ற பகுதியையே தம்நூலில் அமைத்துக்காட்ட விரும்புகிறார். புறச்சமயங்களை எடுத்துக்காட்டி, அவைகளை மறுத் தோதும் பரபக்க நூலாக அமைத்துக்காட்ட விரும்பவில்லை என் பதும் தெரிய வருகிறது. பிற சமயக் கருத்துக்கள் இவையிவை எனக் காணுமாறு சிற்சில வரிகள் காணப் பெறினும் அவை தம்பக்கக் கொள்கையை வலியுறுத்தும் வரைகோடுகளாகவே கொள்ள வேண்டும் என்ற கொள்கையை மெய்கண்டார் பின்பற்றுகின்றார். இதனை 'ஆன்ம நிர்ணயம்' கூறும் மூன்றாஞ் சூத்திரத்தே அமைத் தருளுவதைக் காணலாம். பிறசமயக் கருத்துக்களை உடன் கொண்டு அவைகளுக்கு விளக்கமாக அமைத்துக்காட்டும் சில காரண உரை களை இயற்றி, அவ்வுரைகளின் அடிப்படையிலேயே "ஆன்மா உண்டு" என முடித்தமைத்துக் காட்டுவதன் மூலம் பரபக்கத்தை விரிவாகச் செய்வதை மெய்கண்டார் அத்துணை அளவுக்கு விரும்பி னார் எனக் கொள்ள இடந்தரவில்லை.

மேலும், பல்வகைச் சமயங்களும் அவ்வவ்வதிகாரிகளுக்கு ஏற்பவே இறைபரம் பொருளால் விளக்கிக் கூறப்பெற்றவைகளாத லின், அவ்வச் சமயக் கருத்துக்கள் அவ்வவர் அதிகார முறையை ஒட்டியநிலையில் உண்மை நிலையை உணர்த்துவனவாகவே கொள்ளு தல்வேண்டும் என்ற சைவசித்தாந்தக் கொள்கைக்கு மூலமாக அமை யும் வண்ணமே "கேளாம் புறன்" என்ற தொடரை அமைத்துக் காட்டினார். ஆயினும் வளர்ச்சிநிலை பெற்றுயர்ந்த நிலையில், திரு வருளின் வழி நின்று, கொள்ளத்தகுவனவான கருத்துக்கள் இவை என விளக்கிக்கூறி, விளங்கிக் கொள்ளுதலே முறை என்பதனை உளங்கொள்ளுதலே மெய்கண்டாரின் கருத்து எனக் கொள்வதில் தவறில்லை. இதனைத் தெளிவுற உணர்த்தும் காரைக்காலம்மையார் திருவாக்கைக் காணலாம்.

"அறிவானுந் தானே அறிவிப்பான் தானே
அறிவாய் அறிகின்றான் தானே — அறிகின்ற
மெய்ப்பொருளுந் தானே"

என்பதாம்.

### முடிப்புரை

கல்லால் நிழல் மலைவில்லார்' என்ற மங்கல வாழ்த்தினுல் பரம் பொருளை மலைவின்மை, நன்மை என்ற இருபண்புகளின் கொள்கல மாக வகுத்துக் காட்டினர் என்பது பெற்ரும். இவ்விரண்டு கொள்கை களும் தத்துவஇயல் ஆய்விற்குப் பெரிதும் துணை புரியும் பொதுமைக் கருத்துக்களாம் என்பதும் தெளிவுறுத்தப் பெற்றன.

''தம்மை உணர்ந்து'' என்ற இரண்டாந் தற்சிறப்புப்பாயிரம் அவையடக்கச்செய்யுளாயினும் மெய்ப்பொருளியலை ஆய்வதற்குரிய விதியினை வகுத்துக்காட்டும் முறையை மேற் கொண்டுள்ளமை விளக்கப் பெற்றது. அது ''தம்மை உணர்ந்து தமையுடைய தன் னுணர்தல்'' என்ற முறை. ''திருவருளால் மெய்ப்பொருளை நோக்கும் விதியுடையேன்'' என்ற காரைக்காலம்மையார் திரு வாக்கினேடு இணைத்துச் சிந்திக்க வேண்டும் என்பது விளக்கப் பெற்றது.

இவைகளையெல்லாம் இணைத்துச் சிந்திப்பதன் மூலம் மெய் கண்டார் திருவருளின் வழிநின்று ஒரு தனிமரபினை வகுத்தெடுத்துக் காட்டி, தத்துவ நூலின் நெறிமுறைகளை உளங்கொளச் செய்து காட்டிய முதனூலாசிரியர் என்று கொள்வது தேற்றம்.

திருஞானசம்பந்தரின் வாக்குக்களையே முன்னிட்டுக் கொண்டு செல்லுகிருர் மெய்கண்டார் என்று கருதுமாறு, அவர் திருநல்லம் திருப்பதிகத்தின் முதற்பாட்டில்

''கல்லால் நிழல்மேய கறைசேர் கண்டா என்று
எல்லா மொழியாலும் இமையோர் தொழுதேத்த
..... ...... ......... ............... . . ..... ... ..
நல்லான் நமையாள்வான் நல்லம் நகரானே''

என்றும், திருநாலூர் மயானத் திருப்பதிகத்தில்

''கல்லால் நிழன்மேவிக் காமுறுசீர் நால்வர்க்கன்று
எல்லா அறனுரையும் இன்னருளாற் சொல்லினுன்
நல்லார் தொழுதேத்தும் நாலூர் மயானத்தைச்
சொல்லா தவரெல்லாம் செல்லாதார் **தொல்நெறிக்கே**

என்றும் கூறியருளினுர். 'தொல்நெறி' என்பதற்குத் தொன்மை யாகிய சைவசித்தாந்த நெறி என்று சான்ருேர் உரை கொண்டுள் ளனர் என்பதும் தெளியற்பாலது. இனி, யாப்பமைதியையுங் கூட ஞானசம்பந்தரிடமிருந்தே கொள்ளுகின்ருர் என்பதைக் கீழ்வரும் தேவாரத்தால் அறியலாம்.

கல்லால் நீழல்
அல்லாத் தேவை
நல்லார் பேணுர்
அல்லோம் நாமே

# 3. அந்தம் ஆதி

*முன்னுரை*

மெய்கண்டார் அருளிய சிவஞானபோதம் பன்னிரண்டு நூற்பாக்களை உடையது நாற்பது அடியுள்ளது. இருநூற்றுப் பதினறு சொற்களை உடையது. அறுநூற்று இருபத்து நான்கு எழுத்துக்களைக் கொண்டு விளங்குவது. முன் ஆறு நூற்பாக்களையும் பொதுவதிகாரம் எனவும் பின் ஆறு நூற்பாக்களையும் உண்மையதிகாரம் எனவும் கொள்வது மரபு. நூற்பாக்களின் அடிகளும் பொதுவதிகாரத்துக்கு இருபதும் உண்மையதிகாரத்துக்கு இருபதும் ஆகவே அமைந்துள்ளன. இந்நூலுள் பரம் பொருளைக் குறிக்கும் சொற்களாக அந்தம் ஆதி, தமி, சிவம், தம்முதல், அரன், பதி, இறை என்பவை எடுத்தாளப் பெறுகின்றன. அவற்றுள் அரன் என்ற சொல் மூன்று இடங்களிலும் பதி என்ற சொல் இரண்டிடங்களிலும் எடுத்தாளப் பெற்றுள்ளன. முதல் நூற்பாவில் 'அந்தம் ஆதி' என்ற சொல் எடுத்தாளப் பெற்றிருப்பதால் அதனையே தலைப்பாகக் கொண்டு இப்பிரிவு அமைகிறது

பொதுவதிகாரத்தினுள் அமைந்த ஆறு நூற்பாக்களும் முறையே பதியுண்மை, பாசவுண்மை, பசுவுண்மை, பசுஇலக்கணம், பாச இலக்கணம், பதியிலக்கணம் என்பவைகளை உணர்த்துவனவாகக் கொள்ளுதல் மரபு. பதி, பசு, பாசம் என்ற முப்பொருளுண்மையைக் கொண்டு விளங்குவது சைவசித்தாந்தம் ஆதலின் அம் முறைப்படி முப்பொருள்களும் உள்பொருள்களே எனச் சான்று காட்டி நிறுவுவது முதன் மூன்று நூற்பாக்களின் உட்கிடை எனவும் அம்முப் பொருள்களின் இயல்புகளை விளக்கிக் காட்டுவது அடுத்த மூன்று நூற்பாக்களின் அரும் பொருளமைதியாகும் எனவும் சான்றோர் கொள்ளுவர். இவ்வகையில் முதல் நூற்பாவானது 'பதிப்பொருள்' என்ற ஒரு பொருள் உண்டு என்பதை அளவை முறைகளால் நிலைநாட்டுகின்றது என்ற கருத்துக் கொள்ளக் கிடக்கிறது. இந் நூற்பாவின் பொருள் ஞானவாரமுதமுண்ட பிள்ளையாரின் முதல் திருமுறையை மூலமாகக் கொண்டு எவ்வாறு திரட்டி யெடுத்துக் கொடுக்கப் பெறுகிறது என்பதை இப் பிரிவிற் காணலாம்.

''அவன் அவள் அதுஎனும் அவை மூவினைமையின்
தோற்றிய திதியே ஒடுங்கி மலத்து உளதாம்
அந்தம் ஆதி என்மனார் புலவர்''

என்ற இம் முதலாம் நூற்பா ''என்மனார் புலவர்'' என்பதைச் சுட்டிக் காட்டி அமைகிறது. தமிழக மரபின் வழி, இலக்கண நூற்பாக்களில் இவ்வாறு கொள்ளப் பெறுவதை அறியலாம். 'கல்லால்' எனத் தொடங்கும் முதற்செய்யுளில் நல்லார் என எடுத்து மொழிந்து அவரையே தம்மையுணர்ந்து தமையுடைய தன்னுணர்வார் என விரித்து விளக்கி, அவ்வாறு விளக்கப் பெற்றவரையே இம் முதல் நூற்பாவில் 'புலவர்' எனக் குறிப்பிட்டருளுகின்றார். புலம், புலன் என்ற சொற்கள் 'வழி' என்ற பொருளைத் தரும். புலமை என்பது வழியாற் பெற்ற அறிவு என்ற பொருளைத் தரும். வழியானது அறிவு வருவதற்கு ஒரு வாயிலே அன்றி, அறிவை அறியும் ஆற்றல் அதற்கு இல்லை. புலன்களின் வழியாக அறிவைப் பெறுவது உயிர். அவ்வாறே உயிரானது தான் ஒரு புலனாக - வழியாக நின்று திருவருளுணர்த்த உணரும் நிலையைப் பெற்றவர்களே புலவர்கள் ஆவர். பிறவழிகளை-புலன்களைப் பயன்படுத்தி அறிபவர் வேறு; தாமே புலனாக - வழியாக நின்று திருவருள் உணர்த்துவதை உணருகின்றவர் வேறு. ஞான வாரமுதமுண்ட பிள்ளையார் சிவஞான சம்பந்தர் ஆயினார். தம்மைச் சிவஞானத்தோடு இணைத்துக் கொண்டு, அச்சிவஞானம் வருதற்குரிய -வெளிப்படுதற்குரிய வழியாக- புலமாக நின்று உணர்ந்த பெருந்தகை ஆவர். ஆதலின் 'புலவர்' என்ற சொல்லால் குறிக்கப் பெறுதற்கு முழுமைத் தகுதியும் பெற்றவர் திருஞானசம்பந்தரேயாவர்.

காட்சியளவையையே துணையாக வைத்துக் கண்டும், உலகவருக் குக் காட்டியும் நின்ற முதற்குரவர் என்பதையும் ஒரு நெறிய மனம் வைத்துணர் ஞானசம்பந்தன் என்ற அவர்தம் அருளுரையையும் நினைவிற்கொண்டு, பதிப் பொருள் உண்டு என்பதை நிறுவுவதற்காக அவர்தம் மொழிகளையே கொள்ளுதல் பொருந்துவதாகும் என்ற வகையில் ஞானசம்பந்தப் பெருமான் திருவாக்குக்களை மூலமாகக் கொண்டருளுகின்றார் மெய்கண்டார். ''தோடுடைய'' எனத் தொடங் கும் முதல் திருப்பதிகத்தினுள் ''கற்றல் கேட்டல் உடையார் பெரி யோர் கையால் தொழுதேத்த'' என வரும் திருஞானசம்பந்தர் வாக்கினால் கற்றல் கேட்டல் உடையவர்களைப் 'புலவர்' என்று சொல்லுதல் மரபன்று என்பதையும் உணர்தல் கடனும்.

## ஆந்தம் ஆதி

தமிழில் தொண்ணூற்றாறு வகைகளிலமைந்த சிறுபிரபந்தங்கள் உண்டு. தொண்ணூற்றாறு தத்துவங்களைப் போலவே இறைபரம் பொருளுடன் உயிர்கள் அமைத்துக் கொள்ளும் ஞானக் கட்டுக் களே சிறுபிரபந்தங்கள் என்றமைக்கப் பெற்றன. இவ்வகை யில் அந்தாதி நூலானது ஒரு செய்யுளின் இறுதியே அடுத்த செய்யு ளுக்கு முதல் என்பதாக அமைந்து, அம்முறையிலேயே இறுதிச் செய்யுள் வரை சென்று, முடிவில், இறுதிச்செய்யுளின் இறுதியை முதற் செய்யுளின் முதலோடு இணைக்கும். இவ்வகையில் நூல் முழுவதும் ஒருமைப்பட்டு ஒன்றென இணைந்து நிற்கும். ஒன்றன் இறுதி ஒன்றனோடு இணைதல் என்பது ஏகதேசமேயாயினுங் கூட,

நூல் முழுமையும் ஒன்றியிருக்கும் ஒருவகையான உள்ளார்ந்த இணைப்பு முறையை அது தெரிவிக்கிறது. அந்தாதி என்ற ஓர் இலக்கணம் நூறு தனிப்பாக்களையும் ஒன்றென இணைத்து ஒழுங்கு செய்தமைக்குமாறு போல இறைவனும் உலகத்துநிலவும் பல்வேறு பொருள்களையும் இணைக்கும் இலக்கணமாக—விதியாக வரையறை செய்யும் பொருளாக நின்று இணைத்து, இலக்கியத்தினுள் அமைந்து கிடக்கும் இலக்கணம் போல, இறைவனும் அப்பொருள்களுடனேயே இணைந்து நின்று விடுகிறான். இவ்வகையில் அந்தாதி என்ற சிறுபிரபந்தம் போலவே இறைவனும் பல்வேறு வகையான பொருள்களையெல்லாம் இணைத்துநிற்கும் 'அந்தாதி' யாக அமைகிறான் என்று கொள்வது ஒருவகை விளக்கம்.

இனி, இம்முதல் நூற்பாவின் பொருளோடு இணைத்து 'அந்தம் ஆதி' என்பதற்கு வைரக்குப்பாயமாக அமைந்த நுண்பொருள் காணல் முறை.

'அவனவள்' எனத்தொடங்கும் முதல் நூற்பாவானது பதி உண்டு என்பதை ஐயவிகற்பத் தோற்றரவுகளின்றித் தக்க சான்றுகளுடன் நிலைநாட்ட எழுந்தது, என்பது சான்றோர் கொள்கை.

***நால்வகைக் கொள்கைகள்:*** கடவுள் உண்டு என்பதற்குப் பொதுவாக நான்கு சான்றுகள் காட்டப் பெறுகின்றன. (1) உலகு என்ற ஒன்று உண்டு என்பதை உடன் கொண்டு; உலகம் தோன்றி நின்று அழியும் தன்மையுடையதாதலின் அதனை அவ்வாறு முத்தொழிற்படுத்துவதற்கு ஒருபொருள் இருக்கவேண்டும். அப்பொருளே கடவுள். (2) உலகில் காணப்பெறும் எல்லாப் பொருள்களும் அவ்வவற்றுக்கென அமைந்த ஒழுங்கு நியதிக் கோட்பாட்டினைப் பின்பற்றுகின்றன. ஒழுங்கு நியதிகளைக் கடைப்பிடிப்பவர்களுக்கு உரிய பயனையும், மீறுபவர்களுக்குரிய தண்டனையையும் கொடுத்து அனைத்தையும் நன்னெறியில் நிறுத்தும் செயலுக்குரிய வினைக்கொள்கையை வரையறுத்துச் செயற்படுத்தும் பொருள் ஒன்று இருக்க வேண்டும்; அதுவே கடவுள். இதனை அறக் கொள்கையின் அடிப்படையில் எழுந்த சான்று எனக் கூறுவர். (3) பயன் நோக்கிய கொள்கை. உலகம் இயங்கிக் கொண்டே இருக்கிறது. உலகில் உயிர்கள் பிறந்தும் செத்தும் செயற்பட்டுக் கொண்டே இருக்கின்றன. இத்தகைய சுழற்செயல்களுக்கெல்லாம் முடிந்த பயனாக ஏதாவது ஒன்று இருக்க வேண்டும். உலகம் அறிவற்ற பொருள் ஆகையால் அதற்கென ஒரு பயனும் இருக்க முடியாது. உயிர் அறிவுடையது. அதுதான் பயன் அடைய வேண்டிய ஒன்றாக இருக்கும். ஆயினும் சுழற்சியில் அகப்பட்டுக் கொண்டு கிடக்கிற உயிருக்குத் தன்பயனைத் தானே வரையறை செய்து கொள்ளும் ஆற்றல் இருக்க முடியாது. எனவே, உயிர்களுக்குரிய பயனை வரையறை செய்து அமைத்துக் கொடுக்க, பேராற்றல் உள்ள பரம்பொருள் ஒன்று இருக்க வேண்டும்; அப்பொருளே கடவுள். (4) அடிப்படைப்

பொருளுண்மைக் கொள்கை. அடிப்படைப் பொருள் என்ற ஒரு வகைப் பொருள் இருக்கவேண்டுமா? இருக்குமாயின் ஒன்று இரண்டா பலவா? இவ்வாறுன வினுக்களை எழுப்பி, விடை கூறும் முறையில் அமைந்த கொள்கை.

மெய்கண்டார் சிவஞானபோத முதல் நூற்பாவின் மூலம் பதிப் பொருள் என்ற ஒருபொருள் உண்டு என நிறுவுகிருர் என்ருல் மேலே குறிப்பிடப்பெற்ற நான்கு கொள்கைகளில் எத்தனைக் கொள்கை களை அல்லது எந்த ஒரு கொள்கையைப் பின்பற்றி நிறுவுகிருர் என் பதை விளக்கமுற ஆய்ந்து காணல் வேண்டும்.

*அளவைகள்:* ஒருபொருளை உண்டு என்று நிலைநாட்ட வேண்டு மாஞல் மேலே கூறப்பெற்ற கொள்கைகளையெல்லாம் எடுத்துக் கூறி விளக்காமல் சில அளவை முறைகளைக் கொண்டும் விளக்கலாம். அவைகளில் முக்கியமானவை காட்சியளவை, கருதலளவை, உரையளவை என்பன. கடவுளைக் காட்சியளவையில் வைத்துக் காணவும் காட்டவும் ஆற்றல் பெற்றவர் ஞானசம்பந்தப் பெருந் தகை. ஏதுக்களாலும் எடுத்த மொழியாலும் மிக்குச் சோதிக்க வேண்டா, காட்சியளவையான் உணரப் பெறுவதற்காகவே சோதி மயமாக விளங்கிக் கொண்டிருக்கிருன் என்று கூறிஞர் ஞானசம் பந்தர். காளத்தியான் கயிலாயத்து உச்சியுள்ளான் அவன் என் கண்ணுளானே என்று பாடிய பெருந்தகை அப்பரடிகள். ஆயினும், காணப்பட்ட உலகத்தால் காணப்படாத கடவுளுக்கு உண்மைகூற வேண்டிய நிலைமை உண்டாயிற்று. அவ்வாறு உணர்த்த முற்படும் போது ஆன்ருேர் உரை எனப்பெறும் நூலை, ஆகமத்தை அளவை யாகக் கொள்ள முயலுவதுண்டு. ஆயினும், அதனை அனைவரும் ஏற்றுக் கொள்வதில்லை. எனவே, காட்சியளவை இயலாததாயிற்று; ஆகம அளவை எடுபடாததாயிற்று; இடைநின்ற கருதலளவை எனப்பெறும் அனுமான அளவையை மேற்கொள்ள வேண்டிய கட்டாயம் நேர்ந்தது. அனுமான அளவையை விளக்கும்போது காணப்பட்ட ஒன்றை வைத்துக் கொண்டு, காணப்பெருத ஒன்றை உண்டு என ஏற்பது என விளக்குவர். அந்த வரையறையை மேலும் விரிவாக விளங்கிக் கொள்ளுதல் வேண்டும். இரண்டு பொருள்கள் இணைந்தே இருக்குந் தன்மையை ஒரு முறையோ பல முறையோ பார்த்து அறிந்த ஒருவன் பின்ஞெருகால் அவ்விரு பொருள்களுள் ஒன்றைக் கண்டபோது காணப்பெற்ற ஒன்றை வைத்து, முன் இருபொருள்களையும் கண்ட அனுபவத்தை இணைத்துச் சிந்தித்து, இதனேடு இணைந்தே இருப்பதால் முன்கண்டு, இப்போது காணப்பெருத பொருள் உண்டு என முடிவுக்கு வருவது அனுமான அளவை. இது ஒரு அடிப்படை விளக்கம். இவ்வகையில் அனுமான அளவையாற் கடவுளை நிலைநாட்ட வேண்டுமாயின், காணப்பட்ட உலகத்தைக் கொண்டே நிலைநாட்ட வேண்டுமாயின், அனுமான அளவையின் விதிகளை நிறைவு செய்ய வேண்டிய வகை யில் உலகையும் கடவுளையும் இணைத்துப் பார்த்த முன்அனுபவம் அவனுக்கு அமைய வேண்டும். அவ்வாறு அனுபவம் அமைந்திராத

வகையில் அனுமான அளவை என்று கூற முடியாது. எனினும், அனுமான அளவைகளின் விதிகளைப் பயன் படுத்தியே கடவுளுண் மையையும் நிலைநாட்ட முடியும் என்று கண்டார்கள். இவ்வகையில் உலகத்தை ஒரு செய்யப்பெற்ற—ஆக்கப்பெற்ற பொருளாக அமைத்துக் காட்டினுர்கள். உலகில் சில மூலப் பொருள்களை வைத்துக்கொண்டு சில பொருள்களைத் தோற்றுவிக்கிருர்கள். எடுத்துக்காட்டாக, மண் என்ற மூலப் பொருளை வைத்துக் கொண்டு குடம் என்ற பொருளைத் தோற்றுவிக்கிருர்கள். அவ்வாறு ஒரு பொருளிலிருந்து இன்னெரு பொருளைத் தோற்றுவிக்கும் போது அவ்வாறு தோற்றுவிக்கின்ற செயலைச் செய்யும் ஆள் ஒருவன் இருக் கிருன். உலகில் மூலப்பொருள், செய்யப் பெற்ற பொருள், செய் வான் என்ற மூன்றையும் இணைத்துக் காட்டிக் கொண்டே வந்து, இறுதியில் உலகமும் செய்யப் பெற்ற பொருளே எனக் கூறினுல் அதற்கு ஒரு மூலப் பொருளும், செய்த ஆளும் உண்டு என்பதை ஏற்றுக் கொள்வது அனுமான அளவையாயிற்று. இக்கருத்துக்குத் துணையாக, அவன் அவள் அது என்று சுட்டியறியப் பெறும் இவ் வுலகம் ஒரு தோற்றுவிக்கப் பெற்ற பொருளே என்று எடுத்து மொழி கிருர் மெய்கண்டார். இதனை அடிப்படையாகக் கொண்டு எழும் தடைவிடைகளையெல்லாம் ஆய்வது இந்நூலின் நோக்க மன்று.

அவன், அவள், அது எனச் சுட்டியறியப் பெறுதல், அவயவப் பகுப்பு உடையதாதல், தோற்றம் நிலை இறுதி என முத்தொழிற் படுதல் என்ற மூன்று காரணங்களாலும் இவ்வுலகம் என்பது ஒரு தோற்றுவிக்கப் பெற்ற உள்பொருளே, என முடித்துக் காட்டினுர் மெய்கண்டார். அழிவு என்பது ஒடுங்கியிருத்தலே, ஒடுங்கியிருந்து மீளவும் உளதாக ஆதலால் உலகம் உள்பொருளே. ஒடுங்கியது ஒடுங்கியதாகவே நின்று விடாமல் மீளவும் உளதாக ஆதலுக்குக் காரணம் மலமே.

மேலே குறிப்பிடப் பெற்ற விளக்கம் முதல் நூற்பாவின் முதல் இரண்டு வரிகளிலேயே முடிந்து விடுகிறது. இவ்விரண்டு வரிகளி லேயே முன்னர்க் குறிப்பிடப் பெற்றுள்ள கொள்கைகள் நான்கனுள் இரண்டை உடன்பட்டு, அவற்றிற்கு விளக்கம் அமைக்கும் போக்கி லேயே சென்று உலகத்தைச் செயற்படுத்தும் பொருள் ஒன்று உண்டு என்ற கொள்கையை நிலைநாட்டி விடுகிருர். இதற்கென மேற் கொண்ட கொள்கைகள் இரண்டு. உலகை அடிப்படையாகக் கொண்ட கொள்கையும், உலகத் தோற்றம் ஒரு பயனை நோக்கியது என்ற கொள்கையும் ஆம்.

*அந்தமே ஆதி :* இரண்டு கொள்கைகளை இரண்டு வரிகளில் முடித்து விட்ட மெய்கண்டார் "அந்தம் ஆதி என்மனுர் புலவர்" என்ற மூன்றும் வரியை அருளியதன் காரணம் என்ன என்பது சிந்திப்பதற்குரியது. 'என்மனுர் புலவர்' என்ற தொடர் ஆகம அளவையை ஏற்பதாகும். பொருளின் இயல்பை அறிதற்கு ஆகம அளவையைப் பயன்படுத்தும் வழக்கு உண்டு எனினும் பொருளுண்

மையை நிலைநாட்டுவதற்கு ஆகம அளவையை அடிப்படை யாக்குதல் இல்லை.

'அந்தம் ஆதி' என்பதற்கு அந்தமே ஆதி. இறுதியே முதல், ஒடுங்கினவிடத்தல்லது உற்பத்தியில்லையாதலின், ஒடுங்கிய இடமே —அந்தமே முதல் என உரை விளக்கம் காணப் பெற்றுள்ளது. இனி, மகாசங்கார காரணனே முதல்வன்; சங்காரத்தின் வழியல்லது சுதந்தரமில்லை; படைத்தல், காத்தல் ஆகிய தொழில்களைச் செய் பவர்கள் சுதந்தரமில்லாதவர்கள். ஆகையால், அவர்களும் பிறப்பு, இருப்பு, இறப்பு என்ற முத்தொழிற்கு உட்பட்டவர்களே என்ற விளக்கங்கள் காணப்பெறுகின்றன.

'அந்தம் ஆதி' என்பதற்கு இவ்வாறு உரை கொள்ளின் உலகைச் செயற்படுத்த ஒருவன் வேண்டும் என்ற அடிப்படையில் பொருளுண்மையை நிலைநாட்டியதோடு அவன் தலைமையுடையவன் என்ற கருத்தை விளக்கம் செய்ததாக ஆகும். தலைமையுடையவன் என்பது அவனுடைய இயல்பு. பொருளுண்மையை நிலை நாட்ட வந்த நூற்பா அப்பொருளின் இயல்பையும் உரைக்குமாயின் இந் நூற்பா ஒன்ருகாது. இருபொருள் நுதலி யெழுந்ததாயின் இரு நூற்பா என்றே கொள்ளப்பெறும். மேலும், அனுமான அளவையை அடிப்படையாகக் கொண்டு விளக்கியபோது, உலகியலில் மூலப் பொருளிலிருந்து செயப்படு பொருளைத் தோற்றுவிப்பதற்கு ஒரு முதல்வன் தேவை என்பதை மட்டுமே அடிப்படையாகக் கொண்டு பொருளுண்மை நிலை நாட்டப் பெற்றது. ஒடுங்கின சங்காரத்தி னல்லது உற்பத்தியில்லை என்பது உலகியலில் வைத்து விளக்கப் பெருத ஒன்று. உள்ளதே தோன்றும் என்ற கொள்கையும், ஒடுங்கிய சங்காரத்தினல்லது உற்பத்தி இல்லை என்ற கொள்கையும், ஒன்றல்ல; அடிப்படையிலே வேற்றுமையுடையவை.

இனி, படைத்தல், காத்தல், அழித்தல் என்ற முத்தொழில்களில் அழித்தலே முதல் என்று கருதுவது எவ்வாறு? இக்கருத்து ஒரு வேளை புனருற்பவத்துக்குப் பொருந்தலாம் முதலுற்பவத்துக்கு எவ் வாறு பொருந்தும்?

இனி, "ஒருவனே இராவணுதி யாவகம் உற்ருற்போல, நவந்தரு பேதம் ரக நாதனே நடிப்பன்" என்ற சிவஞான சித்தியாரின் விளக் கத்தை ஏற்றுக் கொள்வோமாயின், உலகைத் தொழிற்படுத்தும் மூன்றெனநின்ற ஒன்றினுன் வேறுபாடு கொள்ளுதற்குக் காரணம் ஏது?

***அந்தமும் ஆதியும்:*** 'அந்தம் ஆதி' என்று மெய்கண்டார் அருளிய தொடருக்கு ஏனைய சாத்திர நூலாசிரியர்கள் என்ன விளக்கம் கண்டிருக்கிருர்கள் என்பதையும் நாம் இங்கே காணுதல் வேண்டும்.

மெய்கண்டாரின் தந்தைக்கே குருவாகவும், சகலாகம பண்டித ராகவும் விளங்கிய அருணந்தி சிவாசாரியார் மெய்கண்டாருக்கே மாணுக்கராக அமைந்த அருளாளர். திருமுறைப்பயிற்சி மிகுதியும் உடையவர். திருமுறையையே வாழ்வியல் நூலாகக் கொண்டும் வாழ்ந்த பெருந்தகை ஆவர். மெய்கண்டாரின் சிவஞான போதத் துக்கு முதன்முதல் எழுதப் பெற்ற ஒரு விரிவுரை உண்டென்னில் அது அருணந்தி சிவாசாரியார் அருளிய *சிவஞான சித்தியாரே*. சிவ ஞான சித்தியார் சுபக்கத்தில், சிவஞானபோத நூற்பா ஒவ்வொன் றற்கும் ஒவ்வொரு விளக்கச் செய்யுள் அமைத்து, அதன்பின்னர் அவ்விளக்கச் செய்யுளின் அடிப்படையில் விளக்கம் அமைப்பதை முறைப்படுத்திக் கொண்டு *'சிவஞான சித்தியார்'* என்ற நூலை அருளிச் செய்தார். அவர் சிவஞானபோத முதல் நூற்பாவுக்கு அருளிய விளக்கவுரையாக அமைத்த செய்யுளைக் கீழே காண்க.

ஒருவனோடு ஒருத்தி ஒன்று என்று உரைத்திடும் உலகம் எல்லாம்
வருமுறை வந்து நின்று போவதும் ஆதலாலே
தருபவன் ஒருவன் வேண்டும் தான் முதல் ஈறும் ஆகி
மருவிடும் அநாதி முத்த சித்துரு மன்னி நின்றே

என்ற இச் சிவஞானசித்தியார்ச் சுபக்கச் செய்யுள் "உலகம் எல்லாம் வருகின்ற முறைப்படி வருதலும், நிற்றலும் போதலும்" என வரிசைப் படுத்திக் கூறி, அதனை அவ்வாறு செயற்படுத்தித் தர ஒருவன் வேணடும் என வரையறை செய்துவிட்டு, அவன் "முதல் ஈறும் ஆகி மருவிடும்" என்று கூறினர். "அந்தம் ஆதி" என்பதற்கு அந்தமே ஆதி, சங்காரகாரணனே முதல் என்று பொருள் செய்யாமல், அவன் முதலாகவும் ஈருகவும் ஆகி மருவிடும் என்று உரை செய்தார். அந்தமே எனத் தேற்றேகாரம் கொடுத்து, அந்தமே ஆதி என்று உரை செய்வதற்கு மாருக, அந்தமும் ஆதியும் என உம்மைத் தொகை யாகக் கொண்டதோடு மட்டுமன்றி, *'ஆதி அந்தம்'* எனச் சொல் மாற்றமும் செய்து கொண்டு "தான் முதல் ஈறும் ஆகி மருவிடும்" என்று அருளியிருப்பதைப் பொருளற்றதென ஒதுக்கித் தள்ளுதல் ஆகாது. இத்தகைய வேறுபாடுகள் நூற்பாவுக்கும் கண்ணழித்தல், சூர்ணி, வார்த்திகம் ஆகியவற்றுக்கும் இருக்கின்றன என்பதனுலேயே மெய்கண்டார் அவைகளை எழுதவில்லை என்ற கருத்து எழுந்தது போலும்.

வழிநூலாசிரியராகிய அருணந்தி சிவாசாரியார் இவ்வாறு அமைக்க, சார்பு நூலாசிரியராகிய உமாபதி சிவாசாரியார் இந் நூற்பாவின் பொருளை எவ்வாறு விளக்கிப் போந்தார் என்பதையும் கவனித்தல் நலம் பயப்பதாகும். உமாபதி சிவாசாரியார் அருளிய *சிவப்பிரகாசம்* என்ற நூலின் பதினருவது செய்யுள்

உலகமெலாம் ஒருவனோடு ஒருத்தி ஒன்று என்று
உளதாகி நின்று அளவில் ஒடுங்கும் பின்னும்

மலமதனுல் உளதாகும் உருவம் மாறி
வருவது போவது செல்வது ஆதலானும்
அலேவில் அசேதனம் மாயை யாதலானும்
அணுக்கள் உரு அடையும் அறிவிலாமையானும்
நிலவு தொழில் மருவி உரு நிற்றலானும்
நின்று எவையும் அளித்திடுவன் நிமலன் தானே''

என அமைக்கப் பெற்றுள்ளது. இதனுடைய தலேப்பும் பதியுண்மைக்குப் பிரமாணம் என்பதே. இச்செய்யுளுள் அந்தமே ஆதி என்றும் சங்கார காரணனே முதல் என்றும் கொள்ளும் விளக்கம் காணப்பெறவில்லே.

*அருளே எல்லாம்:* ***பிரமசூத்திரம்*** என்ற நூலின் ஜன்மாதி சூத்திரத்துக்குச் சீகண்டர் உலகின் தோற்றத்திற்கும், காப்புக்கும், அழிப்புக்கும் பிரமப் பொருள் காரணம் என்றும் உயிர்களுக்காகவே நிகழ்த்தப் பெறும் மறைத்தல், அருளல் என்ற இரண்டற்கும் பிரமப் பொருளே காரணம் என்றும் விளக்கம் செய்கிறுர். இறுதியிற் சொல்லப்பெறுவதாகிய மறைத்தல் அருளல் என்ற இரண்டும் ஆகமத்திற்கேயுரிய சிறப்புக் கொள்கைகள் என்று பேராசிரியர் எஸ். எஸ். சூரிய நாராயண சாஸ்திரியார் ***ஸ்ரீ கண்டரின் சிவாத்வைதம்*** என்ற நூலின் **137**ஆம் பக்கத்தில் குறிப்பிட்டுள்ளார். சங்காரகாரணனே முதல் என்ற கொள்கைக்கும்; படைத்தல், காத்தல், அழித்தல், மறைத்தல், அருளல் என்ற ஐந்தொழிற்கும் உரியவன் ஒருவனே என்ற ஆகமக் கொள்கைக்கும்; அருணந்தி சிவாசாரியார் அருளுகிற

அழிப்பு இளேப்பாற்றல்; ஆக்கம் அவ்வவர் கன்ம மெல்லாம்
கழித்திடல்; நுகரச் செய்தல் காப்பது; கன்மவொப்பில்
தெழித்திடல், மலங்களெல்லாம் மறைப்பு; அருட்செய்தி தானும்
பழிப்பு ஒழி பந்தம் வீடு; பார்த்திடின் அருளே எல்லாம்

என்ற செய்யுளின் வண்ணம் கிடைக்கும் **அருளே எல்லாம்** என்ற கொள்கைக்கும் உள்ள வன்மை மென்மைகளே ஆய்ந்து தெளிதல் அறிஞர் கடனும்.

*அந்தம் எனநிற்பது:* இனி, அந்தம் ஆதி என்ற தொடரால் மெய்கண்டார் பதிப் பொருளுண்மையை நிலேநாட்டும் திறம் வியந்து மகிழுவதற்குரியது.

அந்தமாக—இறுதியாக நின்று விளங்கும் பொருளே அந்தம் என விளக்கப் பெறுகிறது. உலகில் விளங்கும் ஆற்றல்களாயினும், குணங்களாயினும், பொருள்முடிவுகளாயினும், நூல் முடிவுகளாயினும் அவைகள் சென்று முட்டி நின்று, இதுவே எல்லே என நின்ற இடமே, அந்தமே அப்பொருள்.

"ஒட்டற்று நின்ற உணர்வு பதி; முட்டித்
தேட்டற்று நின்ற இடம் சிவம்."

என்பது *திருக்களிற்றுப்படியார்*. இதனை, அந்தத்தை அணவுகின்றவர்கள் அந்தணர்கள் என்ற சொல் விளக்கத்தாலும் அறியலாம். இக்கருத்து 'அநுத்தரம்' என்ற வடமொழிச் சொல்லால் குறிக்கப் பெறுவதைத் தத்துவநூல்களிற் காணலாம். 'அநுத்தரம்' என்பது தனக்கு மேலாக ஒரு பொருள் இல்லாதது; தானே முடிந்த நிலையில் விளங்கும் இறுதிப் பொருள் என்ற விளக்கத்தைக் கொடுக்கும். இதனைக் கடந்த நிலைப்பொருள் என்று குறிக்கலாமாயினும், தொடர்பே கொள்ள முடியாத அளவுக்குக் கடந்த நிலைப் பொருளாகவும் அது விளக்கம் செய்யப்பெறும். இளங்கோவடிகள் சிலப்பதிகாரத்தில்,

"பெருநிலம் முழுதாளும் பெருமகன் தலைவைத்த
ஒருதனிக் குடிகள்"

என்று சொல்லும்போது, அரசனைக் குடிமக்கள் பெயர்ப்பட்டியலில் முதல்வனைக் குறிப்பிட்டு மற்றவர்களைத் தொடர்ந்து கணக்கிட்டு வரும்போது அப்பெயர்ப்பட்டியலில் அரசன் பெயர் முதலில் இருக்கும் எனினும், ஏனைய பெயர்களோடு ஒருங்கு வைத்து எண்ணக் கூடிய அளவுக்கு ஒப்புமை இருப்பினும், முதல் நின்ற பெயர் என்ற பெருமையுடையது அரசன் பெயர். அவ்வாறே கடவுள் ஏனைய பொருள்களோடு இணைந்து நின்றாலும், கீழிலிருந்து பார்த்துக் கொண்டே போனால் அந்தமாக, இறுதியாக அமைந்த பொருளாக இருக்கும் அவ்வளவே.

***பெம்மான்:*** அந்தம் என்பதற்கு அழிவை உண்டாக்கும் பொருள் எனக் கொள்ளாமல் அனைத்தையும் இருப்புடைய பொருளாக ஆக்கி, தன் இருப்புக்கு வேறு பொருளை நாடாததால் அனைத்துப் பொருள்களுக்கும் ஆதாரமாக நின்று, தனக்கு வேறு ஓர் ஆதாரம் வேண்டாத தனிப்பொருளாய் நின்ற பொருளையே 'அந்தம்' என்று சுட்டினாராகவும் கொள்ளலாம். புலன் கடந்த பொருளியலாளர்கள் தத்தம் அறிவாராய்ச்சியின் முடிவாய், அவர்கள் மேற்கொள்ளும் 'பொருள்' (SUBSTANCE) என்பதனையே 'அந்தம்' என மெய்கண்டார் குறிப்பிட்டருளினார்.

இரண்டாவதாக, அறஇயலார் அற இலக்கணத்தின் அடிப்படையில் மெய்ப்பொருளை வரையறை செய்ய முற்படும் போது, அதனை உயிர்கள் முறையான அறவழியில் நின்று, படிப்படியாக உயர்ந்து சென்று அடையப் பெறக்கூடிய உயர்நிலைப் பொருளாக—அந்தமாக (NORMS) நின்ற பொருள் என்ற முடிவுக்கு வந்தார்கள். எனவே, மெய்ப்பொருளியலார் நோக்கிலும், அறவியலார் நோக்கிலும், அறிவால் ஆராய்ந்தும், அடைதலினால் துய்த்தும் கண்ட முடிவுகளையே 'அந்தம்' என்ற சொல்லாற் குறிப்பிட்டருளினர். இவ்வாறு மெய்கண்டார் குறிப்பிடுவதற்கு மூலமாக நின்ற கருத்துடைய மெய்ம்மை

மொழி, திருஞானசம்பந்தர் பாடியருளிய முதல் திருப்பதிகத்தில் காணப் பெறுகிறது "பெம்மான்" என்பதே அம்மெய்ம்மைமொழி.

**ஆதி :** இவ்வாறு அந்தமாக நின்ற அப்பொருள் உயிர்களைக் காக்க வேண்டும் என்ற கருத்தில் செயல்படத் தொடங்கும்போது 'ஆதி' என்ற பெயரைப் பெற்றது. உயிர்களே தத்தம் குறை யுணர்ந்து, குறைநீங்கி வாழவேண்டும் என எண்ணுவதற்கு முன்னால் அவ்வுயிர்களுக்காக இரக்கங் கொண்டு, அருள் மழை பொழிந்து, அவ்வுயிர்கள் முன்னேற மேற் கொண்ட முயற்சியில் ஆதியாக நின்றது அப்பொருளே.

அறிவியலாரும் அறவியலாரும் கொண்ட முடிவுகளை உளங் கொளும் நிலையில் 'அந்தம்' என்றும், அருளியலாளர்கள் கொண்ட முடிவின் வண்ணம் 'ஆதி' என்றும் இணைத்துக் காட்டி "அந்தம் ஆதி" என்றார். எனவே, அடிப்படைப் பொருளுண்மையியலார் கொள்கையையும், அற இயலார் கொள்கையையும், அருளியலார் கொள்கையையும் இணைத்துக் காட்டி, பொருளுண்மையை நிலைநாட் டற்குரிய அளவையியல் தீர்ப்பு மொழிகளாக "அந்தம் ஆதி" என் பதைக் குறிப்பிட்டருளினார். இவைகளை ஆகம உரைகளைப் போலக் கொள்ளாமல் அளவையியல் தீர்ப்பு மொழிகளாகக் குறிப்பிட்டருளு கின்றார். யாரும் இப்பொருளை இவ்வாறே துய்த்து நின்றால்இன்றும் இம் முடிவுக்கு வர இயலும் என்ற பொருள் தரும் தீர்ப்பு மொழியாக எடுத்தாளுகிறார். இது அன்றிலிருந்து இன்றுவரை ஏன், என்றுமே உள்ள உண்மை நிலை என்பதைச் சுட்டுவதே இத் தீர்ப்பு மொழி களின் நோக்கம். இதனைப் "பெம்மான் இவன் அன்றே" என்ற தொடரில் அமைந்த *இவன், அன்றே* என்ற இருசொற்களின் கருத்துப் பொருளாகக் கொள்கின்றார் மெய்கண்டார். திருஞானசம்பந்தரும் முதற்பதிகத்தின் எல்லாப் பாடல்களின் இறுதியிலும் இத்தொடரை அமைத்துக் காட்டியதன் நயத்தை இவ்வாறு உணர்ந்து தெளிய வேண்டும்.

***அருளியற்காட்சி :*** இனி, ஞானவாரமுதமுண்ட பிள்ளையாரின் முதன்மை அருள்மொழிகளில் "தோடுடைய செவியன் விடையேறி" என்பவைகளை மூலமாகக்கொண்டு, தோடுடைய செவி என்பதால் சத்தியைக்குறிக்கும் 'அவள்' என்பதையும், செவியன் என்பதால் சிவத்தைக்குறிக்கும் 'அவன்' என்பதையும், 'விடை' என்பது 'அறம்' எனக்கொண்டு அவ்வறத்தைக்குறிக்கும் 'அது' என்ற சொல்லையும், இணைத்து அவன், அவள், அது "என இணைத்தார் மெய்கண்டார் என்று குறிப்பிடுதலும் உண்டு. எனவே சிவம், சக்தி, அறம் என்ற மூன்றாக இவ்வுலகைக் காணுதலும் ஒருமுறை எனத்தெரிகிறது. இவ்வாறுகொள்ளும் கருத்துக்குத் துணைபுரிவதாக உள்ள விளக்கங் களை நாம் காணலாம். இந்நிலவுலகில் காணப்பெறும் எல்லாப் பொருள்களும் சிவசக்தி இணைப்பாகவே கொள்ளுதல் வேண்டும். அஃறிணைப் பொருள்களில் சிலவற்றிற்கு ஆண்மை, பெண்மை இல்லை என்று கருதுவது அவைகளில் நாம் ஆண்மை, பெண்மைக்

கூறுகளைக் கண்டறிதல் இயலாமை பற்றியே. எனவே உலகில் உள்ள எல்லாப் பொருள்களும், அஃறிணையாயினும் உயர்திணை யாயினும், ஆண்மை பெண்மைகளின் இணைப்பாகக் கருதி, அத்த கைய இருமைகளின் இணைப்பாகக் காணப்பெறும் அனைத்துப் பொருள்களும் தத்தம் நெறிகளில் தவறாது இயங்குதற்பொருட்டு வரையறுக்கப்பெற்ற அறக் கோட்பாடுகளும் உண்டு என்பதைக் கொள்ள வேண்டும். இவ்வகையில், ஆண்மை, பெண்மை, அறம் என்ற மூன்றன் இணைப்பாகவே இவ்வுலகம் அமைத்துக் காட்டப் பெற்றும், உணரப் பெற்றும் வருகிறது ஆதலின், அவ்வகையிலேயே அவன், அவள், அது எனக் குறிப்பிட்டுச் *சிவஞான போதமும்* சொல்லப் புகுந்தது எனக் கொள்ளலாம். இவற்றை விளக்கும் சான்றுகள் கீழே கொடுக்கப்பெற்றுள்ளன. அப்பரடிகள் திருக்க யிலையில் சென்று இறைவனைக் காண முயற்சிக்கிறார். அது இறை வனால் தடுக்கப்பெறுகிறது. திருவையாற்றிலேயே திருக்கயிலைக் காட்சியை அப்பரடிகளுக்குக் காட்டுகிறான் இறைவன். நிற்பவுஞ் சரிப்பவுமான எல்லாம் சிவமும் சத்தியுமாய் விளங்குவனவாகவே கண்டனுபவிக்கின்றார்.

> ‘மிடையும் நீள்கொடி வீதிகள் விளங்கிய ஐயாறு
> உடைய நாயகர் சேவடி பணிய வந்துறுவார்
> அடைய அப்பதி நிற்பவுஞ் சரிப்பவுமான
> புடை அமர்ந்த தந்துணையொடும் பொலிவன கண்டார்
>
> பொன்மலைக் கொடியுடன் அமர் வெள்ளியம் பொருப்பில்
> தன்மையாம் படி சத்தியும் சிவமுமாம் சரிதைப்
> பன்மை யோனிகள் யாவையும் பயில்வன பணிந்தே
> மன்னு மாதவர் தம்பிரான் கோயில் முன் வந்தார்’

என்பன *(1643, 1644)* சேக்கிழார் அருண்மொழிகள். மேலும்,

> அந்தண் வெள்ளிமால் வரையிரண்டாமென அணைந்தோர்
> சிந்தை செய்திடச் *செங்கண் மால் விடை எதிர்நிற்ப*

என்று *(1648)* அப்பரடிகள் கண்ட விடைக்காட்சியையும் குறிப்பிட் டருளினர். விடை அல்லது ஆனேறு அறத்தின் வடிவமாகவே காணப் பெறுகிறது என்பதையும் கொள்ளவேண்டும். இவ்வகை யில் ஆண்மையும், பெண்மையும், அறமும் ஆகிய மூன்றன் இணைப் பாகவே இவ்வுலகம் கருதப்பெறல் வேண்டும் அல்லது காணப் பெறல் வேண்டும் என்பது அருளாளர்கள் தாம் தாம் நேரில் கண் டனுபவித்த அனுபவங்களிலிருந்து கிடைத்த உண்மை. இதனைத் *திருக்களிற்றுப் படியார்* என்ற சாத்திரநூல்

> ‘யாதேனும் காரணத்தால் எவ்வுலகில் எத்திறமும்
> மாதேயும் பாகன் இலச்சினையே’

என்று குறிப்பிட்டுக் காட்டுகிறது. எனவே, திருஞானசம்பந்தர் சீகாழித் திருக்குளக்கரையிற் கண்ட கோலமும், அப்பரடிகள் திருவை யாற்றிற் கண்ட கோலமும் ஒன்றே.

திருஞானசம்பந்தர் இறைவனை எவ்வாறு கண்டாரோ, அவர் கண்ட காட்சியையே உலகப் பொருள்கள் எல்லாவற்றிலுங் கண் டனுபவிக்கின்றார் திருநாவுக்கரசர். இருவகை அருளாளர்களின் காட்சியனுபவங்களின் நுட்பங்களை அமைத்துக் கொண்ட மெய் கண்டார் " அவன், அவள், அது எனும் அவை" என எடுத்துச் சுட்டிக்காட்டுவாராயினர். இவ்வாறு திருமுறைத் தெளிவாகவே திருநெறி நூல்கள் எடுக்கப் பெறவேண்டும் என்ற கொள்கையைத் திருக்களிற்றுப் படியார் எடுத்து மொழிவதைக் காணலாம். இவற் றின் மூலம் நாம் தெரிந்து கொள்ள வேண்டிய கருத்து ஒன்று உண்டு.

காட்சியளவையே மூலமானது; முட்டுப்பாடில்லாதது; உயர்ந் தது. ஆயினும் காட்சியளவையை நாம் முழுமையாகப் பயன்படுத் திக்கொள்ள வில்லை. தனி அணுக்களைக் காண முடியவில்லை. பல வாகச் சேர்ந்த நிலையில் உள்ள அணுக்களையே காணும் ஆற்றலைப் பெறுகிறோம். எனினும் எந்த ஒரு பொருளையும் முழுமையாகப் பார்க்க முற்படும் போது எந்த ஒரு பொருளும் சிவசக்தியின் இணைப் பாகவே, அவ்விணைப்போடு விளங்கும் அறத்தின் மூர்த்தமாகவே தோற்றப் பெறும். இதுவே காட்சியளவையின் இறுதிப்பகுதியாகிய அருளியற்காட்சி. அருளியற்காட்சியிலும் பலபடிகள் உண்டு. அவற்றுள், மேலே குறிப்பிடப் பெற்றது முதற்படி. இம் முதற்படி யில் நின்று உலகத்துப் பொருள்களைக் காணும் அருள்நிலை பெற்ற வர்களையே 'திருவாரூர்ப் பிறந்தார் என்று' குறிப்பிட்டுக் கூறுவதாகக் கொள்ள வேண்டும். இப்படிநிலையில் முதிர்ந்த வளர்ச்சியுடைய வர்கள் தில்லைக்கு வந்தால் எல்லா உயிர்களையும் சிவகணங்களா கவேகாணும் காட்சியைப் பெறுவார்கள். இவ்வாறு கண்டுதுய்த்தவரே திருஞானசம்பந்தர். இவ்வகையில் திருவாரூர் ஒரு பிறப்புத்தலமாகவும் தில்லையானது அவ்வகையில் ஒரு முடிவுத் தலமுமாக விளங்குகின்றது. உலகின் எப்பகுதியிற் பிறந்து வளர்ந்தாலும் அருளியற் காட்சி அமையப் பெற்றவர்கள் "திருவாரூர்ப் பிறந்தார்கள்" என்றே கொள்ளப்பெறும் சைவவழக்குத் தோன்றியது. இதையொட்டியே சுந்தரமூர்த்திசுவாமிகள் தாம்பாடிய திருத்தொண்டத்தொகையினுள்,

'திருவாரூர்ப் பிறந்தார்கள் எல்லார்க்கும் அடியேன்'

என்று குறிப்பிட்டருளுவாராயினர். உலகில் பல்வேறு பகுதிகளில் வாழ்ந்து சிறந்த அருளாளர்கள் பலரும் திருவாரூர்த் தேவாசிரிய மண்டபத்திலே அமைக்கப் பெற்ற "புனிதர் பேரவை" யில் வாழ்ந்து வந்தார்கள். அவர்கள் எல்லாரையும் வணங்கித் திருத்தொண்டத் தொகை பாடியருளுகிறார் சுந்தரமூர்த்தி சுவாமிகள். இவர்களே உலகியலுக்கும், பொருளியலுக்கும், அருளியலுக்கும் ஆதியாக அமைந்த விதிகளை வகுக்கின்றார்கள். அவைகள் எல்லாம் உலகப் பொதுமை வாய்ந்தவை. அவையாவும் "மேன்மைகொள் சைவநீதி" என்ற சட்டப்புத்தகமாக விளங்குகிறது என்பது தெய்வச் சேக்கிழார் வாக்கு.

மதிவளர் சடைமுடி மன்றுளாரை முன்
துதிசெயும் நாயன்மார் தூயசொன் மலர்
பொதி நலன் நுகர்தரு புனிதர் பேரவை
*விதிமுறை உலகினில் விளங்கி வெல்கவே*

என்பது திருத்தொண்டர் புராணம் 4ஆம் செய்யுள். இனி, அந்நூலின் முதற்பகுதியில் மனு முறை கண்ட வரலாறு பேசப் பெறுகிறது. இவ் வரலாற்றை மிகச் சிறப்பாகப் பேசிய பெருந்தகைகள் இருவர். தெய்வச் சேக்கிழாரும், வள்ளல் இராமலிங்க அடிகளாரும் ஆவர். புலாலுண்ணல் கூடாது; உயிர்க்கொலை கூடாது என்பதை விரி வாகப் பேசிய அறிஞர்கள் பலர், உயிர்களை நாம் எத்தகுதியில் நினைக்கிறோம் என்பதைப்பற்றிய அடிப்படை உணர்வை வைத்தே உயிர்க்கொலையைத் தடுக்க முயன்றார்கள். சுந்தரமூர்த்தி சுவாமிகள் திருத்தொண்டத்தொகையை அடிப்படையாக வைத்து, திருஞான சம்பந்தரின் வாழ்வியலில் விளங்கும் அருளியலைத் துணையாக வைத்து, இவ்வாராய்ச்சியில் ஒரு புதிய திருப்புமுனையை அமைத் தருளியவர்கள் தெய்வச் சேக்கிழாரடிகளே. அத்தகைய திருப்பு முனையை உலகந் தழுவிய கொள்கையாக அமைத்துக் காட்டிய பெருமை வள்ளல் இராமலிங்கருக்கே அமைகிறது.

பசுவின் கன்றின் உயிரை அதன் உடலினின்றும் பிரித்த கொலையை அரசன் மகன் செய்தது பற்றி எத்தகைய தீர்வு செய்து இப்பழியை ஆற்றுவது என்ற ஆய்வுக்குப் பலரும் பலவாறு வழி வகைகளைக் கூறுகின்றார்கள். இறுதியதாகச் சோழமன்னன்,

"அவ்வுரையில் வருநெறிகள் அவைநிற்க; *அறநெறியின்*
*செவ்விய உண்மைத்திறம் நீர் சிந்தைசெயாது உரைக்கின்றீர்*"

என்று ஒரு முன்னுரை கூறிவிட்டு,

"................................................ ........ *திருவாரூர்த்*
*தோற்றமுடைய உயிர் கொன்றான் ஆதலின்* துணிபொருள்தான்
ஆற்றவும் மற்று அவன் கொல்லும் அதுவேயாம் என நினைமின்"

எனக் கூறிய உரையிலிருந்து, '*திருவாரூர்த் தோற்றமுடைய உயிர்*" ஒரு தனித்தன்மை உடைய உயிர் எனக் கருதியே மனு நீதிச் சோழன் அத்தகைய முறையை அமைக்கின்றான். சுந்தரர்தம் வாக்கிலிருந்து "திருவாரூர்ப் பிறந்தார்கள் எல்லார்க்கும் அடியேன்" எனப்பிறந்த தொடருக்கு விரிவுரையாகவே மனுநீதிச் சோழன் வர லாற்றை விரித்தருளுகின்றார் சேக்கிழார். "ஆரூரின் பிறக்கலும் ஆமே" என்றும், "ஆரூரை மறக்கலும் ஆமே" என்றும் கூறியருளிய மொழிகள்; ஆவணஓலையில் 'ஆரூரன்' என்று காணப்பெறும் பெயரை ஆதாரமாகக் கொண்டு அவர் 'ஆரூரர்' என்றே அமையக் காட்டிய விளக்கம்; செய்த சத்தியத்தையும் மீறி ஆரூர் வரு கின்ற அவர் செய்கை ஆகியவைகளை உடன் கொண்டு, சிவபெரு மான் அருளாட்சியை நிகழ்த்தும் தலம் திருவாரூர் என்றே முடித்துக்

காட்டி விடுகின்றார். சுந்தரர் திருவருட்டுறையில் புகுந்து இறைவனருள் பெற்றவர் ஆதலின் திருவாரூரில் பிறக்கும் உயிர்கள் அருட் கண்ணால் அருள் நெறியால் சென்று அருள் பிரமத்தைக் காணும் அருளாற்றல் பெற்றவைகள் என்ற குறிப்பில் "திருவாரூர்ப் பிறந்தார்கள் எல்லார்க்கும் அடியேன்" என்று குறிப்பிடுகிறார். அதற்கு விரிவுரையாகச் சேக்கிழார், மனுமுறை கண்ட வரலாற்றில் திருவாரூர்த் தோற்றமுடைய உயிர்" என்று சிறப்பித்தார். திருஞான சம்பந்தர் தாவில் சராசரங்களெல்லாம் சிவம் பெருக்கும் திருவருள் தொண்டினை மேற்கொண்டவர்கள் என்ற தொண்டினையும் எண்ணி, அவரைக் குருவாகக் கொண்ட வள்ளற்பெருமான் எல்லாவுயிருமே சிவம் விளங்கி அருளாட்சி செய்வதற்குரிய தலமாக விளங்குபவைகளே என்ற விளக்கத்தைக் கொடுத்து அதன்மூலம் உயிர்க்கொலை கூடாது என்றருளினார்.

மேலே குறிப்பிடப் பெற்றவைகளிலிருந்து நாம் தெளிந்து கொள்ள வேண்டிய சில குறிப்புக்கள் உண்டு. எந்த ஒரு பொருளையும் பருப் பொருளாகக் காணுங் காட்சியானது காட்சி அளவையின் முதற்படி. அதே பொருளைக் குணங்களின் திரட்சியாக அல்லது குணங்களின் மூர்த்தமாகக் காண்பதுகாட்சியளவையின் இரண்டாம் படி. அதே பொருளை அருட்பிழம்பாகக் காண்பது காட்சியளவையின் மூன்றாம்படி. இவ்வாறு மூவகைப் படிநிலைகளிற் காணும்போது காணும் பொருளும் காணப்படுபொருளும் வேறுபடுவன அல்ல. பொருள்களில் மாற்றமும் இல்லை. காணும் முறைகளில்தான் மாற்றம். திருவாரூர்ப் பிறந்த உயிர்கள் இயல்பாகவே முன்தவத்தால் இத்தகைய காட்சியை மேற்கொள்ளும் அருள்நிலை பெற்றவைகளாகின்றன. ஒருசிலர் தீட்சையினால் இவ்வாறு பார்க்கச் செய்யலாம் என்று கொள்கின்றனர். உபநயனச் சடங்கும் இவ்வகையினதே என்று கருதுவதும் உண்டு. திருஞானசம்பந்தருக்கு இத்தகைய தீட்சையைக் கொடுத்த இடம் தில்லையே என்றும், அதனாலேயே அவர் தில்லைவாழ் அந்தணர்களைச் சிவகணங்களாகவே காணும் அருட் காட்சிநிலைபெற்றார் என்று கொள்ளுவதும் ஒரு மரபு. 'சேக்கிழார் காட்டும் ஆரூர்" என்ற தலைப்பில் நுட்பமாக நோக்கினால் பல உண்மைகள் புலனும். அவை ஈண்டு விரிப்பிற் பெருகும்.

இங்கே, ஆரூரைக் காட்டியதன் கருத்து, திருஞானசம்பந்தர் திருவாரூர்ப் பதிகத்தில் தான்,

"அந்தமாய் உலகு ஆதியும் ஆயினன்"

என்றதொடரை எடுத்தாண்டு விளக்கமும் அமைத்துக் காட்டியருளுகின்றார். அது மூன்றாந் திருமுறையினுள் அமைக்கப் பெற்றிருந்தாலும் காட்சியளவையின் மூன்றாம் படியில் நின்று காணும் அருட் காட்சியளவை முறையில் ஞானசம்பந்தப் பெருமான் அருளிய திருமுறையை அப்படியே பொன்னெனப் போற்றி எடுத்தாண்டு முதல் நூற்பாவை மெய்கண்டார் முடிப்பாராயினர்.

காட்சியளவையில் வைத்து உண்மைப் பொருளின் இருப்பை நிலைநாட்டுதல் வேண்டும் என்ற கொள்கையில் இந்நூற்பா மலர் கிறது எனக் கருதுதல் வேண்டும். இதனுலேயே ஞானசம்பந்தர் தாம் மேற்கொள்ளும் வாதங்களின் முடிவைக் காட்சிப் பொருள் அளவை முறையிலேயே அமைத்துக் காட்டுகின்ருர். அவ்வகையில் சமணர்கள் தோல்விக்குச் சேக்கிழார் காட்டும் குறை ஒன்றுதான். பலகுறைகள் பலர் கூறலாம். சேக்கிழார் பொதுமக்கள் கூற்ருக அமைத்து,

''பருப்பொருள் உணர்ந்தார் தாங்கள் படுவன பாரீர்''

என்று கூறுவதன் உட்பொருள், 'கண்டதே காட்சி கொண்டதே கோலம்' என்ற பழமொழிக்கிணங்க, காணப்படு பொருளைப் பருப் பொருளாக மட்டுமே கண்டுவிட்ட குறை ஒன்று தான் சமணர்கள் தோல்விக்குரிய காரணம் என்பதே.

இனி, 'அந்தம் ஆதி' என்பதனை ஞானசம்பந்தர் காட்டிய அருள் வழிநின்று சிந்தித்தல் பயனுடையதாம்.

பொருளுண்மை முடிவில் அறிவியலார் கருத்தின் வண்ணம் அது இறுதிநின்ற பொருள். பல்வகைப் பொருள் நிலைக் கருத்துக்களுக்கும் முடிமணியாய், நாயகமணியாய் நின்ற பொருள். இதுவே அந்தம், சிரப்பொருள் என்று சொல்லலாம் ஆயினும் தொடர்பு எதுவுமே இன்றிக் கடந்த பொருளாகக் கொள்ளலாகாது. தனக்கு மேல் வேறு ஒரு பொருள் இல்லாததாய், அனைத்து மாறுபாடுகளையும் கடந்ததாய். ஆனுலும், அனைத்தையும் இணைத்த முழுமைக்கும் முதன்மையாய் நின்ற வகையில் 'அந்தம்' எனக் கொள்ள வேண்டும். இதனை நஞ் சுண்ட வரலாற்றில் வைத்தும் காட்டுவர். தேவர்களெல்லோரும் முடியாது, முடியாது, எனத்தனித்தனியே இயலாதவர்களாகி நிற்க, இறுதியில் நின்று ஏற்றவனே இறுதிப் பொருள்; அந்தம் எண்ணிக் கையால் இறுதி அன்று; எடுத்து நிறுத்திய தனிச் செயலால். பிரமம், பரம் என்ற சொற்களால் சுட்டப்பெறும் பரம்பொருள் தன்னளவில் நின்ற காலையில் ''அந்தம்''. இதனையே பீடுடைய பிரமாபுரம் மேவிய **பெம்மான்** என்ற சொல்லாற் குறிப்பிட்டருளினுர். பரம்பொருள் தன்னிலையில் **அந்தம்; பெம்மான்.**

தன்னளவில் 'அந்தம்' என நின்ற பெம்மான் உலகை நோக்கிய நிலையில் 'ஆதி' யாக விளங்குகின்ருன். அருளை வெளிப்படுத்திச் செயலாற்றிய முதல்நிலை அவனே ஆதலின் ஆதி. ஆதி என்பதை அருள் என்றும் கொள்ளலாம். செயலாற்றத் தொடங்கிய முதல் நிலை ஆதி என்பதனுல் ஏனைய பொருள்கள் நிலைபெறக் காரணமா தலும், அவை தம்முடைய குறிக்கோளை அடைந்து வாழ்வதற்கு உரியவைகளை அமைத்துக் கொடுத்துத் துணைக்காரணமாக ஆதலும், அவ்வுலகை முன்னின்று செயற்படுத்தி, தோன்ருத் துணையாய் நின்று செயற்படுத்தி, குறிக்கோளை அடையுமாறு செய்விப்பதாக அப்பொருள் அமைந்ததால் அது 'ஆதி' எனப்பெற்றது.

"அந்தணர் நூற்கும் அறத்துக்கும் ஆதியாய்
நின்றது மன்னவன் கோல்"

"மாதவர் நோன்பும் மடவார் கற்பும்
காவலன் காவல் இன்றெனில் இன்றால்"

என்ற இரு கருத்துக்களையும் உள்ளடக்கிய ஒன்றை 'ஆதி' என்பதன் பொருளாக அமைத்துக் கொள்க.

திருஞானசம்பந்தப் பெருமான் "பெருந்தகைமை" என்று சுட்டிக் காட்டிய ஒன்றை 'ஆதி' என்ற சொல்லால் எடுத்துக் காட்டு கின்றார் மெய்கண்டார்.

மண்ணில் நல்லவண்ணம் வாழலாம் வைகலும்
எண்ணில் நல்லகதிக்கு யாதுமோர் குறைவிலை
கண்ணில் நல்லஃது உறும் கழுமல வளநகர்ப்
பெண்ணில் நல்லாளொடும் பெருந்தகை இருந்ததே

என்பதை முதலாகக் கொண்ட பதினொரு திருநெறிய தமிழையும் மூன்றுந்திருமுறை 282 என்ற எண்ணுள்ள பதிகமாக அமைத்துள்ளார்கள். சமணர்களை வாதத்தில் வென்ற பிறகு, மதுரையில் எழுந்தருளியிருக்கும் போது, சீகாழியிலிருந்துவந்த சிவபாதவிருதயரும் ஏனையோரும் ஞானவாரமுதமுண்ட பிள்ளையைக் கண்டபோது, திருஞானசம்பந்தர் தம்முடைய திருக்கைகளைத் தலைமேற் குவித்து "அருந்தவத்தீர்' எனை யறியாப் பருவத்தே எனை எடுத்தாண்ட பெருந்தகை எம்பெருமாட்டியுடன் இருந்ததே' என்னும் பொருளில் அருளிய பதிகம். இது பொதுத் திருப்பதிகம். ஞானசம்பந்தருக்கு மட்டுமன்றி, உலகத் துயிர்களுக்கெல்லாம் அவை அறியாப் பருவத்தே அவைகள்பால் அருளுள்ளங் கொண்டு தொழிற்பட்ட பேரருட் பெருநிலையையே, பெருந்தகைமை என்று சுட்டிக் காட்டி, அது **ஆதியாம் தன்மை** எனக் குறிப்பிடவே 'இருந்ததே' என்ற சொல்லை ஒவ்வொருசெய்யுள் இறுதியிலும் பெய்து வைத்தருளினர் எனக் கொள்ள வேணடும்.

எனவே, புலன்கடந்த பொருளியலாளர் நோக்கில் 'அந்தம்' எனக் கண்டு, அத்தகைய ஒரு பொருள் உண்டு என உணர்த்தப் பெற்றது. அதுவே, அற இயலார் ஆய்வின் வண்ணம் உயர்பெரும் அடைவுப் பொருள்—இறுதியாய் நின்ற உயர் அடைவுப் பொருள் (NORM) என்ற விளக்கத்தோடு 'அந்தம்' என்ற சொல் நின்றது. இவையிரண்டையும் விளக்கும் நோக்கில் 'பெம்மான்' என்ற ஒரு சொல்லை எடுத்தாளுகின்றார் ஞானசம்பந்தர். இனி, அருளாளர்கள் நோக்கில் காணப்பெற்ற அருள்நிலையே 'ஆதி' என்ற சொல்லாலும், 'பெருந்தகைமை' என்ற சொல்லாலும் முறையே மெய்கண்டாராலும் திருஞானசம்பந்தராலும் விளக்கம் செய்யப் பெறுகின்றன.

*அறமூர்த்தி :* உயிர்கள் அடையவேண்டிய உறுதிப்பொருள் மூன்று. 'அவை அறம், பொருள், இன்பம் என்பன. இவ்வுறுதிப்

பொருள்களை உயிர்கள் அடையும்போது, அவைகள் அடைந்த அந்நிலையைக் குறிக்கும் சொல்லே, வீடு என்பது. இம் மூவகை உறுதிப்பொருள்களுள் 'அறம்' என்ற உறுதிப்பொருளை உணர்த்தவும் உரைக்கவும் வேண்டி இவ்வுலகுக்கு வந்த பெருந்தகையே திருஞானசம்பந்தர். அறம் என்பது பொருட்டன்மையின் வரையறை நிலை. பொருளும் பொருள்தன்மையும் குணியும் குணமும் போல. இனி, பொருளையே வரையறை செய்யும் குணங்கள் உள்ளன. எடுத்துக்காட்டாக, சுடுதல் தன்மையும் நெருப்பும் போலப் பொருளை வரையறை செய்யும் குணங்கள் இயல்பிலேயே பேராற்றல் வாய்ந்தவை. அவைகளை வரையறைப் படுத்தி அமைக்கும் விதிகளே அறம். உலகத்தில் அமைந்துள்ள பொருள்கள் எல்லாமே தத்தமக்கு உரிமையுடையவைகளாகக் கொண்டிருக்கிற ஆற்றல்களின் இயல்புகளை நேர்நின்று உணர்த்த வந்தவர் திருஞானசம்பந்தர். எந்த ஒருபொருளும் தன்னிடம் உள்ள பேராற்றலை இரண்டு வகைகளில் வரைமுறை செய்து கொள்கிறது. எடுத்துக் காட்டாக, தீ என்பது ஐவகைப் பூதங்களுள் ஒன்று. சுடுதல் என்ற குணமேயாய் நின்ற தீ பேராற்றல் உடையது என்பதை அறியார் யார் உளர்!

இத்தகைய பேராற்றல் வாய்ந்த தீயானது எவை எவைகளைத் தன்னுள் சுடுவதன் மூலம் அடக்க வேண்டும் என்பதும், எங்கே தான் (தீ) அடங்க வேண்டும் என்பதும் வரையறை செய்யப் பெறுகின்றன. அத்தகைய வரையறைகளே 'அறம்'. அடங்குவதும், அடக்குவதும் ஆகிய இரண்டு பகுதிகளைக் கொண்டதாய் அறம் விளங்குகிறது. இவ்வகையில் ஒரு ஆற்றல் இன்னொரு ஆற்றலைத் தன்னுள் அடக்கும். அப்படி அடக்கிய ஆற்றல் வேறொன்றில் அடங்கிவிடும். அவ்வாறு அடங்கியிருக்கும் ஒரு காரணத்தாலேயே அப்பொருள் அழிந்து விட்டதாக ஆகாது. அடங்கியிருக்கிறது என்பதே முறை. இவ்வகையில் அடங்குவதும் அடக்குவதும் ஆகிய இருவகை நிலைகளை வரையறை செய்து கொள்வதே அப்பொருளின் அறம். இத்தகைய இருவகை நிலைகளை உலகில் உள்ள அனைத்துப் பொருள்களுக்கும் ஆற்றல் வரையறை செய்தமைத்தல் என்பதே அறம். இதுவே அறவரையறை.

இவ்வாறு அடங்குவதும் அடக்குவதுமாய் அமைந்த பண்புகளையுடைய அனைத்துப் பொருள்களும் ஒரே ஒரு பொருளில் ஒடுங்கும். அடங்குவது வேறு; ஒடுங்குவது வேறு. அடங்குவதும் அடக்குவதும் அறநியதியின் இருநிலை. அடங்கவேண்டிய இடத்தில் அடக்க முற்படாமல் அல்லது அடங்காது இருந்தால் அடக்கும் ஆற்றல் மேலோங்கிச் சென்று அடக்கிவிடும். ஆனல், ஒடுங்குதல் என்பது ஆற்றலே இல்லை என்று சொல்வதுபோல அமையும் ஒரு நிலையே. இங்கே ஒடுக்கும் நிலை உடைய பொருளாய், அத்தகைய பேராற்றலுடைய பொருள் ஒன்று இல்லை. எனினும், அனைத்துப் பொருள்களும் அந்த ஒரு பொருளிடத்தே ஒடுங்கி விடுகின்றன. அப்படி அனைத்துப் பொருள்களும் சென்று ஒடுங்கும்போது

அந்த ஒரு பொருள் 'ஒடுக்கி' என்ற பெயரைப் பெருமல் 'ஒடுங்கி' என்ற பெயரையே பெறுகிறது. ஏனெனில், தன்னுடைய ஒடுக்கும் ஆற்றலால் அனைத்துப் பொருள்களையும் ஒடுக்கிக் கொள்ளவில்லை. அனைத்துப் பொருள்களும் அப்பொருளின் முன்னிலையில் ஒடுங்கி விடுகின்றன. அந்நிலையில் ஒடுங்கிய பொருள்களுக்கும் ஒடுங்கக் காரணமாக இருந்த பொருளுக்கும் இருவேறு பெயர்கள் இல்லை. இவ் விரு பொருள்களுக்கும் 'ஒடுங்கி' என்ற ஒரே சொல்தான் உண்டு. அவ்வாறு ஒடுங்கிய நிலையில் இரு பொருள்களும் நிற்கும் நிலைமைக்கு 'ஒடுக்கம்' என்ற பெயர் உண்டு. இங்கே வேறு ஒரு நிலையும் காணப் பெறுகிறது. ஒடுங்கிய நிலையில் உள்ள தண்ணீரும் நெருப்பும் நேர் நேர் நின்ருல் தத்தம் இயல்புகளுக்கேற்ப அடங்குவதும் அடக்கு வதும் ஆகிய அறச்செயல்களில் ஈடுபடுமா? என்னில், அவைகளில் அவை ஈடுபடுவதும் இல்லை. இத்தகைய பொருள் தன்மையை விளங்க உணர்த்தும் பதிகமே "தோடுடைய செவியன்" எனத் தொடங்கும் திருப்பதிகம். தம்முள் மாறுபட்ட பொருள்களையெல்லாம் தாங்கியிருக்கும் பொருளாக அப்பெம்மான் உணர்த்தப் பெறுகிருன். அவன் தலையிலிருந்து கங்கை புரளுகிறது. அவன் கையிலிருந்து தீ எரிகிறது. ஆயினும் எல்லாம் அவனிடம் ஒடுங்கிய பொருள் களே. எனவே, புலியும் மானும் தம்முள் ஒன்றை ஒன்று அடக்க அல்லது அடங்க முற்படவில்லை. ஒடுக்கும் ஆற்றல் செயல் படுத்தப்பெருமலேயே ஒருபொருள் ஒடுங்கிவிடுகிறது. அதே சமயத் தில் அது ஏனைய பொருள்களை அடக்கவோ அடங்கவோ முற் படுவதும் இல்லை. இந்நிலையைச் சம்பந்தர் "உள்ளங்கவர் கள்வன் நிலை" என்று சிறப்பித்துக் காட்டுகின்ருர்.

அடக்குவதும் அடங்குவதும் இன்றி, அனைத்துப் பொருள்களை யும் தாங்கி, ஆனுல் அதே சமயத்தில் அனைத்துப் பொருள்களும் ஒடுங்கவும், ஒடுங்கிய காரணத்தால் அவைதம்முள் அடங்குதலும் அடக்குதலும் செய்யாமல் நிற்கவும், காரணமாக நின்ற பொருளே— பொருள்கள் எல்லாவற்றிலும் உயர்ந்த முதற்பொருள் என்றும், அதுவே 'அந்தம்' என்றும் சுட்டிக்காட்டியருளினர். இவ்வகையில் வத்து நிர்ணயம் என்று வடமொழியாற் கூறும் கருத்தைக் காட்சி யளவையின் மூலம் வைத்துணர்த்திய ஞானசம்பந்தரின் முதல் திரு முறையைப் போலவே அடங்குதலும் அடக்குதலும் ஆகிய அறத்தின் இருவகை நிலைகளை எடுத்துக் காட்டி உலகுக்கு உணர்த்திய யாழ்முரித் திருப்பதிகத்தை இறுதியாக வைத்தே முதல் திருமுறை நிறைவு பெற்றுவிடுகிறது.

வாய்மூலம் எழுப்பப் பெறும் ஒலி, நரம்புமூலம் எழுப்பப்பெறும் ஒலி, இவ்விரண்டனுள் எது எதனை அடக்கியும் அடங்கியும் செல்ல வேண்டும் என்ற அறமுறைக்குச் சற்றே விலக்களித்துப் பாட முற் பட்ட பதிகமே யாழ்முரித் திருப்பதிகம். விளைவு திருநீலகண்ட யாழ்ப்பாணர் தம்முடைய இசைக்கருவியையும் உடைத்துவிட்டுத் தானும் இறக்கப்புகும் நிலை வந்தது. திருஞானசம்பந்தர் அறநியதி களில் ஒன்றைச் சிறிது மாற்றினுலும் பெரிய தீமைகள் உண்டாகும்

என்பதை உணர்த்திக்காட்ட அமைந்த நிகழ்ச்சியே அது. இவ்வாறு, முதல் திருமுறையின் முதலும் முடிவும் அடங்குவதும் அடக்குவதும் ஆகிய தன்மைகளைக் கொண்ட பொருள்களும், அவைகளின் ஒடுங்கிய நிலையும், ஒடுங்கக் காரணமாக இருந்த பொருளும் விளக்கிக் காட்டப்பெற்றன. எனவே, ஞானசம்பந்தர் அறத்தின் அடிப்படையில் நின்று பொருளின் இருப்பினை வரையறுத்துணர்த்திய சான்றோராகத் திகழ்ந்து, அவ்வகையில் முதல் திருமுறையில் பொரு ளுண்மையையும், பல்வேறு பொருள்களின் இணைப்பும் உயர்வும் பற்றிய விளக்கங்களையும் தந்துநிறுவிய 'அருளாளர்' எனக்கொள்ள வேண்டும்.

## *நன்மையும் உண்மையும்*

"அந்தம் ஆதி" என்ற இரண்டையும் உண்மைப் பொருளாகவும் நன்மைப் பொருளாகவும் விளக்கம் செய்து கொள்ளுதல் வேண்டும். புலன் கடந்த பொருளியலார் நோக்கில் அந்தம் என முடிந்த பொரு ளாகக் காணப்பெறுவதை ஞானசம்பந்தப் பெருமான் ஞானத்திர ளாய் நின்ற உண்மைப்பொருள் என்றும், 'ஆதி' என்பது அருளின் இயக்கம் பெற்று அவன் ஐந்தொழில் செய்யத் தொடங்கிய காலத்து அவனை நன்மைப் பொருள் என்றும் விளக்கிக் காட்டினார். திரு வண்ணமலைத் திருப்பதிகத்தே ஞானசம்பந்தப் பெருமான் இவ் வுண்மையை மிகத் தெளிவாக விளக்கிக் காட்டியருளுகின்றார்.

"மஞ்சைப் போழ்ந்த மதியஞ்சூடும் வானோர் பெருமானார்
நஞ்சைக் கண்டத்து அடக்குமதுவும் *நன்மைப் பொருள்*
*போலும்*" *1—69. 2*

"ஞானத் திரளாய் நின்ற பெருமான் நல்ல அடியார் மேல்
ஊனத் திரளை நீக்கு மதுவும் *உண்மைப் பொருள்* போலும்"
*1—69. 3*

முதல் திருமுறையுள் அமைந்த திருவண்ணமலைப் பதிகக் கருத் துக்கள் தத்துவக் கொள்கைகளாகிய "அந்தம் ஆதி" என்ற இரு நிலைக் கருத்துக்களும் தோன்றக் காரணமாயிருந்தன எனக் கொள்ள லாம்.

## *உலகத் தோற்றம்*

ஞானசம்பந்தப் பெருமான் முதல் திருமுறையிலேயே உலகத் தோற்றத்தை வெகு நயம்படக் கூறி முடித்தருளுகின்றார். திருஅச் சிறுபாக்கம் என்றதலம் மூன்று அரக்கர்களை அழிப்பதற்கு இறைவன் தேரில் புறப்பட்டபோது, தேரின் அச்சு முறிந்தது என்ற வரலாற்றை நினைவூட்டும் தலம்.

ஞானசம்பந்தப் பெருமான் இத்தலத்தில் உலக உற்பத்தி முறை யைத் தெளிவுபட உணர்த்துகின்றார். அச்சு முறிந்தது என்பதை ஞானசம்பந்தப் பெருந்தகை விளக்கும் முறையே வேறு. சத்தி சிவ

மாய், ஆண்மை பெண்மையாய்ப் பிரிப்பற நின்ற அச்சு முறிந்து சத்திவேறு சிவம் வேருகப்பிரிந்தன. ஆணவமலத்தை அழித்து உயிர்களைக் காப்பாற்ற முற்பட்டதே அவ்வரலாற்றின் உண்மை. அசுரர்களை அழிப்பது என்பது மும்மல காரியத்தை அழித்தது என்று கொள்வர் திருமூலர். ஆனுல், இறைவன் தேரில் ஏறியவுடனேயே அனைத்துத் தேவர்களுக்கும் ஆணவம் பிறந்தது. அதுவே மூலமலம். அதை ஒழிக்க வேண்டும் என்ற எண்ணம் தோன்றவே, உலக உற்பத்தியைத் தொடங்கியே அதை ஒழிக்க வேண்டும் என்ற வகையில், ஒன்ருய் நின்ற பரம் பொருள் சிவம் வேறு சத்தி வேறு எனப் பிரிந்தது. பிரிந்த அந்த நிலையே அச்சுமுறிதல் எனக் குறிக்கப் பெற்றது. இரண்டும் தனித்தனித் தத்துவங்களாக நிற்கவே, பின்னர்ப் பல தத்துவங்களும் தோன்றின என்று குறிப்பிட்டுக் காட்டுகின்ருர் ஞானசம்பந்தப் பெருமான்.

"பொன்திரண்டன்ன புரிசடை புரளப்
பொருகடற் பவளமோடு அழல் நிறம் புரையக்
குன்றிரண்டன்ன தோளுடையகலங்
குலாய வெண்ணூலொடு கொழும்பொடியணிவர்
மின்திரண்டன்ன நுண்ணிடையரிவை
மெல்லியலாளை ஓர் பாகமாப் பேணி
அன்று இரண்டுருவமாய எம்மடிகள்
அச்சிறுபாக்கமது ஆட்சி கொண்டாரே"

1—77—1

இச்செய்யுளில் முதல் மூன்று வரிகளில் இருமையும் இணைந்து நின்ற ஒருருவ விளக்கமே கூறிவந்து, நான்காவது வரியில், இரண்டு வேறு வேறு உருவமாய எம்மடிகள் அச்சு இறு பாக்கமது ஆட்சி கொண்டாரே என்று கூறியருளுவது, ஒன்று இரண்டான அந்தக் காலமே உலகத்தோற்றம் முதலிய அனைத்துத் தோற்றங்களுக்கும் மூலமாகிய காலம் என நன்கு தெளியலாம்.

## முடிப்புரை

பன்னிரு திருமுறைகளுள் முதல் திருமுறையை மூலமாகக் கொண்டு எழுகின்ற சிவஞான போத முதல் நூற்பாவானது உலகம் அவன் அவள் அது எனச் சுட்டிக் காணப் பெறுகின்ற ஒன்று; மூவினைகளை உடையதாய்க் காணப்பெறுகின்றது எனினும் அது உள்பொருளே; உலகம் என்ற உள்பொருள் தோற்றுவிக்கப்பெற்ற பொருளாயின், தோற்றுவிப்பான் ஒருவன் வேண்டும் எனக் கூறி, தோற்றுவிக்கப் பெற்ற அவ்வுலகம் குறிக்கோளை நோக்கிச் சென்று கொண்டிருக்கிறது எனக் காட்டி, அவ்வுலகம் அப்பயனை எய்தும் பணியில் அதனைச் செயலாற்ற வைத்த முதன்மைப் பெருந்தகை அவனே என விளக்கினர். இவ்வகையில் மெய்கண்டார் உலகை அடிப்படையாக வைத்துக்கொண்டு கடவுளுண்மையை நிலை நாட்டும் இரு கொள்கைகளை விளக்கிக் காட்டினர்.

இனி, 'அந்தம் ஆதி' என்ற இருமொழித்தொடரால் அடிப்படைப் பொருளுண்மையை அடிப்படையாகக் கொண்டெழும் கொள் கையைஏற்று அதனை இருவகைகளாகப் பிரித்துவிளக்கம் செய்கிறார். 'அந்தம்' என்பது பரம் பொருள் தன்னளவில் நின்ற நிலை. ஆதி என்பது அப்பொருள் உயிரை, உலகைச் செயற்படுத்தி நின்ற நிலை. அந்தம் ஆதி என்ற இரண்டு சொற்களின் பொருளாற்றல்களையும் திருஞானசம்பந்தர் **பெம்மான், பெருந்தகை** என்ற இரு சொற்களா லும் குறிப்பிட்டுக் காட்டியருளினர்.

இனி, உலகை அருளியற் காட்சியளவையால் கண்டுணர்ந்த அருளாளர்களாய் விளங்குபவர்கள் திருஞானசம்பந்தரும் திருநாவுக் கரசரும். இவ்விருவரும் கண்டு, துய்த்து, உணர்த்திய வகையில் இவ்வுலகம் ஆண்மை, பெண்மை, அறம் அல்லது சிவம், சக்தி அறம் என்ற மூன்றன் இணைப்பாகக் கொள்ளப் பெறுகிறது. இக் காட்சியையும் உளங்கொள்ளும் நோக்கில் அவன், அவள், அது எனச் சுட்டிக்காட்டி விளக்கினர் மெய்கண்டார் எனவும் கொள்ள லாம்.

இவ்வகையில் முதல் திருமுறையானது அறத்தின் அடிப்படை யில் எழும் பொருளுண்மைக் கொள்கையை விளக்கி, அறவழியில் பொருள்களின் ஆற்றல்கள் எவ்வாறு அமைக்கப் பெறுகின்றன என்பதையும் விதிமுறைப் படுத்துகிறது எனக் கொள்ள வேண்டும். அடங்குதல், அடக்குதல் என்ற இருபக்கங்களைக் கொண்ட ஒன்றாக அனைத்துப் பேராற்றல்களும் அறமுறைப் படுத்தப் பெறுகின்றன. அடங்கியும் அடக்கியும் நிற்பனவே உலகப் பொருள்கள். ஆனால் அனைத்துப்பொருள்களும் ஒரே ஒருபொருளின் முன்னர் ஒடுங்கி விடு கின்றன. எந்த ஒரு பொருளின் முன்னால் அனைத்துப் பொருள்களும் ஒடுங்கியனவோ, அந்தப்பொருள் 'ஒடுக்கி' என்ற சொல்லாற் சுட்டிச் சொல்லப் பெறுதல் இல்லை. அப்பொருளும் 'ஒடுங்கி' என்றே சொல்லப் பெறுகிறது. இவ்வாறு, அனைத்துப் பொருள்களும் தம்மை அறியாமலேயே தாம் ஒடுங்குவதற்குரிய காரணம் உள்ளங்கவர் கள்ளத் தன்மையை அப்பொருள் கொண்டிருக்கிறது ஒன்றை ஒன்று அடக்கியும் அடங்கியும் வாழவேண்டிய பொருள்களாகப் பாம்பும் மதியும் புலியும் மானும், அக்கினியும் கங்கையும் ஆகிய பொருள்களை, அம்மையப்பனாய் நின்ற கோலத்தில் சுட்டிக் காட்டி, அவைகள் ஒடுங்கியுள்ளன என்பதையும், அப்படி நின்ற பரம் பொருள் 'உள்ளங்கவர்கள்வன்' என்பதையும் முதல் திருமுறையின் முதற்பதிகத்தின் மூலம் உணர்த்தியருளிய ஞானசம்பந்தர் முதல் திருமுறையின் இறுதிப்பதிகமாகிய யாழ்மூரித் திருப்பதிகம் மூலமாக அடங்கியும் அடக்கியும் நிற்குமாறு அறமுறைப் படுத்தப் பெற்ற பேராற்றல்கள் அவ்வறமுறையிலிருந்து சிறிதே விலகுமாயினும் பெருந்தீங்கு விளையும் எனக்காட்டி, அறமே அந்தம் ஆதி என நின்ற பரம்பொருள் எனமுதல் திருமுறைமூலம் உணர்த்திய கருத்துக்களை மெய்கண்டார் முதல் நூற்பாவாக அமைத்துக் காட்டினர் எனக் கொள்ள வேண்டும்.

அடுத்து, இம்முடிப்புரையிற் சுட்டிக் காட்ட வேண்டிய கருத்து ஒன்று உண்டு. 'ஒடுங்கி' என்பது இறைவனை அல்லது பரம்பொருளை உணர்த்தும் சொல். அனைத்துப் பொருள்களின் அறநியதிகளாகிய அடங்குவதும் அடக்குவதும் அப்பரம் பொருளின் முன்னர் ஒடுங்கி அமைந்து விடுகின்றன. எனினும், பரம்பொருளும் எதனையும் ஒடுக்குவது அன்று. திருஞானசம்பந்தரின் முதல் திருமுறையின் முதல் திருப்பதிகமும் இறுதித் திருப்பதிகமாகிய யாழ்முரித் திருப் பதிகமும் இணைந்து நின்று முடித்துக் காட்டும் பரம்பொருள் தன் மையே "ஒடுங்கி" என்பதாம். இக்கருத்தினைச் சிறப்புற எடுத்துக் காட்டும் வகையில் மெய்கண்டார் "*ஒடுங்கி உளதாம்*" என எடுத்துக் காட்டி முடிப்பாராயினர்.

மெய்கண்டார் "என்மனுர் புலவர்" என முதல் நூற்பாவினுள் எடுத்து மொழிவதன் நோக்கம், இது திருவருளின் வழிநின்று தம்மைத் திருவருளோடு இணைத்துப் புலமாக—வழியாக அமைத்துக் கொண்ட வர்களாகிய புலவர்கள் திருவருளின் வழிநின்று தாம்பெற்ற அனு பவத்தை எடுத்துரைத்தருளியுள்ளார்கள் என்பதை எடுத்துக் காட்டும் குறிப்பினை உட்கொண்டது என்பதாம்.

# 4. ஆணையின் நிற்கும்

*முன்னுரை*

திருஞானசம்பந்தப் பெருமான் அறத்தின் அடிப்படையில் நின்று பொருளுண்மையை நிலைநாட்டத் தோன்றிய பெருந்தகை யாதலின் அப்பொருளை அறத்தின் வடிவாகவே—நீதியின் உருவ மாகவே அமைத்துக் காட்டுகின்றார்.

> இன்ன உரு இன்னநிறம் என்று அறிவதேல்
> அரிது நீதிபலவும்
> தன்ன உருவாம் என மிகுத்த தவன்" (3—329—4)

என அவர் கூறுமாற்றால் தெளியலாம். இக்கருத்தையே 'செம் பொருள்' என்ற சொல்லாற் சங்கச் சான்றோர்கள் குறிப்பிட்டனர். மேலும், அது ஒரு நேர்மைப் பொருள், நடுவுநிலைப் பொருள் என்ற கருத்து உண்டாகவே அப்பொருளைப் பகல் எனவும் ஞாயிறனை யன் எனவும் 'சோதி' எனவும் குறிப்பிட்டுக் கூறும் வாக்குக்கள் உண் டாயின. சூரியன் அனைவர்க்கும் பொது; அவன் தரும் ஒளி வேறு பாடு இல்லாமல் அனைவரையும் சென்றடையும். அவ்வாறே சிவனு டைய ஒளியாகிய அருளும் வேறுபாடின்றி அனைவரையும் சென்று அடையும் பண்புடையது எனக் கொள்ளவேண்டும். திருவள்ளுவர் குறிப்பிடும் 'வேண்டுதல் வேண்டாமை இலான்' என்ற தொடரும் அவன் நடுநிலையாளன் என்பதையே பொருளாகக் கொண்டது. அறத்தின் வடிவமாகவே பெருமான் விளங்குகிறான் என்பதைக் குறிப்பிடவே விடை அவனுடைய ஊர்தியாகவும் கொடியாகவும் அமைக்கப் பெற்றது.

> "கரைந்து கைதொழுவாரையும் காதலன்
> வரைந்து வைதெழுவாரையும் வாடலன்"

என்பது திருமுறை. தன்னை வழிபட்டவரையும் வைதவரையும் ஒப்ப மதித்து அருள் வழங்குபவனே அப் பெருந்தகை என உணர்த்தியது திருமுறை நெறி.

அறவழி நிற்கும் நேர்மையாளன் என இறைவனை உணரும் போது, அவன் பேரருளாளன் என்ற கருத்துக்கு முரண்பட்ட தாகுமே என்ற ஐயம் எழுவது இயற்கை. உயிர்கள் தமக்குள்ள அழுக்கை நீக்கிக் கொள்ள வேண்டும். உயிர்கள்மேல் வைத்த

பேரருளினுல் அழுக்குக்களை ஒரே நொடியில் அழித்துவிடலாமே! நடுவுநிலைப் பரம்பொருள் அவ்வாறு அறமுரண்பாட்டுச் செயல் எதையும் செய்ததில்லை; உயிர்கள் தம் குறையைத் தாமே உணர்ந்து நீக்கிக் கொள்ள வேண்டும். அவைகள் அறிவு வளர்ச்சி பெறுவதற்குத் தேவையான உதவிகள் எல்லாவற்றையும் ஆக்கி அமைத்துக் கொடுத்து விடுகின்ருன். என்றும் அவைகளைப் பிரியாமல் உடனிருந்து, அவைகளுக்கு உதவிசெய்கிருன். இவ்வளவில் அவன் பெருங் கருணையாளன். ஆறு சமயங்களும் அவன் வகுத்தவைகளே; அவ்வச் சமயங்களின் மூலப்பொருளாக, நின்றவனும் அவனே. அவ்வாருயின், சமணத்தை அழிக்கத் திருஞான சம்பந்தருக்கு அருள் வழங்குதல் முறைமையாகுமோ? உண்மை. திருஞானசம்பந்தர் அறத்தின் வழிநின்று வென்ருரே யொழியவேறன்று. அறமும் அருளும் தம்முள் மாறுபட்டவை அல்ல. அறிவின் வளர்ச்சி முறைமைக் கேற்பக் கொள்கைகள் வகுக்கப்பெறுகின்றன. சமணசமயக் கொள்கைகள் அறிவு வளர்ச்சிப் படிகளில் இடை நின்ற சிலருக்கு ஒப்புமையாக அமைந்த கொள்கைகள். அப்படிகளுக்கு மேலுள்ள படிகளில் அறிவு முதிர்ச்சி பெற்றவர்கள் அனுபவித் துணர்ந்த கொள்கைகளை நோக்க நிறைவு பெருக் கொள்கைகள் என்று சொல்லலாமே யொழிய, பொய்யானவை என்று சொல்ல முடியாது. குறையுடையவை நிறையுடையவைகளுடன் மோதும் போது தோல்வித் தானம் குறையுடையார்பாற் சார்வது அறமுறைதானே! அவ்வாருயின்,

"நற்றமிழ் வல்ல ஞானசம்பந்தன் நாவினுக்கரையன்
நாளைப் போவானும்
கற்ற சூதன் நற் சாக்கியன் சிலந்தி
கண்ணப்பன் கணம்புல்லன் என்றிவர்கள்
குற்றம் செய்யினும் குணமெனக் கருதும்
கொள்கை கண்டு நின் குரை கழல் அடைந்தேன்
பொற்றிரள்மணிக் கமலங்கள் மலரும்
பொய்கை சூழ் திருப்புன் கூருளானே

(7—55—4.)

என்ற சுந்தரர் தேவாரத்தின் மூலம் சார்புடையவர்கள் செய்த குற்றங்களையும் குணமெனக் கருதும் கொள்கையுடையவனை, நேர்மை யுடையவன் என்று எவ்வாறு கொள்ள முடியும்? நம்பியாரூரரின் இத்திருவாக்கினுக்குப் பற்பலவாறு பொருள்கூறி இடர்ப் பட்டவர்கள் உண்டு. குற்றமே செய்யினும் குணம் எனக்கருதும் கொள்கை கண்டு என்பதால் அங்கே குறிப்பிடப் பெற்றவர்கள் குற்றமே செய்யாதவர்கள் என்பதே அடிப்படைப் பொருள். ஒரு தந்தைக்கு நான்குபிள்ளைகள் என்று கொள்வோம். சிறியபிள்ளையைப் பற்றி ஏனைய மூவரும் தந்தையிடம் குறை சொல்லலாம் என நினைக்கிருர்கள். அப்போது ஒரு பிள்ளை சொல்லுகிருன். அவன் குற்றம் செய்ததாகவே சொன்ஞலும், 'அப்படியா? நல்லதே செய்தான் என்று

சொல்லி விடுவார் தந்தை' என்று சொன்னுகில் சிறிய பிள்ளை குற்றம் செய்துள்ளான் என்பது பொருளன்று; அவன் செய்த குற்றத்தைக் குணமாகக் கொண்டு விட்டான் என்பதும் கருத்தன்று. அதுவும் அறநெறிப் பயிற்சியும் அறிவுநெறி ஆற்றலும் விளைத்த மதிப்பீடுகளின் விளைவு என்றே கொள்ள வேண்டும். சிவனடியாராயின் இதுசெய்யார், செய்யின் அது அறந்தழுவியதாகவே இருக்கும் என்ற கொள்கையை உலகுக்கு அறிவுறுக்கத்தான் அவ்வாக்கு எழுந்ததே யன்றி, இங்குக் குறிப்பிடப் பெற்றவர்கள் என்னென்ன குற்றங்கள் செய்தார்கள் என்று ஆராய்வதற்கு அன்று என்பதை உணர்தல் வேண்டும். இத்தகைய அறநெறிப் பயிற்சியை, அதன்மூலமாகப் பெறும் ஞானப் பேற்றினை வரையறை செய்து அமைக்கும் திருத்தொண்டினை ஞானவாரமுதமுண்ட பிள்ளையார் தம்முடைய வாழ்நாளில் முற்ற முடியச் செய்து காட்டியருளியதை இரண்டாந் திருமுறையில் சிறக்கக் காணலாம். இரண்டாந் திருமுறையில் நிலை நாட்டப்பெறும் கொள்கைகளின் பிழிவாக, சிவஞான போதத்தின் இரண்டாம் நூற்பா விளங்குகிறது. அந்நூற்பா

"அவையே தானே ஆயிரு வினையிற்
போக்கு வரவு புரிய ஆணையின்
நீக்கமின்றி நிற்கும் அன்றே

என்பதாம்.

திருஞானசம்பந்தர் அருளிய இரண்டாந்திருமுறையானது திருப்பூந்தராய்த் திருப்பதிகத்திலிருந்து திருப்புகலித் திருப்பதிகத்துடன் நிறைவு பெறுகிறது. திருஞானசம்பந்தர் ஒருவரே தம்மீது ஆணையிட்டுக் கூறக்கூடிய வல்லமையுடையவர் என்று நம்பியாண்டார் நம்பிகள் கூறுகிருர்.

"முத்திப் பகவன் முதல்வன் திருவடியை
அத்திக்கும் பத்தரெதிர் ஆணை நமது என்னவலான்"

என்பது ஆளுடைய பிள்ளையார் திருத்தொகை. இதனைத் தெய்வச் சேக்கிழார்,

காரைகள் கூகை முல்லை என நிகழ் கலைசேர் வாய்மைச்
சீரியற் பதிகம் பாடித் திருக்கடைக்காப்புத் தன்னில்
நாரியோர் பாகர் வைகும் நனிபள்ளி உள்குவார்தம்
பேரிடர் கெடுதற்கு ஆணை நமது எனப் பெருமை வைத்தார்

என்று (2018) புகழ்வாராயினர். திருஞானசம்பந்தர்

"நடுவிரு ளாடுமெந்தை நனிபள்ளி யுள்க
வினை கெடுதல் **ஆணை நமதே**" 2.220-11

"ஆனசொன் மாலையோதும் அடியார்கள்
வானில் அரசாள்வர் **ஆணை நமதே**" 2.221-11

"சிந்தைசெய வல்லவர்கள் நல்லவர்கள்
என்ன நிகழ்வெய்தி இமையோர்
அந்தவுல கெய்தி அரசாளு மதுவே
சரதம் ஆணை நமதே" 3-336-11

"வானிடை வாழ்வர் மண்மிசைப் பிறவார்
மற்றிதற்கு ஆணையும் நமதே 3-376-11

என நான்கு இடங்களில் 'ஆணைநமதே' எனக் குறிப்பிட்டாலும், முதன்முதலாக "ஆணைநமதே" எனக் கிளந்தது திருநனிபள்ளித் தேவாரத் திருப்பதிகத்தில்தான். அது இரண்டாந் திருமுறையில் உள்ளது. திருஞானசம்பந்தர் ஞானவாரமுதமுண்ட நாளின் மூன்ருவதுநாள் இம்மறை மொழியை வெளிப்படுத்தியருளினுராகக் கொள்ளவேண்டும். இவ்வகையில் திருஞானசம்பந்தரின் திருமுறைகள்

"நிறைமொழி மாந்தர் ஆணையிற் கிளந்த
மறைமொழி தானே மந்திரம் என்ப"

என்ற தொல்காப்பிய நூற்பாவாலும்,

நிறைமொழி மாந்தர் பெருமை நிலத்து
மறைமொழி காட்டி விடும்

என்ற திருக்குறளாலும் மந்திரங்களாக நின்று, தம்மை ஓதுவாருக்கு உரிய பயன்களைத் தந்து நிறைவிக்கும் மொழிகள் எனக் கொள்ள வேண்டும்.

பரம்பொருளை அறம் என்ற தனிப்பொருளாய் நிறுத்தி உலகுக்கு உணர்த்தும் அருஞ்செயலை மேற்கொண்ட ஞானசம்பந்தர் இரண்டாந் திருமுறை முழுவதிலும், பரம் பொருள் அறமாக நின்று செயற்படுமாற்றை விளங்க உரைத்தருளுகின்ருர்.

பரம்பொருள் அருளே குணமாகக் கொண்டது. அப்பொருள் அருள்வடிவாக அமைந்தமையாலேயே உயிர்களை நன்னிலைக்குக் கொண்டுவர வேண்டும் என எண்ணியது. உயிர்களின் நிலைமைக்காக இரக்கங் கொண்டது. உயிர்களின் தேவைகளுக்கு உரிய பொருள்களையெல்லாம் அமைத்துக் கொடுத்தது. இவ்வுலகம் அருளே ஆயினும், பரம்பொருள் செயற்படும் போது, அறமாக நின்று, செயற்படுகிறது. அவ்வகையாயின் அருளுக்கும் அறத்துக்கும் மோதல் வருமே! உயிர்கள் அறிவுடைப் பொருள்கள் ஆனமையால் அவைகள் அறிவுடம்பட்டுத் திருந்தி உண்மையை உணர்ந்து உயர்வை அடையும்வரை, அவைகளின் உயர்வுக்கு வேண்டிய எல்லாவற்றையும் சலிக்காமல் அமைத்துக் கொடுப்பது திருவருள் நிலை. தோன்ருத்துணையாய் நின்று தாங்குவது திருவருள். ஆயினும் அறமுறை விதிகளுக்கு — நேர்மைப் படிமுறை வளர்ச்சிக்குரிய

அற நெறிகளுக்கு மாருகத் திருவருள் ஊடுருவிச் செல்வதில்லே. இவ் வுண்மையை ஞானசம்பந்தரின் மறைமொழியால் விளங்க உணர லாம்.

மதுரையில் அனல் வாத்துக்காக அருளப்பெற்ற பதிகம் தனித் தன்மை வாய்ந்தது. பன்னிரண்டு திருப்பாட்டுக்களே உடையது இப்பதிகம். அதுமட்டுமன்றி முதல் மூன்று பாட்டுக்கள் ஒரு பண்ணிலும் ஏனைய பாட்டுக்கள் வேறு பண்ணிலும் அமையப் பாடப் பெற்றவை. தெய்வச்சேக்கிழாரால் ஏறக்குறைய இருபத்து நான்கு பாட்டுக்களால் உரைகூறிவணங்கியும், பாராட்டிப் பணிந்தும் பெருமையுறுத்தப் பெற்ற பதிகமாகும். இப்பதிகத்தின் முதற்பாட்டு மட்டுமே ஏட்டில் எழுதப்பெற்று, வைகையில் விடப்பெற்றது. திருப் பதிகம் முற்றுவிப்பான் வேண்டி ஏனையபாட்டுக்கள் அப்போதே பாடப்பெற்றவை. இப்பதிகத்தில் சில சிக்கல்களுக்கு விளக்கங் கூறியருளுகின்ருர். சிக்கல்களுள் ஒன்றுதான் மேலே குறிப்பிடப் பெற்ற ''அருளுக்கும் அறத்துக்கும் ஒவ்வாமை''. இக்குறிப்பினே முன்மொழிந்து கொள்ளுகிருர் கீழ்வரும் பாட்டின் மூலமாக.

ஆட்பாலவர்க்கு அருளும் வண்ணமும் ஆதி மாண்பும்
கேட்பான் புகில் அளவில்லே கிளக்க வேண்டா
கோட்பாலனவும் வினேயும் குறுகாமை எந்தை
தாட்பால் வணங்கித் தலேநின்று இவை கேட்க தக்கார்

என்று முன் மொழிந்து கொண்டு, அவனருட் செயல்கள் பல வற்றையும் விளக்கிச் செல்லுகின்ருர். அருள்காரணமாக அரியவன் எளியவன் ஆகிருன். எளிய வழிகளேயெல்லாம் ஆக்கித் தருகிருன். பற்பலமுறைகளில் கருணேயோடு உணர்த்துகிருன். அருளேத்தவிர வேறு ஒன்றும் அவனிடத்து இல்லே என்பதைப் பல நிகழ்வுகளால் வெளிப்படுத்தியிருக்கிருன். இவ்வளவும் கூறிய ஞானசம்பந்தர் இறுதியில்,

அற்றன்றி அந்தண் மதுரைத் தொகையாக்கினுனும்
தெற்றென்று தெய்வந் தெளியார் கரைக்கு ஓலே தெண்ணீர்ப்
பற்றின்றிப் பாங்கின் ஊரவும் பண்பு நோக்கின்
பெற்ருென் றுயர்த்த பெருமான் பெருமானும் அன்றே

என்ற பாட்டின் மூலம் அனைத்தும் அருளே யாயினும், அவ்வருளும் அறத்தின் அடிப்படையில்தான். இன்று இந்த ஓலே வைகையாற்றில் எதிரேறிச் செல்வது எத்தகைய அடிப்படையில் என்று வினவினுல் இறைவன் திருவருட்செயலில்தான். எனினும் அறத்தின் அடிப்படை யில்தான் திருவருள் செயற்படுகிறது என்பதை உணர்த்த, ''பெற் ருென்று உயர்த்த பெருமான்'' என்று குறிப்பிட்டுக் காட்டினுர். அறத்தின் வடிவமாகும் பெற்றத்தைக் கொடியில் அமைத்து உயர்த் திய பெருமான் என்பதால் 'அறம்' அடிப்படைக் கொள்கை என்பது தெற்றென விளங்கும் உண்மை.

அறம் செயற்பாட்டு விதிகளாக அமைக்கப் பெறும்போது 'வினைக்கொள்கை' என்ற பெயரைப் பெறுகிறது. வினைக்கொள் கையை விரிவாக ஆராய்ந்த சமயங்கள் பலவுள்ளன. அருள் மிகுதி யும் கொண்ட பரம்பொருள், கண்ணிலாக் குருட்டுத்தன்மையாய் இருட்டில் கிடக்கும் குழந்தையென்ற உயிரை—பல்லுயிர்களை, மேல் நிலைக்குக் கொண்டு வர முற்படுகிறது என்ற சூழலில் அருளுக்கும் அறத்துக்கும் மோதலுருத வண்ணம் அமைத்துக் கொடுக்கப் பெற்ற வினைக்கொள்கை சைவசமயத்தில் மட்டுமே உண்டு என்று புறச் சமயத்தவராகிய சாக்கியர் வாக்கினுல் எடுத்து மொழிகிருர் தெய்வச் சேக்கிழார். அருட்கொள்கை, அறக்கொள்கை என்ற இருவகைக் கொள்கைகளையும் நெறியுற வகுத்து, முறையுறச் செய லாற்றுகின்ற சிவபரம்பொருளைத் "தூயசிவம்" என்று பாராட்டு கின்ருர்.

"செய்வினையும் செய்வானும் அதன்பயனும் கொடுப்பானும்
மெய்வகையால் நான்காகும் விதித்தபொருள் எனக்கொண்டே
இவ்வியல்பு சைவநெறி அல்லவற்றுக்கில்லை என
உய்வகையாற் பொருள் சிவன் என்றருளாலே உணர்ந்தறிந்தார்"

என்பது பெரியபுராணச் (3645) செய்யுள்.

தேவாரப் பதிகங்கள் பெற்ற தலங்களெல்லாம் திருவருள்நலம் பெற்ற தலங்களாக இன்று போற்றப் பெறுகின்றன. தேவாரப் பதிகம் பெறுதற்குரிய அடிப்படைத் தகுதி என்ன? திருவருளைப் பெறுதல் வேண்டும் என்பதாகக் கொள்ள முடியாது. திருஞானசம்பந்தரைத் தம் வயிற்றில் ஏற்று உலகுக்கு அளிக்கவல்ல பெரும்பேற்றைத் திரு வருளால் பெற்ற பகவதியம்மையார் பிறந்து வளர்ந்து சிறந்த இடம் திருநனிபள்ளி. அது பாலையாகி வளமொழிந்தது என்னில் திரு வருளைக் காரணமாக்க முடியாது. அறவாழ்வு தழைத்தால்தான் ஏனைய வாழ்வுகள் அங்கே வந்து மலரும். தேவாரப் பதிகம் பெற்ற சிலதலங்கள் இன்று வளமொழிந்து நிற்கக் காரணம் யாதாக இருக்க முடியும்! மக்கள் அறவாழ்வில் சிறக்க வேண்டும் என்பது அடிப் படை உண்மை.

"நாடா கொன்ருே காடா கொன்ருே
அவலா கொன்ருே மிசையா கொன்ருே
எவ்வழி நல்லர் ஆடவர்
அவ்வழி நல்லை வாழிய நிலனே"

என்பது புறநானூற்று ஔவையார் வாக்கு.

அறம் செயற்பாட்டு முறை பெறும்போது 'விதிகள்' என்ற பெயரைப் பெறுகின்றன. விதிகளுக்கு உரிய ஆற்றல் அமைய வேண்டும். அறமாக நின்ற அவனே, செயற்பாட்டு விதிமுறை களிலும்வந்து பொருந்துகின்ருன். அறக்கோட்பாடுகளுக்கும் அவ னுக்கும் உள்ள தொடர்பு செய்வானுக்கும் செய்யப்பெற்ற பொரு

ளுக்கும் உள்ள தொடர்பு போன்றதன்று. படைத்தல் போன்ற பெருந்தொழில்களைக் கூட, அவன் தன் அதிகாரம் பெற்ற சிலரைக் கொண்டு நடத்த முற்படுகிறான். ஆனால், அனைத்துப் பொருள்களையும் இயக்கி, நன்மையை நோக்கி உயிர்களை அழைத்துச் செல்லும் அறநெறிப் பயிற்சிப் பணியில் அவன் தானே நேராகத் தொடர்பு கொள்ளுகிறான். அவன்வேறு, அறச்செயற்பாட்டு விதிமுறைகள் வேறு என்பனவல்ல. அறச்செயற்பட்டு முறைகளும் பரம்பொருளும் நீக்கமின்றி, வேறின்றி நிற்கும் முறையை உணர்த்தும் சொல்லே "ஆணை" என்பதாம். இதனை அப்பரடிகள்,

"தொழுது தூமலர் தூவித் துதித்து நின்று
அழுது காமுற்று அரற்றுகின் றாரையும்
பொழுது போக்கிப் புறக்கணிப் பாரையும்
எழுதுங் கீழ்க்கணக்கு இன்னம்பர் ஈசனே"

(5—135—8)

என்று கூறுவதன் மூலம் தெளியலாம்.

அருளுக்கும் அறத்துக்கும் உள்ள தொடர்பை அல்லது இணைப்பை அற்புதத் திருவந்தாதியில் காரைக்காலம்மையார் மிகத் தெளிவாகக் குறிப்பிட்டு விளக்கிக் காட்டுகின்றார்கள்.

"அருளே உலகெலாம் ஆள்விப்பது ஈசன்
அருளே பிறப்பறுப்பது ஆனால்—அருளாலே
மெய்ப்பொருளை நோக்கும் விதியுடையேன் எஞ்ஞான்றும்
எப்பொருளும் ஆவது எனக்கு"

என்பது ஒன்பதாம் பாட்டு. காரைக்காலம்மையார் அருளே உலகெலாம் ஆள்விப்பது எனப் பிறவினையாற் கூறியுள்ளார். அதிலிருந்து உலகை ஆள்வது எது? என்ற வினா எழும். அறம் உலகை ஆள்கிறது. அதனை ஆளுமாறு செய்ய வைப்பது ஈசன் அருள். எனவே, நாம்அருளின் துணைகளைக் கொண்டு உலகில் வாழ்கிறோம் ஆயினும், அருளால் ஒன்றைப் பார்க்கும் தன்மையை நாம் பெற்றாலும் அல்லது பெற முயன்றாலும், இதனால் இதனைப் பார்க்க வேண்டும் என்ற விதி இருக்கிறதே, அந்தவிதியைத்தான்—அறத்தைத்தான் மேற்கொள்கிறேன் என்பது பொருள். அறத்தையும் அருளையும் இணைக்கும் நிலையில் எழும் சிக்கலுக்கு நேராகவே விடை அளிக்கிறார் அம்மையார்.

இறைவனுக்குத்தான் அருள் உண்டாயிற்றே! அருளால் அவன் நேராக உனக்குக் கொடுத்துவிடலாமே! நீயும் அவன் கொடுக்க நேராகப் பெற்றுக் கொள்ளலாமே! எனில் அது ஒவ்வாது எனக் கூறுகிறார்கள். இறைவனை அடையும் முறை இரண்டு. ஒன்று, திறத்தால் சென்று அடைவது. இன்னொன்று அவன் கொடுக்க நாம் பெறுவது. உயிர்கள் இயற்கைக் குறைபாடு கொண்டவைகள் ஆகையால் பயிற்சித் திறத்தால் சென்று அடைய உரிமையுடையனவே யொழிய,

கொடுக்க ஏற்றுக் கொள்ளும் தகுதி பெற்றவை அல்ல. திறத்தால் சென்றடைதல் அறப்பயிற்சி முறை. அவனே கொடுக்க ஏற்றுக் கொள்ளுதல் அருள்முறை. அறப்பயிற்சி முறையை மேற்கொண்டு பயிற்சி முதிர்வு பெற்று, அவ்வகையில்தான் இறைவனின் திருவடிக் கண் சென்று சேரும் திருவைப் பெறமுடியும். ஆனால், சக்திக்கு ஒரு பாகம் ஈந்தவனாகிய அவன் அவ்வாறே தன்னைக் கொடுத்தால், அவனை ஏற்றுக் துய்க்கக் கூடிய தகுதி உயிருக்கு இல்லை என்பதாம். இதை விளக்கும் *அற்புதத் திருவந்தாதிச்* செய்யுளை நோக்குக.

"திறத்தால் மடநெஞ்சே சென்றடைவ தல்லால்
பெறத்தானும் ஆதியோ பேதாய்—நிறத்த
இருவடிக்கண் ஏழைக்கு ஒருபாகம் ஈந்தான்
திருவடிக்கண் சேருந் திரு"

எனவே, அருள்மயமாக நின்ற நிலையானது பரம் பொருளின் தன்னுண்மை நிலை. அது செயற்பாட்டு நிலை பெற்றமைக்குக் காரணமும் அருளே. அவ்வகையில் ஆதியாய் நின்ற அருளானது அறமாகத் தம்மை அமைத்துக் கொண்டு, உலகப் பொருள் எல்லா வற்றுடனும் கலந்து நின்று, எல்லாவற்றையும் இயக்கியும், இயக்கங் காரணமாக அமைந்த செயல்களை மதிப்பீடு செய்து பயன் வழங்கி யும் செயலாற்றுகிறது எனக் கொள்ள வேண்டும். இத்தகைய விளக்கங்கொள்ளுமாறு இரண்டாந் திருமுறை முழுவதும் கழனிச் செல்வ வளங்களை விரித்துரைக்கும் அமைப்புடையனவாக ஞான சம்பந்தப் பெருமான் அமைத்தருளியிருப்பதைக் காணலாம்.

கழனியானது வளமை முழுவதும் பெற்றுத் திகழ்கிறது என்பது உண்மை ஆயினும், அதில் இடப்பெற்ற விதையாகிய நெல் அந்த வளமைகளை ஏற்று, வளர வேண்டுமே யொழிய, திருவருள்தான் அதனையும் செய்யவேண்டும் என்று கூற முடியாது. நெல்லானது தன்னுடைய முயற்சியால், வளமைகளைப் பயன் படுத்திக்கொண்டு செழிக்க வேண்டும் என்பதே அறம்.

மேலே கூறப் பெற்றவைகளை மூலமாக வைத்து, தெளிந்து எடுக்கப் பெற்ற திருநெறிக் கொள்கைகளைக் காணலாம்.

1. பரம்பொருள் மூன்று நிலைகளில் பிறபொருள்களோடு தொடர்பு கொள்கிறது.

2. இருவினைக் கொள்கையாகச் செயற்படுகிறது.

3. பலமுறை இருவினைக் கொள்கையாற் பயிற்சி பெற வேண்டிய நிலை உயிருக்கு உண்டு.

4. வினைக் கொள்கையோடு இறைவன் தொடர்புற்று நின்ற நிலையே "ஆணை"

5. ஆணையும் பரம்பொருளும் ஒன்றே.

மேலே குறிப்பிடப்பெற்ற கருத்துக்களால் சிலபொருள் களின் இருப்பினை நாம் ஏற்றுக் கொள்ள வேண்டியவர்களா கிறோம்.

1. பயிற்சி பெற்றே மேல்நிலை செல்லக்கூடிய சிலபொருள்கள் உள்ளன.

2. அப்பொருள்கள் மேல்நிலையை அடையவேண்டிய தேவையை உடையன; ஆயினும் மேலே செல்ல முடியாத வாறு அமைந்த தடை ஒன்றை உடையனவாக உள்ளன.

3. தடைநீக்கத்துக்குச் செயல் வழிப்பட்ட பயிற்சியே இரு வினைக்கொள்கை. அது உண்டு.

4. செயற்படவேண்டிய கொள்கைபோல செயற்பாட்டுக்குரிய வேறு கருவிகள் தேவை.

இவ்வகையில் அழுக்கை ஆணவம் என்றும் இருவினைக் கொள் கையைக் கன்மமலம் என்றும் செயற்பாட்டுக் கருவியாகிய உடம்பு முதலியவைகளை மாயைமலம் என்றும் கொண்டு தெளியலாம். மேலேகூறிய அனைத்துக் கருத்துக்களாலும் பெறக்கிடந்த ஓர் உண்மை '*பாசம் உண்டு*' என்பதே.

இனி, முதல் திருமுறையில் அமைந்த *திருவெழுகூற்றிருக்கை* என்ற பகுதியில் இறைவனுடைய இலக்கணங்கள் பலவற்றையும் தெள்ளத் தெளிய எடுத்துக் காட்டியுள்ளார். திருமுறையின் பிழிவே சிவநெறிக் கொள்கைகள் என்ற கருத்தைச் செயற்படுத்திக் காட்டிய பகுதியே திருவெழுகூற்றிருக்கை. மேலும், முதல் திருமுறையில் வரும் திருவீழிமிழலைத் திருப்பதிகத்தினுள், இறைவன் உயிர்க ளோடும் உலகத்தோடும் கலந்து நின்ற முறைகளைத் தெளிவுபெற எடுத்துக்காட்டியுள்ளார். சைவசித்தாந்தக் கொள்கையை விளக்கும் ஞானசம்பந்தர் வாக்கு எனக்கொண்டு சான்றோர் பலரும் போற்றி வணங்கும் திருநெறிய தமிழை இங்கே காணலாம்.

ஈறாய் முதல் ஒன்றாய் இருபெண் ஆண் குணம் மூன்றாய்
மாறா மறை நான்காய் வருபூதம் அவை ஐந்தாய்
ஆறார்சுவை ஏழோசையோடு எட்டுத் திசை தானாய்
வேறாய் உடனானான் இடம் வீழிம் மிழலையே

*1—11—2.*

இறை, உயிர், தளை என்ற மூன்றும் தனிநிலைப் பொருள்களேயா யினும் ஏனைய இரண்டும் நிலைபெறுவதற்கு இறைவன் அவை களுடன் இணைந்து ஒன்றாய் நிற்றல் வேண்டும். அவைகளை இயக்

14

கங்கொள்ளச் செய்கின்ற காலத்து இயக்குவோன் இயக்கம் பெறு பவை என்ற வேறுபாட்டில் அவன் நிற்றல் வேண்டும். இறைவன் இயங்குகின்ற அவைகளோடு இயங்குதல் வேண்டும். இல்லையானல் உயிர்களுக்குரிய அனுபவம் நிகழாமற் போகும்.

உயிர்களோடும் உலகப் பொருள்களோடும் நேரே அவன் இணைந்தோ, உடனின்றோ கலப்பதில்லை. ஈடுபட வேண்டிய அவ் வச்சத்திகளோடு இணைகிருன் என மிக நுட்பமாக உரைக்கிருர் ஞானசம்பந்தர்.

தரைமுதல் உலகினில் உயிர் புணர் தகைமிக
விரைமலி குழலுமை யொடு விரவது செய்து
நரைதிரை கெடு தகையது அருளினன் எழில்
வரைதிகழ் மதில்வலி வலமுறை இறையே

*1—123–6*

இனி, உயிர்களுக்குப் பகலும் இரவும் முறையே சகல கேவ லங்கள் என்று கூறப்பெறும். இனி, சகலத்தில் சகலம், சகலத்தில் கேவலம் என்ற நிலைகளையும் விரித்துரைப்பர். இவ்வாறு உள்ள பல நிலைகளிலும், பல அவத்தைகளிலும் இறைவனும் உயிருடன் கலந்து சென்று கொண்டிருக்கிருன் என்ற கருத்தை ஞானசம்பந்தப் பெருமான் அழகுற எடுத்து விளக்குகிருர்.

திருத்துருத்தி (குற்ருலம்), திருவேள்விக்குடி என்பன இருவேறு தனித்தலங்கள். ஆயினும், திருத்துருத்தியிற் பகலிலும், திருவேள் விக்குடியில் இரவிலும் தங்கியிருப்பதாக அமைத்து, இருபதிகளையும் ஒருபதிகத்தால் இணைத்துப் பாடுகின்ருர்.

ஓங்கிமேல் உழிதரும் ஒலிபுனற் கங்கையை ஒருசடைமேல்
தாங்கினுர் இடுபலி தலைகலனுக் கொண்ட தம்மடிகள்
பாங்கினல் உமையோடும் பகலிடம் புகலிடம் பைம்பொழில் சூழ்
வீங்கு நீர்த் துருத்தியார் இரவிடத்து உறைவர் வேள்விக்குடியே

**3—348—1.**

இப்பதிகம் முழுவதிலும் இவ்வாறே இணைத்துப் பாடுகின்றகருத்து, உயிர்கள் மேற்கொள்ளும் பற்பல நிலைகளிலும் இறைவனும் உமை யுடன் இணைந்து சென்று கொண்டேயிருக்கிருன் என்பதாம்.

அடுத்து, பெத்தம் முத்தி என்ற இரண்டினும் இறைவனும் உயிரும் உடனுய் நிற்றல் பற்றி விரித்துரைக்கும் தத்துவக் கருத்துக் களை இரண்டு, பத்து ஆகிய இரண்டு நூற்பாக்களிற் காண முடியும். இறைவன் உயிரில் உடனுக இருந்து செயற்படுவது போல உயிர் இறைவனிடத்து உடனுக ஒருங்கியிருந்து செயற்படவேண்டும் என் பதே முடிந்தகருத்து. இறைவன் உயிரிடத்தே உயிரின் செயல்

மேற்பட, தானிணைந்து நிற்கும் நிலையை உடனுனன் என்று கூறுவது போல உயிரானது இறைவனிடத்து இணைந்து, இறைவன் செயலே தன்செயலாகக்கொண்டு நிற்பதும் உடனுதலே. ஆயினும் முன்னதனோடு வேறுபிரித்துக் காட்டவே 'ஏகனுகி இறைபணி நிற்றல்' என்பர் மெய்கண்டார்.

தலைமைக்குணங்கள் பலவற்றுக்கும் மூலமாய பரம்பொருள் தன்னுடைய பெருமைகளையெல்லாம் குறுக்கிக்கொண்டு, உயிர்கள் விரும்பியாற்றவேண்டிய செயல்களையே தன்செயலாகக் கொண்டு நடத்திச் சென்று கொண்டிருக்கிற தன்மையை உலகமக்களுக்கு உணர்த்துவான் வேண்டி, அச்செயல்களைத் தம்மேல் அமைத்துக் கொண்டு மனமுருகிப் பாடுகின்றார். இவ்வாறு நிற்பதும் உம்இயல்புக் குணமோ என்று கரைந்து கரைந்து பாடுகின்றார்.

*"மலையினார் பருப்பதந் துருத்தி மாற்பேறு*
*மாசிலாச் சீர் மறைக்காடு நெய்த்தானம்*
*நிலையினான் எனதுரை தனதுரையாக*
*நீறணிந்து ஏறுகந்து ஏறிய நிமலன்*
*கலையினார் மடப்பிணை துணையொடுந்துயிலக்*
*கானலம் பெடைபுல்கிக் கணமயிலாலும்*
*இலையினார் பைம்பொழில் இலம்பையங் கோட்டூர்*
*இருக்கையாப் பேணி என் னெழில் கொள்வதியல்பே"*

***1—76—1***

திருவிலம்பையங் கோட்டூர்த் திருப்பதிகம் முழுவதிலும் "எனதுரை தனதுரையாக" என்பதும் "என் எழில் கொள்வதியல்பே" என்பதும் சுட்டிக்காட்டப் பெறுகின்றன. "எனதுரை தனதுரையாக" என்பதனை எடுத்துமொழிந்து, இறைவன் உரைத்த உரையே ஞானசம்பந்தர் உரையாக வெளிப்படுகிறது என உரை வகுத்துச் சென்றுள்ளனர். முன்னர் "ஒருநெறிய மனம்வைத்துணர் ஞானசம்பந்தன்" என்பதனாலும் "ஆணை நமது" என்பதனாலும் அக்கருத்து உண்டாகும். அங்கெல்லாம் திருவருளின் வழி ஞானசம்பந்தர் உடனாய் நின்று, அவன் அருட்செயல் மேம்படுமாறு தாம் தம்மை இணைத்துக் கொள்ளுகிறார். இவ்வகையில் சொல்லவேண்டுமானால் தனதுரை எனதுரையாக" என அருளியிருப்பர். இறைவன் அருள் நெறிக்கு அப்பாற்பட்டு, தானே தன்னை முதன்மையாக ஆக்கிக் கொண்டு ஞானசம்பந்தப் பெருமான் எப்போதும் தொழிற்பட்டிருக்க மாட்டார். ஆனால், உயிர்களிடத்து இறைவன் உடனாக நிற்கும் நிலையை வெளிப்படுத்தி இலக்கணவகையால் உணர்த்தவே, இத்தகைய ஒரு முறையை மேற்கொண்டு அருளியிருப்பார்களோ என்று எண்ணத் தோன்றுகிறது.

### *முடிப்புரை*

அவையேயாய், தானேயாய், அவையேதானேயாய் என நிற்கும் முதல்வன் நிலையை ஒன்ருய், வேருய், உடனுய் நிற்பன் என்று கொள்ளுதல் வேண்டும். இவ்வகையில் உயிர்களோடும், மலத்தோடும் நின்று செயற்படுத்துகிருன். நீக்கமின்றி நிற்பன் என்பதே இவ்வாறு மூன்ருகப் பிரித்துச் சொல்லப் பெறுகிறது. இவ்வகையில் அவன் மேற்கொள்ளும் நிலைகளுக்கெல்லாம் துணைநிற்பது ஆணை. ஆணையைச் சிற்சக்தி என்ப. அவன் நிற்கும் பலவகை நிலைகளுக்கும் ஏற்பவே சக்திகளின் நிலையும் பலவாகும். இவைகளுக்கெல்லாம் அடிப்படையில் நிற்கும் ஒன்றே அறம். எனவே, அறக்கொள்கைகளும் இறைநிலையும் இணைந்த ஒருநிலையே 'ஆணை' எனக் கொள்ளல் வேண்டும்.

# 5. வேந்தனும் ஓங்குக

## முன்னுரை

ஞானவாரமுதமுண்ட பிள்ளையார் அருளிய மூன்று திருமுறைகளி லிருந்து சிவஞானபோத முதன் மூன்று நூற்பாக்களும் மலர்ந்தன என்ற அடிப்படைக் கருத்துக்கிணங்க, இறைவனுண்டு அழுக்குண்டு என்ற கருத்துக்களும், அவைகளை அரண்செய்து நிற்கும் கருத்துக் களும் முதலிரண்டு திருமுறைகளில் அமைந்த சான்றுகள் கொண்டு இணைத்துக் காட்டப்பெற்றன. மேலும், அறமுதலாய மும் முதற்பொருளுள்ளும் அறத்தின் அடிப்படையில் இறையுண்மை, தளை யுண்மை ஆகியவைகள் ஞானசம்பந்தப் பெருமானால் நிலைநிறுத்தப் பெற்றன. "அந்தம் ஆதி" என நிறுத்திக்காட்டப் பெற்ற அறம், செயற்பாட்டு வகையில் மாற்றமுறும் போது 'ஆணை' என்பதாக அமைகிறது. 'ஆணை' என்பது அனைத்துயிர்களையும் அவற்றோடு இணைந்த அனைத்துப் பொருள்களையும் தழுவிய நிலையில், மாறு கோளின்றிச் செயற்படுத்தும் ஒன்று. இனி, மூன்றாந் திருமுறையில் அறமாய், ஆணையாய் நின்ற இவ்வமைப்பாலும் செயலாலும் பயனெய்த இருக்கின்ற பொருளை நிலைநாட்டி, அதனோடு பிறவற்றிற் குள்ள தொடர்பையும் அமைத்துக் காட்டியருளுகின்றார். இவ்வடிப் படையில் திருஞானசம்பந்தர் அருளிய மூன்றாந் திருமுறையையும் மெய்கண்டார் அருளிய மூன்றாம் நூற்பாவையும் இணைத்துக் காணு தல் வேண்டும்.

## அம்மையின் வரம்

காரைக்காலம்மையார் பேய் வடிவு பெற்று, "நற்கணத்துள் ஒன்றாய நாம்" எனப் பெருமிதத்துடன் கூறிக்கொண்டே சென்று, திருக்கயிலையை அடைந்து, பெருமானைக் கேட்ட வரங்களுள் ஒன்று.

"அறவா! நீ ஆடும்போது உன் அடியின் கீழ் இருக்கவேண்டும்"

என்பது. (பெ. 1781.) அவ்வரத்தினை அளித்த இறைவன் "திருவா லங்காட்டினில் தங்கியிருந்து நீ வேண்டிய வரத்தின் பயனடைக" என்று கூறினன். அவ்வாறே அம்மையார் தங்கியிருப்பதாகக் கொள்வது மரபு. திருவாலங்காட்டில் உள்ள சபை இரத்தினசபை எனப் பெறும். அத்தகைய ஒரு சபை அங்கு இல்லை. திருக்குற்றாலத் தில் சித்திரசபையும், திருநெல்வேலியில் தாமிரசபையும், மதுரையில் வெள்ளிச் சபையும், தில்லையில் பொற்சபையுமாக நான்கே உள்ளன.

வரலாற்றமைப்பிலேயும் திருவாலங்காட்டு இரத்தினசபையை வணங்கிப் பாடிய குறிப்பு ஏதும் இல்லை. திருவாலங்காட்டு மூத்த திருப்பதிகம் பாடும் அம்மையார் திருவாலங்காட்டை இடமாகக் கொண்டு ஆடுவதாகக் குறிப்பிடுகிறார்கள். சிதாகாசமாகிய ஞானவெளியில் நின்றாடும் பெம்மான், உயிர்களையே அரங்கமாக அமைத்து ஆடுகின்றான் என்ற குறிப்பை உளங்கொளும் மரபு ஒன்று உண்டு.

கேவலம், சகலம், சுத்தம் என்ற மூன்று நிலைகளிலும் உயிரையே இடமாகக் கொண்டு ஐந்தொழில்களையும் புரிந்து ஆடுகின்றான் என்ற கருத்தை வெளிப்படுத்திய சான்றோர்களும் உண்டு. கூத்தப் பெருமான் ஆன்மாவை—உயிரை இடமாகக் கொண்டு ஆடுவதே **'இரத்தினசபை'** எனக் கூறப்பெற்றது என்றும் கொள்வர். இதனை,

"ஆனிடத்து ஐந்தும் ஆடி"

எனக் குறிப்பர்.

"ஊனொடு உண்டல் நன்றென ஊனொடு உண்டல் தீதென
ஆனதொண்டர் அன்பினில் பேசநின்ற தன்மையான்
வானொடொன்று சூடினான் வாய்மையாக மன்னி நின்று
ஆனொடஞ்சும் ஆடினான் ஆனைக்காவு சேர்மினே" *(3—311—10)*

இங்கே ஆன் என்பது பசு எனநின்று உயிரை—ஆன்மாவைக் குறிக்கும். ஆன்மாவை இடமாகக்கொண்டு ஐந்தொழிலும் ஆடுகின்றான் என்பது இதன்பொருள். காத்தும், படைத்தும், கரந்தும் விளையாடி என்றாற்போல, 'ஆடி' என்ற சொல் ஐந்தொழில் செய்தான் என்ற பொருளைத் தந்தது. இதே தொடருக்கு இதற்கு மாறாக, பசுவினிடமிருந்து கிடைக்கும் பால், தயிர், நெய், கோமயம், கோமூத்திரம் என்ற ஐந்தையும் திருமஞ்சனமாக ஆடுபவன் என்று பொருளுரைப்பதும் உண்டு. அம்மையார் வேண்டிய வரத்தினை எண்ணும்போதும் பெருமானே, என் உயிரையே அரங்கமாகக் கொண்டு நீ ஆடுவதை, நான் அனுபவத்தால் உணர முடியுமேனும், நீ அவ்வாறு ஆடுவதை—என் உயிரையே இடமாகக் கொண்டு ஆடுவதை நான் கண்களாற் பார்க்க வேண்டும்; என்வாயினால் அவ்வனுபவத்தைப் பாடவும் வேண்டும் என்று கேட்டதாகக் கொண்டு அமைதி கொள்ளலாம். அவ்வாறாயின், திருவாலங்காடு என்பது உயிர்களாகிய இரத்தினசபையிற் பெருமான் ஆடுகின்ற இடம் எனக் கொள்ள வேண்டும். அதனாலேயே அம்மையார் காலத்துக்குப் பின் வந்த நாயன்மார்களும், இந்நுட்பம் உணர்ந்து, அப்பதியை மிதிக்காமல் வலஞ்சென்று வணங்கிச்சென்றனர் போலும் என்று கொள்ளலாம். இவ்வகையில், பொதுவாகிய உலகப்படைப்பு முதலிய ஐந்தொழில்கள் ஆற்றுதற்கு ஏனைய சபைகளை இடமாகக் கொள்ளினும், ஒவ்வோருயிருக்கும் தனித்தனியே ஆற்ற வேண்டிய ஐந்தொழிலுக்கு, அவ்வுயிரையே இடமாகக் கொண்டு, சிறப்பு ஐந்தொழிலைச் செய்தருளுகிறான் என்பதே பொருளாகக் கொள்ள வேண்டும்.

ஞானவாரமுதமுண்ட பிள்ளையாரின் மூன்றுந் திருமுறையானது தில்லைப்பதியைப் பற்றிய திருப்பதிகத்துடன் தொடங்குகிறது.

"ஆடினாய் நறு நெய்யொடு பால்தயிர்
அந்தணர் பிரியாத சிற்றம்பலம்
நாடினாய் இடமா நறுங்கொன்றை நயந்தவனே
பாடினாய் மறை யோடு பலகீதமும்
பல்சடைப் பனி கால்கதிர் வெண்திங்கள்
சூடினாய் அருளாய் சுருங்க எம தொல்வினையே"

என்பது அப்பதிகத்தின் முதல் நின்ற திருநெறியதமிழ். இதனுள் "ஆடினாய் நறு நெய்யொடு பால் தயிர்" என்று எடுத்த குறிப்பினால் ஆன்மாவின் உண்மையைத் தெளிவுபடுத்தினார் என்று கொள்வர் சிலர்.

இனி, சூக்கும பஞ்சாக்கர வடிவில் நின்று அறிந்துவந்த பொருளறிவே ஆன்மா என்ற கொள்கையை உளங்கொண்டு, கொன்றை சூக்கும பஞ்சாக்கரத்தை நினைவூட்டி, அதன்மூலம் ஆன்மாவின் உண்மையை உளங்கொண்டது என்றும் கூறுவர்.

இனி, மூன்றுந் திருமுறையில் உள்ள திருவானைக்காத் திருப்பதிகத்தினுள் உயிர்கள் உண்டு; அவை அழியாப் பொருள்கள்; ஊழிக்காலத்தில் சென்று ஒடுங்கிய உயிர்களை இவ்வுலகில் தோன்றுமாறு செய்பவன் பிரமன் என்று கூறுவதிலிருந்து, உயிரைப் பற்றிய பல கொள்கைகளையும் எடுத்து விளக்குவதாகக் கொள்ளலாம்.

"ஊழியூழி வையகத்து உயிர்கள் தோற்றுவா னொடும்
ஆழியானுங் காண்கிலா ஆனைக்காவில் அண்ணலைக்
காழிஞான சம்பந்தன் கருதிச்சொன்ன பத்திவை
வாழியாகக் கற்பவர் வல்வினைகள் மாயுமே." (3—311—11.)

## *திருப்பாசுரம்*

ஞானவாரமுதமுண்ட பிள்ளையார் மதுரையில் புனல்வாதத்தை ஏற்குமுகத்தான் அருளிய பதிகம் "திருப்பாசுரம்" என்றே குறிக்கப் பெறும் பெருமையினையுடையது. இதனுள் முதல் நின்ற திருப்பாசுரம் மட்டுமே ஓர் ஓலையில் எழுதப் பெற்று, வைகையாற்றில் இடப் பெற்றது. இப்பாசுரத்தைத் தாங்கிய காரணத்தாலேயே அந்த ஏடு தண்ணீரை எதிர்த்துச் செல்லும் ஆற்றல் பெற்றது. அதில் குறிக்கப் பெற்ற பாசுரம்,

"வாழ்க அந்தணர் வானவர் ஆனினம்
வீழ்க தண்புனல் வேந்தனும் ஓங்குக
ஆழ்க தீயது; எல்லாம் அரன் நாமமே
சூழ்க வையகமும் துயர் தீர்கவே"

(3—312—1)

என்பது. இதனுள், வாழ்க என்ற சொல்லுக்குரிய பொருள் மூன்று. அந்தணர், வானவர், ஆனினம் என்பவைகளே அவை.

*"அந்தணர்"* என்று சொல்லப் பெறுபவர்கள் தில்லையில் உள்ள சிற்றம்பலம் சார்ந்து விளங்கும் சிவகணத்தவர்கள். இவர்கள்

அறத்துறையில் முற்றநின்று, சிவகணங்களாந் தன்மை பெற்றவர்கள். இவர்களை நீத்தார் பெருமையில் இணைத்துக் காட்டுவார் திருவள்ளுவர். அந்தணர் என்போர் தாம் அறநெறியில் நின்று ஒழுகியதோடன்றி, உலகமக்களையும் அறநெறியில் வாழுமாறு செய்யும் ஆற்றல் வாய்ந்தவர்கள். இவர்களாலேயே இவ்வுலகம் அறநெறியில் நிற்கிறது என்று கூறுதல் மிகையாகாது.

*வானவர் :* அறஞ்செய்து, தன்னளவில் இழுக்கம் இல்லாது வாழ்ந்து சிறந்தவர்கள். இவர்கள் தன்னளவில் உயர்ந்தவர்களே.

*ஆனினம் :* உயிர்க் கூட்டங்கள். அறவழியில் நிற்க வேண்டிய பயிற்சியை மேற்கொள்ளும் ஓரறிவு உயிர் முதல் ஐந்தறிவு உயிர் வரை உள்ளவைகள். பாசத்தோடு பிணைப்புண்டவைகள். ஆறுவது அறிவு விளங்கப் பெறுதவகையில், தன்னுடைய அறிவு ஆராய்ச்சிகளை நிகழ்த்தி உய்ய முடியாதவைகளாய்ப் பாசத்தின் பிணைப்புண்டிருக்கின்றன. எனினும், திருவருளால் மெல்ல மெல்லப் படியேறி வருகின்றனவாகையால் அவைகளை வாழ்க என்ருர்.

இனி. அந்தணர் சிவமாம் தன்மை பெற்ற சிவகணத்தவர்களே. அவர்களையும் வாழ்க என்ருர். அவர்கள் வாழ்வதால்தான் உலகம் வாழ முடியும். அவர்கள் தமக்கென வாழாப் பிறர்க்குரிமையாளர்களாக வாழும் வல்லமையுள்ளவர்கள் ஆகையால், அவர்கள் ஆனினத்தை வாழவைக்க வேண்டிய அறநிலை முதிர்ச்சியுடையவர்கள். ஆனினம் வாழ்வதற்காக அந்தணர்கள் வாழவேண்டும். இடைநின்ற வானவர் அறத்தாற் சிறந்தவர்களே யாயினும், மீளவும் பிறரையும் அறநெறி வாழவைக்கும் பணியினை மேற்கொண்டு அருளார்களாக மாறவேண்டும். எனவே அவர்களையும் வாழ்க என்ருர்.

இனி, வேந்தன் எனக் கூறி, அவனை ஓங்குக என்ருர். அவனைக் கூறுவதற்குமுன் ''வீழ்க தண்புனல்'' என்ருர். அருள்மழை பொழிய வேண்டும் என வேண்டினர். 'வேந்தன்' என்ற சொல்லால் ஆறறிவு பெற்று, மக்களாய் வாழும் உயிர்களைக் குறிப்பிட்டார்.

வேந்தன் என்பான் ஆள்வதற்கு உரிமை படைத்தவன். அறிவின் துணை கொண்டு வாழ்வதோடு, அறிவற்றவைகளை ஆளுவதற்குப் பிறந்தவன். ஆளவந்தவன், ஆட்சி செய்யவந்தவன் அடிமையாக நிற்கிருன். தன்னைவிட மேலான அறிவுப் பொருளுக்கு அடங்கி, தன்னினும் கீழான அறிவற்றவைகளை அடக்கியாள வேண்டியவன், தன்னுடைய அடிமைகளுக்குத் தான் அடிமையாகி விட்டான்.

உடலையே நான் என்று மாறுபட உணர்ந்து, அவ்வுடலுக்கே அடிமையாகி விடுகிருன். அடிமையாகி மயக்கவுணர்வு கொண்டு, அதனையே உண்மை அறிவு எனக் கொண்டுவிட்ட காரணத்தால் கூனிக் குறுகிவிட்டான். ஐம்புலப் பசுக்களை மேய்க்கவேண்டியவன், அவைகளால் மேய்க்கப்படுபவனுக ஆகிவிட்டான். அடிமை நிலையிலிருந்து உயர்ந்து ஆளும் நிலைமைக்கு வரவேண்டும். ஆண்மை பெற்று நிற்க வேண்டியவன் ஆணவத்தால் அணுத்தன்மைப்

பட்டான். பெயரளவில் வேந்தன்; செயலளவில் அடிமை; தன்னுல் அடிமைப்படுத்தப்பட வேண்டியவைகளேத் தன்னுள் அடிமைப் படுத்தி, உண்மையாக ஆட்சிசெய்யும் வேந்தனுக அவன் உயர வேண்டும் என்ற நினைப்பில் **வேந்தனும் ஓங்குக** என்ருர்.

வேந்தன் ஓங்குவது ஒருபுறம் இருப்பினும் ஞானசம்பந்தப் பெருந்தகை, அவ்வேந்தனே அளவுக்கு மீறியும் அழுத்திய தீயது— ஆணவம் சற்றே வலிகுறைந்து ஆழ்க என்று கூறினுர். அது மட்டு மன்றி, ஆணவத்தின் வலி தொலைப்பதற்கு அரன் நாமமாகிய திரு வைந்தெழுத்தே சிறந்த கருவியாகும் என்பதையும் எடுத்து மொழிந் தார். இதனை அடிப்படையாகக் கொண்டே மெய்கண்டார் 'விதி எண்ணும் அஞ்செழுத்தே'' என்று குறிப்பாராயினர்.

எனவே, **''வேந்தனும் ஓங்குக''** என்ற திருப்பாசுர மொழியே மெய்கண்டாரின் மூன்ரும் நூற்பாவினுள் பலவகையான மயக்க வுணர்வுக் கருத்துக்களே எடுத்துக்காட்டி மறுத்து மொழிவதற்குரிய கருத்துக் கருவூலமாக நின்றது எனக் கொள்ள வேண்டும்.

இவ்வகையில், மெய்கண்டாரின் சிவஞானபோதத்து நான்காம் நூற்பாவும் ஆன்மாவின் இலக்கணத்தையே கூற எழுந்தது என்னும் கருத்தை அழுத்தமாகத் தெரிவிப்பது போலவே திருநாவுக்கரசு பெருமான்,

''நாமார்க்கும் குடியல்லோம்''

என அருளிய தனிப்பதிகம் மூலமாக அமைந்துள்ளது எனக் கொள்ள வேண்டும்.

இனி, 'வேந்தனும்' என்ற சொல்லில் அமைந்த உம்மைச் சிறப் பிஞல் இந்நாள்வரையில் ஐம்புலன்களே உள்ளிட்ட அனைத்துக் கருவிகளும் வேடர்களாக நின்று, உயிர்கள் விரைவில் வளர்ச்சி யெய்தமுடியாதவாறு தடைசெய்தன. அவ்வுயிர்கள் வளர்ச்சி பெற்ருலுங்கூட, அவ்வளர்ச்சியானது அயர்ச்சி—சோர்வுடன் கூடிய வளர்ச்சியாகவே அமைந்திருந்தது. ஞானசம்பந்தப் பெருமான் திரு வாக்கினுள் அமைத்த ஆணே வலிமையால் உடல் முதலிய கருவி களும் உயிர்களுக்கு ஆக்கம் விளேக்கும் வகையில் உயர்நிலே எய்தின. மாயாகாரியமாக நின்ற தனு, கரண, புவன, போகங்கள் இப்போது அருளாய் நின்று, உயிர்கள் விரைவில் மேன்மையை எய்துதற்குத் துணை செய்தன. மாயையால் ஆக்கப் பெற்ற அவைகள் உயிர்களுக்கு ஓரளவு விளக்கம் செய்த காரணத்தால் அவைகளே ''மாயா தனு விளக்கு'' என விளக்கம் கூறியது சாத்திரம். இப்போது அவைகள் அருளாகவே ஓங்கி நின்றன. இவ்வகையால் உடல் அருட்பெருஞ்சோதி உடலாகமாறியது; உயிர்களுக்கு ஆக்கம் தரும் வகையில் ஓங்கி நின்றது.

இக்கருத்தினைத் தெளிய உணர்ந்த காரணத்தாலேயே, வடலூர் வள்ளல் இராமலிங்க சுவாமிகள் அன்புருவம், அருளுருவம், இன் புருவம் ஆகிய மாற்றங்களையெல்லாம் இவ்வுடம்பு பெறும் என எடுத்துக்காட்டியருளிய குருவே என ஞானசம்பந்தப் பெருந்தகை யைப் பாராட்டுவாராயினர்.

15

## முடிப்புரை

மெய்கண்டார் அருளிய மூன்றும் நூற்பாவானது உயிர்கள் உண்டு என்பதை நிறுவுவதற்காக அமைக்கப்பெற்றது. உயிர்கள் உண்டு என்பதை ஒத்துக் கொண்டாலும் அவைகளை உடல், அந்தக் கரணம் முதலியவைகளோடு சார்த்திக் கண்டு, அவைகளே உயிர் என்று மாறுபட உணர்ந்த கொள்கைகளையெல்லாம் தொகுத்து அமைத்து அவைகளுக்கு விளக்கம் கூறும் வகையில், பிறர் மதங் களுக்குரிய மறுப்பாக அமைக்காமல், தன்கோள் நிறுவும் அமைப்பி லேயே மெய்கண்டார் அமைத்துள்ளார்.

மெய்கண்டார்க்கு மூலமாக அமைந்த திருப்பாசுரம் மூன்றுந் திரு முறையைச் சார்ந்தது. அந்தணர், வானவர், ஆனினம் என்பவை அறநெறியால் அருள்நெறியைச் சார்ந்த மூவகை உயிர்கள். அவற்றுள், ஆனினம் என்பவை அனைத்துயிர்த் தொகுதியையும் குறிக்க வந்த சொல். 'வேந்தன்' என்பது மனித உடம்பெடுத்து நிற்கும் உயிர்களைக் குறிக்க எழுந்த சொல்லாகக் கொள்ள வேண்டும்.

அருள்மழை பொழியவேண்டும் என்றும், ஆணவத்தின் வலிமை தொலையவேண்டும் என்றும் வேண்டிக் கொள்வாராயினர். இவ் வகையில் வேந்தனும் ஓங்குவதற்குரிய வாய்ப்பு அமைந்தது எனக் கொள்ள வேண்டும். 'வேந்தனும்' என்ற சொல்லில் அமைந்த உம் மையால் மாயாகாரியமாகிய இவ்வுடம்பு அன்புருவாக, அருளுருவாக, இன்புருவாக மாறுகின்ற மாற்றத்துக்குள்ளாகியது. இவ்வாறு அருட் பெருஞ்சோதி வள்ளற்பெருமான் உடல் மாற்றக் கருத்தினை ஏற் பதற்கு இத்திருமுகப்பாசுரமே அடிப்படையாக இருந்தது என்பதை யும் உணர்ந்து கொள்ளுதல் வேண்டும்.

*மூன்று திருமுறைகளாலும் போந்த தொகைப் பொருள் :* திரு ஞானசம்பந்தப் பெருமான் அருளிய மூன்று திருமுறைகளும் முறையே பதி, பாசம், பசு என்ற முப்பொருள்களும் உள்பொருள் களே என நிறுவுவதற்கெழுந்தவைகளே.

"அந்தம் ஆதி" எனவும், "ஆணையின் நீக்கமின்றி நிற்கும்" எனவும் "வேந்தனும் ஓங்குக" எனவும் ஞானசம்பந்தப் பெருமான் அருளிய திருவாக்குக்களிலிருந்து தெளிவாக வடித்தெடுக்கப் பெற்ற கொள்கைகளாக முப்பொருளுண்மையை மெய்கண்டார் எடுத்து வழங்கியருளினர். வேறு திருமுறைகளிலும் இக்கருத்துக்கள் கூறப் பெறலாமாயினும் ஞானசம்பந்தர் இவ்வுலகுக்கு எழுந்தருளுவிக்கப் பெற்றதன் நோக்கம் பொருளுண்மையைக் காட்சியளவையின் வைத்து நிறுவவேண்டும் என்பதாகவே கொள்ளல் வேண்டும்.

அறியும் முறையை ஞானசம்பந்தர் தொண்டாகவும் அடையும் முறையை நாவுக்கரசர் தொண்டாகவும் இணைத்துக் கண்டு இரு வகைத் தொண்டும், ஒரே குறிக்கோளை அடிப்படையாகக் கொண்டவை என்பதாகக் கொள்ளவேண்டும் என்பதே திருமுறை வகுத்தநெறி.

# 6. அமைச்சரசு

## *முன்னுரை*

*"ஈன்ருளுமாய் எனக்கு எந்தையுமாய் உடன் தோன்றினராய்*
*மூன்ருய் உலகம் படைத்து உகந்தான் மனத்துள் இருக்க*
*ஏன்ருன் இமையவர்க்கு அன்பன் திருப்பாதிரிப் புலியூர்த்*
*தோன்ருத் துணையாய் இருந்தனன் தன்னடியோங்களுக்கே"*

என்பது திருநாவுக்கரசர் கல்லே தோணியாகக் கடல் கடந்து கரையேறிய இடமாகிய கரையேற விட்ட நகருக்கு அணித்தாகிய திருப் பாதிரிப் புலியூரை அடைந்து வழிபடும்போது அருளிய திருப்பதிகத் தின் முதல் தமிழ்.

தென்ணுற்காட்டுத் திருவாமூரில் சடையனர்க்கும் மாதினியார்க் கும் பிறந்த மகவுக்குத் தந்தைதாயர் இட்ட பெயர் '*மருள் நீக்கியார்*' என்பது. அக்குழவி வளர்ந்து, பின்னே சமண சமயம் சார்ந்து, அச் சமய அருங்கலைகள் பலவும் தேர்ந்து, தலைமைத்தன்மையைத் தகுதி யால் பெற்ற போது '*தருமசேனர்*' என்ற பட்டப்பெயரால் அழைக் கப் பெற்ருர். பின்னர், அவர் மீண்டும் சைவம் சார்ந்து, திருவதிகை வீரட்டானேசுரர் தம்மைப் பணிந்து, "பாவுற்று அவர் செந்தமிழின் சொல்வளப் பதிகத்தொடை பாடிய பான்மையினல், '*நாவுக்கரசு*' என்று உலகேழினும் நின் *நன்னுமம்* நயப்புற மன்னுக" என்று யாவர்க்கும் வியப்பு எய்துமாறு ஆகாயத்தில் ஓர் அசரீரி கூறியது. அதுமுதல் '*திருநாவுக்கரசு*' என்ற பெயர் இவருக்கு எய்துவதாயிற்று. பின்னர்,ஞானசம்பந்தப் பெருமானுல் அன்புடன் அழைக்கப் பெற்ற பெயரே "*அப்பர்*" என்பது.

திருநாவுக்கரசு பெருமானைத் தத்துவநோக்கில் விளங்கிக் கொள்ளுதல் இவ்விடத்துக்குப் பொருந்துவதாகும்.

*(1) சிவஞானம் கண்ட தொண்டுத்திருவுரு:* திருஞானசம் பந்தப் பெருமான் ஞானத்தின் திருவுருவாகக் காணப் பெற்றவர். சிவஞானப் பாலருந்திய காரணத்தால் சிவஞானமாகவே விளங்கிய வர். திருநாவுக்கரசு பெருமான் சீகாழிக்கு எழுந்தருளப் போகிருர்கள் என்பதைக் கேள்வியுற்ருர் திருஞானசம்பந்தர். எதிர்கொண்ட ழைக்க வேண்டும் என்பதுபோன்ற எண்ணம், எண்ணத்தை ஒட்டிய செயற்பாடுகள் நடைபெறுகின்றன. இதற்கிடையில் திரு வருளே கண்ணுகக்காணும் சிவஞானச் செல்வராகிய திருஞானசம்

பந்தர் தம்முடைய அகக்கண்ணில் திருநாவுக்கரசரின் உருவ அமைப்பு எவ்வாறு இருக்கும் என்று நினைக்கத் தோன்றுகிறது. அவர் ஒரு தொண்டர் என்பதை அறிந்திருந்தார். அவ்வடிப்படை நினைவில் ஒரு உருவத்தை அமைக்கிருர். சிவஞானம் என்ற திரு வருளில் தோய்ந்து நின்று தம் உள்ளக்கிழியில் தொண்டர் ஒருவரின் உருவத்தை அமைக்கிருர். உள்ளக்கிழியின் உருவெழுதி என்று அப்பரடிகள் அருளுமாறுபோல சிவஞானம் என்ற ஒன்றைத் துணைக் கொண்டு 'தொண்டன்' உருவத்தை உள்ளத்தில் அமைத்துக் கொண்டிருந்தார். அப்பரடிகளை நேராகக் காணும்போது, அவர் உள்ளத்தில் 'தொண்டன்' என்ற சொல்லுக்கேற்ற வடிவம் எதுவாக இருந்ததோ அதேவடிவம் நேர்நிற்கக் கண்டதுபோல திருநாவுக் கரசரின் தோற்றம் இருந்தது எனக் குறிப்பிட்டருளுகிருர் தெய்வச் சேக்கிழார்.

"சிந்தை இடையரு அன்பும் திருமேனி தன்னில் அசைவும்
கந்தை மிகையாங் கருத்தும் கை உழவாரப் படையும்
வந்திழி கண்ணீர் மழையும் வடிவிற் பொலி திரு நீறும்
அந்தமிலாத் திருவேடத்து அரசும் எதிர் வந்தணைய

கண்ட கவுணியக் கன்றும் கருத்திற் பரவு மெய்க்காதல்
தொண்டர் திருவேடம் நேரே தோன்றியது என்று தொழுதே"

என்று (பெ. 2173, 2174) விளக்கியருளுவதைக் காணலாம். அவ் வாறு கருத்திற் கண்ட தொண்டர் வேடம் நேரே தோன்றிய காலத் தில் ஞானசம்பந்தப் பெருந்தகை "தொண்டரே" என்றல்லவோ அழைத்திருக்கவேண்டும்! அவ்வாறின்றி "அப்பரே" என அழைத் ததன் காரணம் என்ன?

திருஞானசம்பந்தர் அப்பரடிகளைக் காண்பதற்கு முன்னமேயே திருத்தில்லைக்குச் செல்லுகிருர்கள். அங்கே பல்வகை வீதிகளையுங் கடந்து, சிவபெருமானின் அடியவர் பயிலும் திருவீதியைக் காண் கிருர்; நிலத்தில் விழுந்து வணங்குகின்ருர். அவர் அவ்வீதியில் விழுந்து வணங்குவதற்குத் தெய்வச் சேக்கிழார் ஒரு காரணம் கூறு கிருர்.

மலர்ந்த பேரொளி குளிர்தரச் சிவமணங்
கமழ்ந்து வான் துகள் மாறிச்
சிலம்பலம்பு சேவடியவர் பயில்வுறுஞ்
செம்மையால் திருத்தொண்டு
கலந்த அன்பர்தம் சிந்தையில் திகழ்திரு
வீதி கண் களி செய்யப்
பலன்கொள் மைந்தனர் எழுநிலைக் கோபுரம்
பணிந் தெழுந்தனர் போற்றி.

தெய்வச் சேக்கிழார் வாக்காகிய இச்செய்யுள் (பெ. 2060) திரு வருள் நலம் பழுக்கப் பாடிய செம்மைப்பாட்டு எனக் கொள்ள வேண்டும். இறைபரம்பொருளின் திருத்தொண்டில் ஈடுபட்டு, அத்

தொண்டிலேயே தம்மை முழுமையாக ஈடுபடுத்திக் கலந்து விட்ட அன்பர்களுடைய சிந்தையில் திகழுகின்ற திரு ஒன்று உண்டு. அத் தகைய திருவைத் தம் சிந்தையில் திகழவைத்து வாழுகின்ற அடியவர்கள்—தொண்டர்களின் உள்ளத்தில் காண வேண்டிய ஒன்றை, வெளிப்படையாகக் கண்ணால் காணவேண்டும் எனில் அத்திருவை, திருவீதியாகக் காணலாம். அடியவர் வீதியை இடமாகக் கொண்டு அமைந்திருக்கும் திருவும், செம்மையால் திருத்தொண்டு கலந்த அன்பர்தம் சிந்தையில் திகழ் திருவும் ஒன்றே என இணைத்துக் காட்டுகிறார். அத்திரு யாது?

அடியவர் உள்ளத்துக்கும் வீதிக்கும் பொருந்துமாறு இணைப்புப் பொருளமைத்துக் காட்டுகிறார்.

*தொண்டர்தம் சிந்தையில்* திருவருளொளி மலர்ந்து வீசும். அது குளிர்ச்சியை உண்டாக்கும். சிவமணம் கமழும். அங்கே உள்ள பிரமன் எழுத்து எனப் பெறும் ஆகாயத் தூசி மாறிப் போக அங்கே தூக்கிய திருவடியின் சிலம்பொலி செய்யுமாறு நடக்கும் சேவடியாராகிய இறைவன் பயின்று தங்கியிருக்கிறான். அத்தகைய செம்மையே தொண்டர்தம் சிந்தையில் திகழும் திரு. சுருங்கக் கூறின், தொண்டில் முகிழ்த்த தூயனும் இறைவனே அத்திரு.

*அடியவர் வீதியில்,* அடியவர்கள் பயின்று செல்கின்ற காரணத் தால் அவர்கள் திருவுடம்பில் பூசிய திருவெண்ணீற்றொளியானது அவ்வீதியைக் குளிர்ச்சியுடையதாகச் செய்கிறது. சிவமணம் கமழு கிறது. சிவனடியவர்கள் வரும்போது அவர்களுடைய திருவடிகளை அபிஷேகம் செய்த காரணத்தால், ஈரமான கால்களுடன் நடப்ப தால் ஆகாயம் வரை எழுப்பும் தூசி மாற்றம் பெறுகிறது. இவ்வகை யில் திருத்தொண்டர்களின் உருவத்தைக் கண்ணால் காணும் வடிவ அமைப்பாகவே திகழ்கிறது அந்த அடியவர் வீதி என்று பொருள் கொளவைத்தார்.

இவ்வாறு, திருத்தொண்டர்தம் உள்ளத்தில் அமைந்த திருவே அகவுருவம், அதனைக் கண்ணுக்குக் காட்டும் புறவடிவமே அடியவர் திரு வீதி என்ற இணைப்பினால் மட்டுமே நாம் ''அப்பர்'' என விளித்த தன் காரணத்தைக் கண்டு விட முடியாது.

''திருநின்ற செம்மையே செம்மையாக் கொண்ட
திருநாவுக்கரசன் தன் அடியார்க்கும் அடியேன்''

என்றும்,

''வம்பரு வரி வண்டு மண நாற மலரும்
மதுமலர் நற் கொன்றையான் அடியலாற் பேணு
எம்பிரான் சம்பந்தன்''

என்றும் முறையே திருநாவுக்கரசரையும் திருஞானசம்பந்தரையும் திருத்தொண்டத் தொகையில் சுந்தரமூர்த்தி சுவாமிகள் அறிமுகம்

செய்து வைத்தருளுகிறார்கள். இவ்விரண்டையும் தெய்வச் சேக்கிழார் நமக்கு விளக்கிக் காட்டும் முறையே. நாம், முன்செய்த தவத்தை நமக்கு விளக்குகிறது.

திருத்தொண்டர் எனப்பெறும் திருநாவுக்கரசர் வளர்திருத் தொண்டின் நெறி இவ்வுலகில் வாழ்வதற்காக வந்த பெருந்தகை. அவர் கொள்கையானது "திருநின்ற செம்மை" என விளக்கப் பெறுகிறது. செம்மை என்பது அறத்துறை என்று திருநாவுக்கரசரே கூறுவார். "செம்மையுள் நிற்பராகில் சிவகதி விளையும் தானே" என்பது திருநாவுக்கரசர் வாக்கு. எனவே சிவம் விளங்கிய சிந்தையே திருத்தொண்டின் மலர்ந்த அன்பர்தம் சிந்தையில் நின்ற திரு. சுருங்கக் கூறினால், சிவமே விளைந்த சிந்தை என்பது பொருளாம்.

அடுத்து, திருஞானசம்பந்தர், கொன்றைமாலையணிந்த சிவபிரான் அடியலால் வேறு எதனையும் வணங்காத கொள்கையுடையவர். தில்லையில் உள்ள அடியவர் வீதியை விழுந்து வணங்குகிறார். திருவீதி சிவமாக விளங்கியிருக்க வேண்டும். இல்லையானால் வணங்கமாட்டார். அடியவர் வீதி சிவமாகவே விளங்குகிறது என்பதைக் குறிப்பிடவே திருத்தொண்டு கலந்த அன்பர் தம் சிந்தையில் திகழுகின்ற திருவைக் காட்சியில் காணவைப்பது வீதி எனக் குறிப்பிட்டார். எனவே, திருத்தொண்டர் சிந்தையும், திருத்தொண்டர் வீதியும் சிவமே என்ற இணைப்பை நேராகக் கண்டு, விழுந்து வணங்கிய திருஞானசம்பந்தர், திருத்தொண்டர் தம் சிந்தையில் செம்மையாக நின்று சிவமணங் கமழ வீற்றிருக்கும் திருவாகும் சிவமே தொண்டராகிய திருநாவுக்கரசின் வடிவமாக வருகிறது என்பதையே காணுகின்றார். திருத்தொண்டர் தம் சிந்தையில் விளங்கும் திருவுருவும் திருவீதியும் ஒன்றெனக் கண்டு வணங்கியது தில்லையில். இங்கே திருத்தொண்டர்தம் சிந்தையில் விளங்கும் திருவாம் சிவத்தை—திருநாவுக்கரசரெனும் தொண்டரின் வடிவத்தில் காணுகிறார். சிவமெனவே விழுந்து வணங்குகிறார். உள்ளத்தில் தந்தையென—அப்பன் எனக் கருதி வழிபடும் அவ்வுருவை, அப்படியே மானிட வடிவத்தில் விளக்கிக் காட்டும் திருநாவுக்கரசரை "அப்பரே" என அழைக்கிறார். அவரோ 'அடியேன்' என்று பதிலிறுக்கிறார். தெளிவாகக் கூறின், தொண்டின் முதிர்ச்சியால், புன்புலால் யாக்கையே சிவமாகத் திகழும் பேறு பெற்றவர் அப்பரடிகள் என்பதாம்.

2. *மருள்நீக்கியார்* திருஞானசம்பந்தப் பெருந்தகையை அறத்தின் காவலராக நிறுத்தி, அறத்தின் மூர்த்தியாக நின்ற பரம்பொருளை அறத்தின் அடிப்படையில் விளக்கங் காணவைத்து, புலன் கடந்த பொருளாகிய கடவுள் தத்துவத்தை அறத்தின் அடிப்படையில் கண்டும் காட்டியும் நிலைநிறுத்திய பெருந்தகை என்பதை முதன் மூன்று திருமுறைகளுக்கு விளக்கமாக அமைத்த பகுதிகளிற் காண முடிந்தது. அவ்வகையில் திருநாவுக்கரசர் அறத்துக்குச் செயல் வடிவம் கொடுத்துச் செயலாற்றி, அத்தகைய செயல்மூலம் பொரு

ளின் தன்மையை வரையறை செய்த பெருமானாக விளங்குகிறார். இவ்வகையில் இருபெருந் தொண்டுகளைச் செய்தவராகிறார்.

ஞானசம்பந்தப் பெருமானால் அளவையியல் சார்ந்த அறியும் முறையால் நிலைநாட்டப்பெற்ற பொருள்களை, அடையும் முறையால் அப்பொருள்களின் பண்புகளை இவைஇவை என எடுத்துக் காட்டிய பணி ஒன்று. இக்கருத்து விளக்கமாகவே, அறியும் முறையில் நிலை நாட்டப் பெற்ற மூன்று பொருள்களின் உண்மையை முதல் மூன்று திருமுறைகள் சான்றாய் நின்று விளக்கின. அவ்வாறே அப்பொருள் களின் இயல்புகளை—பண்புகளை அடையும் முறையால் எடுத்து விளக்கிக் காட்டிய பெருமை திருநாவுக்கரசருக்கு அமைந்தமையால் அவர்தம் திருமுறைகளும் மூன்றாய் நின்று விளங்கின எனக் கொள்ள வேண்டும்.

இனி, பொருளின் இலக்கணங்களை உணரும் முறையில் செய்ய வேண்டிய—அடைய வேண்டிய வழிமுறைகளைச் சொல்லி விளக்கம் செய்து காட்டியதோடு நின்றுவிடாமல், செயற்படுத்தியும் அப் பொருளிலக்கணங்களை வெளிப்படுத்திக் காட்டினார். இது அவர் மேற்கொண்ட இரண்டாவது பணி.

திருநாவுக்கரசர் மேற்கொண்ட செயற்பாட்டு முறை ஒன்றே ஒன்றுதான். திருத்தொண்டு செய்தல் என்பதே. இதனால் விளைந்த விளைவுகளைத் தத்துவ உலகம் மறுக்கவோ மறக்கவோ இயலாது.

ஞானசம்பந்தர் நாவுக்கரசர் என்ற இரு பெருந்தகைகளும் பொருளின் தீயபண்புகளை நல்ல பண்புகளாக மாற்றுவதன் மூலம் பொருள் தன்மையை மாற்றிய அருளாளர்களே. ஆயினும் சிவ பெருமானோடு இணைந்து ஞானசம்பந்தம் பெற்ற திருவாக்கின் பெருமையால் பல பொருள்கள் தன்மை மாறின. எடுத்துக்காட்டாக, ஞானசம்பந்தப் பெருமான் திருப்பதிகம் தாங்கிய ஓலையானது தன் முதுமை நீங்கி இளமையாயிற்று, தீயில் எரியாது நின்றது. அவ்வாறே தண்ணீரை எதிர்த்துச் சென்றது. இவைகள் தத்தம் நிலைமையில் மாற்றம் பெற்றன. அவற்றுக்கு எதிரான பொருள்களிலேயிருந்து தம்மைக் காத்துக் கொள்ளும் ஆற்றல் பெற்றன. ஆனால் திருநாவுக் கரசர் தம்முடைய திருத்தொண்டின் உறைப்பினால் விளைந்த பொருள் மாற்றமானது வேறுவகை. எம்பெருமான் திருவருளைத் தொண்டினால் ஏற்றுக்கொண்ட பொருள் மாறியது மட்டுமல்லாமல் அதனைஎதிர்த்த பொருளும் மாறிவிட்டன என்பதே திருத்தொண்டின் பெருமையால் விளைந்த பொருள் மாற்றம்.

திருநாவுக்கரசு பெருமானுக்குப் பல்லவமன்னனால் தண்டனைகள் அளிக்கப்பெற்றன. நீற்றறையில் இடல், நஞ்சுண்ண வைத்தல், யானையால் இடறச் செய்தல், கல்லிற் கட்டிக் கடலிற் பாய்ச்சுதல். இந்நிகழ்ச்சிகளில் திருநாவுக்கரசர் சிவபெருமானை நினைத்திருந்ததால் அவர் இவைகளை எதிர்க்கும் ஆற்றல் பெற்றார் எனக்கூறின் அது திரு

ஞான சம்பந்தர் செயலை ஒத்ததே. நீற்றறையானது சுடுவதற்குப் பதிலாக, மாசில் வீணையும் மாலை மதியமும் வீசு தென்றலும் வீங்கிள வேனிலும் மூசுவண்டறை பொய்கையும் போன்றது என்று நீற்றறை மாறியதாகக் குறிப்பிடுகிருர். அவ்வாறே "நஞ்சும் அமுதாம்" என்ருர். இவைகளை அவ்வாறு கொள்வது எப்படி இயலும். நீற்றறை சுட்டிருக்கும். நஞ்சு அழித்திருக்கும்; அவை தம்மளவில் மாறியிருக்கா. நாவுக்கரசர் தம்மளவில் அமைந்த மாற்றமே அடிப்படையாக அமைந்திருக்கலாம் என்ற ஐயம் எழும். அதனை விளக்கவே, யானையால் இடறல் வருகிறது. யானை இடறவும் அவர் தப்பித்தார் எனக் கூறவில்லை. யானை அஞ்சியோடிற்று எனக் கூறவில்லை. அது அடியவரை வணங்கியது. இவ்வாறே கல்லிற் கட்டிக் கடலில் இட்ட போது, அவைகள் தெப்பமாக மாறி அவரைக் கரையேற்றின. இதனுல் அவர், சிவபரம் பொருளைத் தன்னுட்கொண்ட காரணத்தால் தன்னை மாற்றிக் கொண்டார் என்பதோடு நிறுத்திவிடாமல், திருநாவுக்கரசரைச் சார்ந்த தீயபொருளுங்கூட, தீமைநீங்கி நன்மையாந் தன்மையுடன் விளங்கும் மாற்றத்தை அருளும் அற்புதப் பேராற்றலைக் 'கைத்திருத்தொண்டு' ஒன்றனுலேயே அமைத்துப் பெறும் பேறு பெற்ருர். இக்கருத்தை உணர்ந்து கொள்ளும் நிலையிலேயே அவர் தம் பெற்ரேர் அவருக்கிட்ட இயற்பெயர் அமைகிறது. "*மருள்நீக்கியார்*" என்ற பெயரின் மூலம் அவர் தம்முடைய மாசுதனை நீக்கினுர் என்று மட்டுமே கொள்ள முடியாது. "மருள் நீங்கியார்" என்றில்லாமல் பிற பொருள்களின் மாசுதனையும் தீர்க்கும்—நீக்கும்; நீக்கியதோடன்றி நன்மையுடையதாக ஆக்கும் நிலை பெற்றவர் என்ற போக்கிலேயே "மருள் நீக்கியார்" என்ற பெயர் அமைக்கப் பெறுகிறது. இதனைத் தெய்வச் சேக்கிழார் தம் திருவாக்கு மிக நுட்பமாக எடுத்துக் காட்டுகிறது.

"பொய்வாய்மை பெருக்கிய புன் சமயப் பொறியில்
சமண் நீசர் புறத்துறையாம்
அவ் ஆழ்குழியின்கண் விழுந்து எழுமாறு
அறியாது மயங்கி அவமே புரிவேன்
மைவாச நறுங்குழல் மாமலையாள் மணவாளன்
மலர்க்கழல் வந்தடையும்
**இவ்வாழ்வு பெறத்தரு சூலையினுக்கு எதிர்செய்**
**குறை என்கொல்!** எனத் தொழுவார்"

என்பது பெரியபுராணச் (1343) செய்யுள். சூலை நோய்க்கு—சமண் சமயப் படுகுழியில் வீழ்ந்து ஆழ்ந்து போய்க் கொண்டிருக்கும் என்னை இறைவன் திருவடிகளுக்கு ஆளாக்கும் இத்தகைய உயர்ந்த வாழ்வைத் தந்த சூலைநோய்க்கு என்ன கைம்மாறு செயத்தகும்! என்று தொழுதார் நாவுக்கரசர். இலக்கிய நோக்கில் சேக்கிழார் அவ்வாறு பாடியதாகக் கொள்வதைவிட, அவருடைய கைத்தொண்டின் பெருமையை உணர்த்தும் தெய்வவாக்கெனவே கொள்ளுதல் இழுக்குடையதன்று.

இவ்வாறே, அப்பரடிகள் கல்லைத் தெப்பமாகக் கொண்டு கரையேறிய நிகழ்ச்சியையும் காணவேண்டும். ஆணவம் என்ற கல்லில் இருவினைகள் என்ற கயிற்றால் கட்டப்பெற்று, பிறவிப் பெருங் கடலில் தள்ளப்பெற்றார். ஆனால், கரையேறிய நிகழ்ச்சியானது மற்றவர்கள் கரையேறுவதுபோற் கொள்ளவில்லை. அப்பரடிகள் எல்லாவற்றையும் அறுத்துத் தள்ளிவிட்டுத் தான்மட்டும் கரையேறினார் என்று அமைத்திருக்கலாம். அவ்வாறில்லாமல்,

பெருகிய அன்பினர் பிடித்த பெற்றியால்
அருமல ரோன்முதல் அமரர் வாழ்த்துதற்(கு)
அரியஅஞ் செழுத்தையும் அரசு போற்றிடக்
***கருநெடுங் கடலினுள் கல்மி தந்ததே***

என்று வெளிப்பட்ட தெய்வச் சேக்கிழார் (பெ. 1397) வாக்கின் மூலம் ஆழ அழுத்த வேண்டிய கல் தோணியாக மிதந்தது என்று கொள்ள வேண்டிய நிலை தோன்றுகின்றது.

## *இருதத்துவ உண்மைகள்*

அப்பரடிகளை முன்னிறுத்திக் கொண்டு இரண்டு தத்துவ உண்மைகளை நாம் சிந்தித்தல் வேண்டும்.

(1) அப்பரடிகளைக் கட்டுவதற்கு அடிப்படையாயமைந்த கல்லினை ஆணவம் என்று கொள்ளும் வழக்கு ஒன்று உண்டு. இதனை

இருவினைப் பாசமும் மலக்கல் ஆர்த்தலின்
வருபவக் கடலில்வீழ் மாக்கள் ஏறிட
அருளுமெய் அஞ்செழுத் தரசை இக்கடல்
ஒருகல்மேல் ஏற்றிடல் உரைக்க வேண்டுமோ

என்பது தெய்வச் சேக்கிழார் வாக்கு (பெ. 1399). இச்செய்யுளின் மூலம் அமைக்கப்பெறும் கருத்தினை நாம் வெற்றுவமையாகக் கொள்ளாமல், தெய்வச் சேக்கிழார்தம் திருவாக்கு எனக் கொள்வோமாயின், மெய்கண்ட சாத்திர நூல்களில் ஒன்றாகிய **உண்மை விளக்கம்** என்ற நூலில், திருவதிகை. மனவாசகங் கடந்தார், முத்தியிலும் ஆணவம் உண்டு எனக்கூறி, பேரின்பம் கொடுத்தலாகிய இறைவன் செயலையும் துய்த்தலாகிய உயிரின் செயலையும் விளைவிப்பது மலம் எனக்கூறி, துன்பம் எல்லாவற்றுக்கும் காரணமாக இருந்த ஆணவ மலம் முத்தியில் இன்ப விளைவுக்குக் காரணமாகத் தன்னை மாற்றிக் கொண்டு செயல்படுகிறது எனக் கூறுவதற்கு உரிய மூலம் அப்பரடிகள் நிகழ்வும், தெய்வச் சேக்கிழார் வாக்கும் காரணமாக இருக்குமோ என்பதை அறிஞர்கள் ஆய்தல் வேண்டும். *'திருத்தொண்டு'* என்பதை மிக விரிவாக ஆய்தல் வேண்டும்.

திருத்தொண்டு அத்தொண்டினைச் செய்தவனைத் தூய்மையாக்குவதோடன்றி, அவனைச் சார்ந்த தீயவர்களின் தீமையை மாற்றி,

அவர்களை நன்மை செய்பவர்களாக மாற்றும் ஆற்றல் வாய்ந்தது என்பதை அப்பரடிகள் தம்முடைய வாழ்வில் அமைத்துக் காட்டியிருக்கிறார். இக்கருத்தைப் பிற்காலத்தே தோன்றிய **கார்ல் மார்க்ஸ்** என்பார் 'உழைப்பு' என்ற தத்துவத்தை விளக்கும் கொள்கைகளோடு இணைத்துக் காணுதல் வேண்டும்.

திருத்தொண்டர் தம்மைச் சார்ந்த தீமையும் நன்மையாக மாறும் என்ற கருத்தைக் கீழ்வரும் இரண்டு சான்றுகளால் காணலாம்.

சிவபெருமான் திருஞானசம்பந்தருக்கு ஞானப்பால் அருளுகிறார். அவரே திருநாவுக்கரசருக்குச் சூலை நோய் வழங்குகிறார். நன்மைப் பொருளாகிய ஞானப்பாலும் தீமைப்பொருளாகிய சூலையும் வெளிப்படுத்தியபயன் தேவாரப்பதிகங்களே. பயனைத் துய்ப்பவர்கள் கண்ணோட்டத்தில் இரண்டும் ஒன்றே. கொடுக்கப் பெற்ற பொருள்கள் நன்மையும் தீமையும் ஆனவைகளே என்பது வெளிப்படை. எனவே, தீமைப்பொருளும் சேர்ந்த இடத்தின் சிறப்புக் காரணமாகத் தீமை நீக்கத்தோடன்றி, நன்மையின் ஆக்கத்துக்கும் துணைபுரிவதாக அமைந்தது என்பதை நாம் எண்ணிப்பார்க்க வேண்டும் என்று எடுத்துத்தருகிறார் கற்பனைக் களஞ்சியமாகிய சிவப்பிரகாச அடிகள்.

"வீட்டிற்கு வாயில் எனுந்தொடை சாத்து சொல்வேந்த! பொது
ஆட்டிற்கு வல்லன் ஒருவற்கு ஞான அமுது உதவி
நாட்டிற்கு இலாத குடர்நோய் நினக்குமுன் நல்கினும் என்
பாட்டிற்கு நீயும் அவனும் ஒப்பீர் எப்படியினுமே"

என்பது அவர் அருளிய **நால்வர் நான்மணி மாலையின்** இரண்டாஞ் செய்யுள்

இனி, அனைவரும் எடுத்துக்காட்டும் வேறு ஒரு நிகழ்ச்சியையும் நாம் நுட்பமாகக் கண்டு அறிதல் வேண்டும்.

திருவீழிமிழலையில் பஞ்சம் வரவே படிக்காசு அருளப்பெறுகிறது. படிக்காசு இருவருக்கும் வேறு வேறாக அளிக்கப் பெறவில்லை. அவ்வாறு அளித்தானாயின் இறைவன் நடுவுநிலைமை அற்றவன் என்பதே. இருவரும் நாள்தோறும் பதிகம் பாட வேண்டும். பதிகம் பாடுவதற்குரிய பரிசாகப் படிக்காசு அளிக்கப் பெறுகிறது. படிக்காசில் குறை இருக்குமாயின் அதற்குக் காரணம் பாட்டில் குற்றம் இருக்க வேண்டுமே யொழிய, பாட்டிற்கு அப்பாற்பட்ட தொண்டினைக் காரணமாகக் காட்டுவது குற்றமாகும். ஆயினும், திருத்தொண்டு தான் வாசியில்லாக்காசு பெறுவதற்குக் காரணம் என்பதையும் மறுக்க முடியாது. இவ்வகையில் இறைவன் இருவருக்கும் ஒரே அமைப்பான படிக்காசினைத்தான் அருளிச் செய்கிறார் ஆயினும், திருத்தொண்டின் உறைப்பினால் அனைத்தையும் நற்பொருளாக மாற்றும் இயல்புடைய திருநாவுக்கரசரைச் சார்ந்த காரணத்தால் படிக்காசு மாசுநீங்கப் பெற்ற நற்காசாக மாறிவிடுகிறது என்பதே கொள்ளத் தகுவது. திருத்தொண்டின் பெருமை இவ்வுலகுக்கு

உணர்த்தப் பெறவேண்டும் என்ற கருத்தின் அடிப்படையிலேயே இந்நிகழ்வு இறையருளால் அமைக்கப் பெறுவதாகக் கொள்ளுதல் சிறப்புடையது என்பதாம்.

(2) மாயைக் கலப்பினுல் ஆக்கப்பெறும் எழுத்தொலியானது மாயைக்கலப்பு நீங்கிய மந்திர ஒலியாக மாறுவதற்கும் காரணம் திருத்தொண்டு ஒன்றே என்ற கருத்தும் தத்துவநோக்கில் சிந்திக்கப் பெறவேண்டும்.

இக்கருத்தைச் சிந்திக்கும் வகையில் அப்பரடிகள் எழுப்பிய முதல் குரலை நாம் ஆராய்தல் வேண்டும்.

"கூற்று ஆயினவாறு விலக்ககிலீர்"

அப்பரடிகளின் தேவாரப் பதிகங்கள் எல்லாவற்றிலும் முதல் நின்ற குரல் இதுவே என்பது அனைவருக்கும் ஒப்ப முடிந்த ஒரு கருத்து.

"கூற்ருயினவாறு விலக்ககிலீர் எனநீடிய கோதில் திருப்பதிகம்
**போற்ருல் உலகேழின் வருந்துயரும் போமாறு எதிர்நின்று**
**புகன்றனரால்"**

என்று இத்திருப்பதிகக் கருத்தினைத் தெய்வச் சேக்கிழார் விளக்கிக் காட்டுவதையும் இணைத்துச் சிந்திக்க வேண்டும். இவ்வகையில் எப்பொருளும் எப்பொருளுக்கும் கூற்ருக இருந்து கொல்பவை அல்ல. ஆனுல் உலகநியதியில் ஒன்று ஒன்றை வருத்துவதாக, கொல்வதாக அமைந்துள்ள தன்மையைக் காண்கிருேம். "கூற்ருக ஆயின முறையை விலக்கியருள வேண்டும்" என்று வேண்டுகிருரெனில், இணைந்து வாழவேண்டிய இவ்வுலகப் பொருள்கள் ஒன்றை ஒன்று எதிர்த்து வாழ்கின்றன. அவ்வாறு மாற்றம் பெற்றுவிட்ட வழியை மாற்றியருள வேண்டும் என்று உலகுக்காக வேண்டுவதை நாம் அப்பரடிகளின் முதன் மொழியாகக் காண்கிருேம். எனவே, உலகம் தீமையிலிருந்து விலகி, அதன் உண்மைத் தன்மையாகிய நன்மையில் சிறக்க வேண்டும் என்று உலக நன்மைக்காக வேண்டுகோள் விடுத்தவர் அப்பரடிகளே எனக் கொள்ள வேண்டும்.

## அடியவர் பெயராம் ஐந்தெழுத்து

இவ்வகையில், உலக நன்மை கருதித் தொண்டாற்றிய காரணத் தாற் போலும் அவருடைய பெயராகிய 'திருநாவுக்கரசு' என்பது மந்திரத் தன்மை பெற்றுவிடுகிறது. இப்பெயரை ஓதியே முத்தி பெற்று விடுகிருர் அப்பூதி அடிகள் என்ற அந்தணரின் மிக்க அடியவர். இதனைச் சிவப்பிரகாச அடிகள் தம் **நால்வர் நான்மணி மாலையில்**

"உற்ருன் அலன் தவம் தீயில் நின்ருன் அலன் ஊண் புனலா
அற்ருன் அலன் நுகர்வும் திருநாவுக்கரசு எனும் ஓர்
சொற்ருன் எழுதியும் கூறியுமே துன்பில் பதம்
பெற்ருன் ஒருநம்பி அப்பூதி என்னும் பெருந்தகையே"

என்று சிறப்பிப்பாராயினர். இக்கருத்தைச் சேக்கிழாரும் கருதியிருக்கலாம் என்பதுபோல இருபொருள் பெறநின்ற செய்யுள் ஒன்று உண்டு.

"இருவினைப் பாசமும் மலக்கல் ஆர்த்தலின்
வருபவக் கடலில்வீழ் மாக்கள் ஏறிட
அருளுமெய் அஞ்செழுத் தரசை இக்கடல்
ஒருகல்மேல் ஏற்றிடல் உரைக்க வேண்டுமோ"

என்ற இச்செய்யுளில் (பெ. 1399) பவக்கடலில் வீழ் மாக்கள் ஏறிட அருளும் மெய் அஞ்செழுத்து—அஞ்செழுத்தானது நாவுக்கரசரை இக் கடலிலிருந்து ஏற்றிடல் உரைக்க வேண்டுமோ? என்றும், வருபவக் கடலில் வீழ் மாக்கள் ஏறிட அருளும் உண்மைத்தன்மை வாய்ந்த திருவைந்தெழுத்தாகவே நின்ற திருநாவுக்கரசரை என்றும் கொள்ள லாம். முதல் உரையின் வண்ணம் உரை கூறும்போது திருநாவுக் கரசர் திருவைந்தெழுத்துப் பதிகம் ஓதிக் கொண்டிருந்தார் என்று கூறி விளக்கலாம். இரண்டாவது உரையின் வண்ணம் அவரும் அவர் பெயராகிய "நாவுக்கரசர்" என்பதும் இணைந்து நின்று "பக்த பஞ்சாட்சரமும் பக்தருமாகவே" விளங்கின காரணத்தால் அவரை இக்கடல் கரையேற்றுதல் அருமையோ என்று கூறியதாகவும் கொள் ளலாம். "நாவுக்கரசு" என்பது ஐந்தெழுத்து. அது மந்திரமாக நின் றது என்னில் மந்திர ஆற்றலைத் திருத்தொண்டின் மூலம் பெறலாம் என்ற கொள்கை வலுப்பெறும். எனவே, அப்பரடிகள் மேற்கொண்ட திருத்தொண்டின் தத்துவத்தை ஆய்ந்து தெளிதல் வேண்டும்.

சுருங்கக் கூறின், திருத்தொண்டின் உறைப்பினால், தன்னை நன் னெறியில் நிறுத்திக் கொண்டதோடன்றி, தன்னைச் சார்ந்த பொருளை யும் அதன் தீமையை நீக்கி, அதனை நன்னெறிப்படுத்தி வாழ்ந்தவர் என்றும் உலகப் பொருள்கள் எவையும் கொடியவை அல்ல. ஆயினும், அவை கொடுமையுடையனவாக மாற்றம் பெற்ற முறையை மாற்றி, உலகப் பொருள்களையே நன்னிலையில் வாழ வைக்க வேண்டும் என உலகத்துன்பம் நீங்க வேண்டி முதற்குரல் கொடுத்தவர் அப்பரடிகள் என அவரைத் தெய்வச் சேக்கிழார் திரு வாக்குக்களால் தெளியலாம்.

இதனைத் திருநாவுக்கரசரின் திருவாக்கிலேயே தெளிவாகக் காண லாம். நாமார்க்கும் குடியல்லோம் எனத்தொடங்கும் மறுமாற்றத் திருத்தாண்டகத்துள், நாலாம் தாண்டகத்தில்,

"தீமைதானும் நன்மையாகச் சிறப்பதே"

என்பதைத் திருவருளை நோக்கி உணர்க.

அடையும் நெறியை வகுத்துக்காட்டி அதன்மூலம் முப்பொருள் களின் இயல்புகளை விளக்கவந்த அப்பரடிகள் பொருட்டன்மையை உள்ளவாறு உணரவேண்டும் என எடுத்துக்காட்டத் தொடங்கினர். பொருளால் நன்மையுடையவை என்றோ தீமையுடையவை என்றோ

இல்லை. ''நஞ்சும் அமுதாம் நம்பன் அடியார்க்கு'' என அவர் எடுத்துக் காட்டுவதை முதற்படிப் பொருள் விளக்கமாக வைத்தார். ஏனை இரண்டு வகையான படிமுறை விளக்கங்களை அடுத்த இரண்டு தலைப்புக்களிற் காணலாம்.

## *அப்பரடிகளின் பாடற் பொதுப் பொருள்*

அப்பரடிகள் திருப்புகலூரில் இறுதியாகப் பாடிய திருப்பதிகம் ''எண்ணுகேன் என் சொல்லி எண்ணுகேனே'' என்ற பதிகமாம். இப்பதிகம் இறுதிப்பதிகமாயினும், அதனுள் அவர் அமைக்கும் கருத்து அவர் பாடிய திருப்பதிகங்கள் எல்லாவற்றுக்கும் அடிப்படையாயிணைந்த பொதுமைப் பொருள் ஒன்று நல்குவதை இங்கே காணலாம்.

''மன்னிய அந்தக்கரணம் மருவு தலைப்பாட்டினால்
தன்னுடைய சரணான தமியேனைப் புகலூரன்
என்னையினிச் சேவடிக்கீழ் இருத்திடும் என்றெழுகின்ற
முன்னுணர்வின் முயற்சியினால் திருவிருத்தம் பல மொழிந்தார்''

என்பது தெய்வச் சேக்கிழார் (பெ. 1696) வாக்கு.

அப்பரடிகளுக்கு இறைவன் திருவடியில் இணையவேண்டும் என்ற கருத்து எழுகிறது. இப்புகலூரன் என்னை இனிமேல் அவன் சேவடியின்கீழ் சேர்த்துக் கொள்வான்; இது உறுதி என்று கூறுகிறார். இந்த உறுதி அப்பரடிகளுக்கு எப்படி வந்தது? தான் செய்த திருத்தொண்டினால் என்றோ திருவருளினால் என்றோ காரணம் காட்டவில்லை.என்னுடைய அந்தக்கரணங்கள் என்னுடன் பொருந்தியவை. என்னை மாறான வழிகளுக்கே இசைய வைத்தன. ஆனால் அவை இப்போது எனக்கு நன்மை பயக்கும் நிலையில், என்னுடன் இணைந்து நின்று ஒருமைப்பட்டு, எனக்கு நல்லறிவைக் கொடுக்கின்றன. அந்தக்கரணங்கள் வெவ்வேறு தொழில் செய்ய முனைந்து அவைகள் அரசோச்ச, யான் அவைகளால் ஆட்டப்பெறும் கொடுங்கோலன் நாட்டிலமை மந்திரியைப் போலன்றி, என்னை அரசனாக அமைத்து, அவைகள் எனக்கு அமைச்சராக இருந்து ஒருமைப்பாடான நற்கருத்தை விளைவிப்பதால் யான் திருவடியைச் சேர்வது உறுதி என்று கூறுவதாகச் தெய்வச் சேக்கிழார் வாக்கு அமைகிறது.

''மன்னிய அந்தக்கரணம் மருவு தலைப்பாட்டினால்
தன்னுடைய சரணான தமியேனை''

என்பதற்கு இரு உரை கொள்வர். அந்தக்கரணம் என்னைப் பொருந்தி என்னோடு அணைந்து, ஒத்தொழுகி நிற்கும் செயற்பாடு அமைந்துவிட்ட காரணத்தினால், அந்தக்கரணத்தினுடைய சரணாகதியை, அடிமைப்படுதலை ஏற்றுள்ள தமியேனாகிய எனக்கு, புகலூரன் தன் திருவடியைக் கொடுத்து விடுவான் என்று கொள்ளும் உரையே இங்கு ஏற்புடையது. இக்கருத்தை அடியொற்றித் திருவருளால் உணர்ந்த மெய்கண்டார்,

"அந்தக்கரணம்" எனத் தொடங்கி "அமைச்சு அரசு ஏய்ப்ப நின்று அஞ்சவத்தைத்தே" என்று முடிப்புக்காட்டியருளுவாராயினர். இது திருப்பதிகம் எல்லாவற்றிலும் அப்பரடிகள் காட்டியமைத்த பொதுமைக் கருத்து. அந்தக்கரணத்தோடு என்னை இணைத்து, அந்தக்கரணம் வேறு நான் வேறு என்ற வேறுபாடு அறியாமலேயே இருந்த யான் அந்தக்கரணம் வேறு என உணர்ந்து, அவற்றைத் தீமையிலிருந்து நீக்கவே, அவை எனக்கு நன்மை செய்யத் தொடங்கின. இவ்வகையில் கொடுங்கோலரசனின் தன்மையில் அந்தக்கரணம் இருக்க, அவற்றின் அமைச்சனாக இருந்தேன். இப்போது யான் அரசனாக நிற்க, அவை எனக்கு நல்லறிவுரை கூறும் அமைச்சர்களாயின என்று கொள்வதே நான் காவது நூற்பாவின் பொதுப் பொருளாயிற்று.

## *சிறப்புப்பொருள் திருப்பதிகம்*

இனி, இந்நூற்பாவுக்குரிய மூலப்பொருளை வழங்கும் பதிகம் மறுமாற்றத் திருத்தாண்டகப் பதிகமே. இப்பதிகம் ஆருந் திருமுறையாக அமைக்கப் பெற்றிருப்பினும் வெளிப்பட்டருளிய கால அடைவை நோக்கி, அதுவே, இந்நூற்பாவுக்கு மூலமாக அமையுந் தகுதியை உடையதாகிறது. மறுமாற்றத் திருத்தாண்டகத்தில் முதல் நின்ற திருநெறிய தமிழே உயிரின் இலக்கணத்தை உயர்வற உணர்த்தும் தன்மை பெற்றதாகத் தெரிகிறது. அவ்வகையில் பதியிலக்கணமும், பாச இலக்கணமும் தெளிவாக உணர்த்தப் பெறுகின்றன.

நாமார்க்குங் குடியல்லோம் நமனை யஞ்சோம்
  நரகத்தில் இடர்ப்படோம் நடலை யில்லோம்
ஏமாப்போம் பிணியறியோம் பணிவோ மல்லோம்
  இன்பமே எந்நாளும் துன்ப மில்லை
தாமார்க்குங் குடியல்லாத் தன்மை யான
  சங்கரன் நற்சங்கவெண் குழையோர் காதிற்
கோமாற்கே நாமென்றும் மீளா ஆளாய்க்
  கொய்மலர்ச் சேவடியிணையே குறுகி னோமே.

என்பதே அத்திருநெறிய தமிழ்.

***நாமார்க்குங் குடியல்லோம்*** என்ற தொடரால் இதுவரை அமைந்த உணர்வு ஒருவகை மயக்கவுணர்வு. அந்தக்கரணங்களையே உயிர் எனக் கருதுவதுபோலத் தம்மை ஒத்த நிலையில் அறியாமையில் மூழ்கிக் கிடப்பவர்களையே அரசர்களாகவும் அவர்களால் ஆளப்பெறும் குடிகளாகவும் கருதியது மயக்கவுணர்வு, எனத் தெரிவித்தார்.

***நமனை அஞ்சோம்*** என்பதால் நமன் என்பவன் நமக்கு நன்மை செய்பவனாக அமைத்துக் கொள்ள வேண்டுமேயன்றி, அவனைத் தீயவனாக ஆக்கி அஞ்சுதல் கூடாது.

*நடலையில்லோம்* என்பதால் யாங்கள் கால்நடைகளல்ல. கால் நடைகளைப் போல அந்தக்கரணங்கள் உயிரை இயக்குகின்றன. காரணம் அறியாமை. இதனையே மெய்கண்டார் சிறப்பு விளக்க மாகக் கொண்டு "மலத்து உணராது" என்று குறிப்பிட்டார்.

*ஏமாப்போம்* என்பதால் ஏமம்+ஆர்ப்போம் எனப்பிரித்து இரு பொருள் காட்டுகிறார். அந்தக்கரணங்கள் எமக்குத் தொண்டு புரிய வேண்டுவன. யாங்கள் அவைகளுக்குப் பாதுகாப்பாக இருக்கும் நிலைபேணும் அரசராக அமைவோம். எவ்வாறெனில், யாங்கள் எங்களுக்குப் பாதுகாவலாகப் பெருமானைப் பெற்றுள் ளோம். எனவே இறைவன் அரசனாக யாங்கள் அவனுடைய அடி யில் நின்றுவாழ்ந்து அவனைப் பாதுகாவலாகப் பெற்ற முறைமையால் அந்தக் கரணங்களுக்கும் பாதுகாவலாக அமைவோம் என்று குறிப் பிடுகிறார். இதன்விளக்கமாக நான்காந் திருமுறையின் திருவாரூர்ப் பதிகம் அமைந்துள்ளது. இப்பதிகம் முழுவதிலும்

"தொண்டர்க்குத் தொண்டராம் புண்ணியமே"

என்று முடித்தருளுகின்றார்.

*பிணியறியோம்* என்பதால் அந்தக்கரணம் போன்றவைகள், மெய்ப்பொருளல்லாதவைகளை மெய்ப்பொருளாகக் கொண்டு மயங்குவது போன்ற நோய்கள் உண்மையிலேயே எம்மிடம் இல்லை. ஒருவர் ஒருவரை உணராமை என்ற ஒருவகை அழுக்கினால் அல்லது அறியாமையால் இக்குறை நேர்ந்தது, எனத் தெரிவிக்கின்றார்.

*பணிவோமல்லோம்* என்பதால் தாமார்க்குங் குடியல்லாத தன் மையான சங்கரன் அடிசேர்தல் என்பதைத் தவிர ஏனையவெல்லாம் எங்களுக்கு உதவி செய்ய வந்த கருவிகளே. அவைகளுக்குப் பணிந்து ஆட்படுவோம் அல்லோம் என்று தெளிவுறக் கூறுமாற்றால் முப்பொருளின் இலக்கணங்களும் முறையே கொள்ள வைத்தாராகக் கருதலாம்.

எனவே, பதிப்பொருள் ஒன்றே; அவனுக்கு அடிமைகளாய் அவனடியிற் சேரும் தகுதிபெற்ற உயிர்களே அனைத்தும். நடலைத் தன்மையில் நடத்தப்படுதற்குரிய அறியாமை வந்தமைந்ததேயா யினும், அவை பிணியன்று. அவைகளை எங்களுக்குள்ளடக்கி, யாங்கள் பரம்பொருளுக்குள்ளடங்கியிருத்தலே இலக்கணம் எனக் கொள்ளவைத்தார்.

பதியின் அடியிற் பதியும் தன்மையுடையது உயிர்

உயிர்களுக்குத் தன்னைப் பிறவற்றோடு இணைத்து, மயங்கும் அறியாமை உண்டு; அதனால் நடலையாய்த் திரிகிறது. நடலை—பசு. நடலைத்தன்மையே அதன் இயல்பன்று. என்றும் நடலையாகவே இருத்தற்குரிய பிணி ஏதும் இல்லை.

உயிர்களுக்குக் கொடுக்கப்பெற்ற அனைத்தும் அவைகளைப் பிணித்து நடலையாக்குவன வல்ல; நல்லவைகளே.

இவ்வாறு, மறுமாற்றுத் திருத்தாண்டகம் முழுவதும் இறை, உயிர், தளை என்பவைகளின் இலக்கணங்களை விரித்து இயம்பிய பகுதியாகக் கொள்ளவேண்டும்.

## தோன்றாத்துணை

அப்பரடிகள் நான்காந்திருமுறையில் அமைக்கப் பெற்றுள்ள திருப்பாதிரிப்புலியூர்த் திருப்பதிகத்துள்,

> "ஈன்றாளுமாய் எனக்கு எந்தையுமாய் உடன் தோன்றினராய்
> மூன்றாய்"

இறைவன் இருந்தமையாகச் சுட்டுவது ஒரு அரிய நுண்பொருளைக் கொண்டதாகும். இறைவனை அம்மையும் அப்பனுமாகக் காணுதல் அனைவரும் மேற்கொண்ட ஒரு காட்சியே. அம்மையும் அப்பனுமாக இணைந்து நின்ற கோலமே தொன்மைக்கோலம் என்றும் கொள்ளப் பெறும். ஆயினும், அப்பரடிகள் இறைவனைத் தாயாய், தந்தையாய், உடன் தோன்றினராய், மூன்றாய் எனக் கூறுகிறார். உடன் தோன்றினராய் என்ற கருத்தை வேறு அருளாளர்களிடத்திற் காணப்பெறல் அரிது. "உடன்தோன்றினர்" என்று குறிப்பிட்ட ஒன்று திலகவதியாரைக் கொண்டதாகக் கொள்ளலாம். மேலும், தாயும் தந்தையும் இறந்த பிறகும், தம்பியார் உளராக வேண்டும் என வைத்ததையையே காரணமாக உயிர்வாழ்ந்து, பின்னர்த் திருவாளன் திருநீற்றினைத் தந்து அருள்வழிப்படுத்திய காரணத்தால், தாயாகவும் தந்தையாகவும், உடன் பிறந்தாராகவும் திலகவதியாரே விளங்கினர் என்ற கருத்தில், உடன்தோன்றியும், அதிலும் பின்தோன்றாது முன்தோன்றியும்; தம்மை வழிப்படுத்திய திலகவதியாரே செம்பொருள் நின்றதிறம் எனக்காட்டுவாராகி, எல்லாவற்றிலும் உயிர்களின் தோன்றாத் துணையாக நிற்கிறான் இறைவன் எனக் குறிப்பிட்டருளினர்.

'உடன்தோன்றினராய்' என்ற கருத்து "உடனானன்" என்ற கருத்தை ஒத்ததேயெனினும், இணைந்து நிற்கும் அவ்வளவே கொள்ளுதல் கூடாது. துணை செய்கிறான்; துணையைப் பெற்றே உயிர் தன்னைச் செயற்படுத்துகிறது என்னும் பரம்பொருளின் இலக்கணத்தை உணர்த்திக் காட்டினர்.

## ஐந்தவத்தைத்தே

உயிரானது ஐந்தவத்தைப்படும் என்பதை விளக்குமுகத்தானே அப்பரடிகளின் நாலாந்திருமுறையின் இறுதிப்பதிகமாகிய பொதுப் பதிகத்தினைக் கொள்ளலாம்.

"துறக்கப்படாத உடலைத் துறந்து வெந் தூதுவரோடு
இறப்பன் இறந்தால் இருவிசும்பு ஏறுவன் ஏறிவந்து
பிறப்பன் பிறந்தால் பிறையணி வார்சடைப் பிஞ்ஞகன்பேர்
மறப்பன் கொலோ என்று என்று என் உள்ளம் கிடந்து மறுகிடுமே"

என்ற திருப்பாசுரத்தில் பிறவிச் சுழலில் அகப்பட்டு மாறி மாறி வரும் போது பிஞ்ஞகன் பெயரை எவ்வாறு நினைவிற் கொள்ள முடியும்? என்று வினவாக அமைத்தாலும், அப்பிறவியிலும்,

"என்மத்தகத்தே இரவும் பகலும் பிரிவரியான்
தன்மத்தகத்தோர் இளம்பிறை சூடிய சங்கரனே"

என்றும்,

"அந்திவட்டத்து இளங்கண்ணியன் ஆறமர் செஞ்சடையான்
புந்திவட்டத்து இடைப்புக்கு நின்றான்"

என்றும் குறிப்பிட்டருளுவதால்—உயிரானது தான் தனித்துநின்றிருக்கும் ஐந்தாம் அவத்தைக் குரிய காலத்தும் அவன் புக்குநிற்பதை அனுபவிக்கிறேன் என்று குறிப்பிடுவதால் உயிரின் பல வேறு அனுபவநிலைகளாம் அவத்தைத் தன்மைகளை உளங்கொண்டு கூறினார் என்று கொள்ளுதல் பொருந்தும்.

## *முடிப்புரை*

திருநாவுக்கரசு பெருமான் பொருளை விளக்கும் நோக்கத்தை அடிப்படையாகக் கொண்டு, தீமையையும் நன்மையாக மாற்றம் செய்தலே திருத்தொண்டு எனக்கூறி, பொருளியல்பும், அடைமுறையும் அமைத்துக் காட்டினாராதல் தெளியலாம்.

இனி, மறுமாற்றத் திருத்தாண்டகத்தின் மூலம் முப்பொருளின் இயல்புகளையும் சிறப்பாக அமைத்துக் காட்டினார். திருப்புகலூர்ப் பதிகமே அந்தக்கரணத்தின் இயல்புகளைக் கூறி, அது தமக்குத் துணையாக அமைந்தது என்று குறிப்பிட்டார்.

திருப்பாதிரிப்புலியூர்த் திருப்பதிகத்தால் தோன்றாத் துணையாக நின்றருளும் இறைவன், புந்திவட்டத்திடைப் புக்கு நின்றான் என்று குறிக்கப் பெறுவதால் உயிர் அனுபவிக்கும் பல்வேறு அனுபவநிலைகளிலும் உடனிருந்து துணை செய்கிறான் என்று குறிப்பிட்டார்.

மேலே குறிப்பிடப் பெற்றவைகளை அடிப்படையாகக் கொண்டு மெய்கண்டாரால் அனுபவநிலையால் திருவருளுணர்வோடு இணைந்து நின்று வெளிப்படுத்திய நூற்பாவே

"அந்தக் கரணம் அவற்றின் ஒன்றன்று அவை
சந்தித்தது ஆன்மாச் சகசமலத்து உணராது
***அமைச்சு அரசு*** ஏய்ப்ப நின்று அஞ்சவத்தைத்தே"

என்ற ***சிவஞானபோத*** நான்காம் நூற்பா.

இனி, இந்நூற்பாவினுள் "மலத்து உணராது" எனப் பொதுப் படக் கூறுமல் 'சகசமலம்' எனச் சிறப்பித்துக் கூறுவதால் மெய் கண்டார் ஆணவமலத்தின் அடிப்படைப் பண்புகள் சிலவற்றை இணைத்துக் கூற முற்பட்டார் எனக் கொள்வது அறிஞர் கொள்கை. ஆணவமலத்தின் பண்புகள் எல்லாவற்றையும் மிகச் சிறப்பாகத் திரு முறைகளிலிருந்து எடுத்துக் காட்டுவதைவிட, தீமையும் நன்மையாக மாற்றலாம் திருத்தொண்டினுல் என்ற கருத்தை ஆழமாகச் சிந்திக்க வேண்டும் என்ற கருத்தில் அம்முயற்சி நிறுத்தப் பெற்றது.

# 7. தாந்தம் உணர்வின் தமி அருள்

*முன்னுரை*

அப்பரடிகள் பொருளுண்மையை நிலைநாட்டி, பொருட்பண்பு களைத் தாம் அடையும் முறையால் தெளிவுறுத்திக் காட்டிய பெருந் தகை என்ற அடிப்படையில் பெருமானைத் தோன்றுத்துணை என அமைத்துக் காட்டினர் என்பதை 'அமைச்சரசு' என்ற தலைப்பில் காண முடிந்தது. அவ்வகையில் பொருள் என்பது இயல்பில் தீமை யுடையது அன்று; தீமையும் நன்மையாய் மாறி நின்று பயன்பெறச் செய்யுமாறு அமைக்கவல்ல ஆற்றல் திருத்தொண்டுக்கு உண்டு என் பதாகவும் அமைத்து உணர முடிந்தது.

*மூலப்பொருள்*

இனி, பொருள்தன்மையை அடிப்படையாகக் கொண்டு நோக்கி, பொருள் ஒன்றுதான் மூலமாகநின்ற பொருள்; மூலப் பொருள் என்பதை எதன் அடிப்படையில் நிறுவிக் காண்பது என்ற வினவுக்கு அடிப்படை விளக்கமாக, பிறரால் அறிவிக்க அறியும் நிலையில்லாத அறிவுடையதாய், ஆனல் அதேசமயத்தில் பிற எல் லாப் பொருள்களும் தம்மையின்றி அறிவைப் பெற முடியாததாய் அமைந்த பொருள்தான் மூலப் பொருள்; முதன்மைப் பொருள் என்று வெளிப்படுத்தியருளுகிருர்.

**அறிவு** என்ற ஒன்றை மூலமாக நிறுத்தியே சைவசித்தாந்தம் பொருட்பிரிவு செய்கிறது. பரம்பொருள் தானே அறியும் முழுமை வாய்ந்த அறிவுப் பொருள். உயிர் அறிவுடைய பொருளேனும் அறிவித்தாலன்றி அறிய முடியாத பொருள். இவ்விரண்டற்கும் அப்பாலாக, அறிவித்தாலும் அறியும் ஆற்றல் இல்லாத பொருள் ஒன்றும் உண்டு என இவ்வாறு மூன்று பொருள்கள் உண்டு எனப் பிரிவு செய்தது.

அப்பரடிகள் உலகில் உள்ள அனைத்துப் பொருள்களுக்கும் கருப்பொருளாய் நின்றவன், ஒருவனே என்று விளக்கம் செய்கிருர். அவன் அவ்வாறு நின்றது முப்பத்து இரண்டு அறங்களுக்கு மூலமாக நின்றவன் என்று குறிப்பிடும் வகையில் அவனுடைய முப்பத்திரண்டு பண்புகளைச் சுட்டிக் காட்டியருளுகின்ருர். ஐந்தாந் திருமுறையின் மூன்ரும் பதிகம் திருநெல்வாயில் அரத்துறைப் பதிகம். அப்பதிகம் முழுவதிலும் முப்பத்திரண்டு தன்மைகள் உடையவனுய் அவன்

விளங்குகின்றான் என்பதைக் குறிப்பிட்டுக் காட்டுகின்றார். அவை எல்லாவற்றையும் இரண்டு பண்புகளில் அடக்கி, இரண்டு பண்புகளைக் கொண்ட ஒருமை முதல்வன் என்பதையும் குறிப்பிட்டுக் காட்டியருளுகின்றார். அறிவும், அருளுமே அவ்விரு பண்புகளும்.

இறைவன் தன்னளவில் தனித்தும் ஏனைப் பொருள்களுக் கெல்லாம் மூலமாயும் நிற்பதற்குக் காரணம் இவ்விரண்டு பண்புகளே. ஏனைப் பண்புகள் ஏனைப் பொருள்களில் இருக்கும். இறைவனிடம் முழுமையால் அமைந்தவை ஏனைப் பொருளில் குறையுடையனவாய் அமைந்திருக்கும். அறிவும் அருளும் இறைவனுக்கேயுரிய குணங்கள். உயிரும் அறிவுப் பொருளே யென்னின், அறிவு என்ற பொதுச் சொல் இரு பொருள்களின் அறிதற் பண்புகளுக்கு உரிமையுடையவேனும் அவனுடைய அறிவு வேறு; ஆன்மாக்களின் அறிவு வேறு. அனைத்தையும் முற்ற அறிதல் இறைவன் அறிவு என்றும் சிறுகச் சிறுக அறிதலும், அறிவிக்க அறிதலும் அழுந்தியறிதலும் உயிர்களின் அறிவு என்றும் வேறுபடுத்திக் காட்டுவர். இத்தகைய வேறுபாடுகளால் மட்டுமே இரண்டு பொருள்களின் அறிவை நாம் அறிந்து விட்டோம் என்பதன்று. நம்முடைய அல்லது உயிர்களினுடைய அறிவை ஆராய்ந்து பார்த்து அதனோடு இயல்புடைய உயர்ந்ததாக நாம் அமைத்துத் தெரிந்து கொள்ளுதற்கு உரிய முறையேயன்றி, அதுவே இறைவனின் அறிவை வரையறை செய்த கொள்கையாக நாம் அமைத்துக் கொள்ளக் கூடாது.

**அருள் :** அறிவைப் போலவே அவனுக்கே உரிய தலைமைக் குணம் அல்லது இறைமைக்குணம் அருள். உயிர்களிடத்து அன்பு உண்டு அல்லது இரக்கம் உண்டு. அன்போ இரக்கமோ அருளை ஒத்ததாக ஆகாது. 'அருள்' என்பது அவனுக்கு மட்டுமே உரிய இறைமைக் குணம். இவ்விரு பண்புகளையும் இணைத்துக் காட்டுகின்றார் அப்பரடிகள், திருக்கானூர்த் திருப்பதிகத்தில்.

"திருவின் நாதனும் செம்மலர் மேலுறை
உருவனும் உலகத்தின் உயிர்க் கெலாம்
கருவனாகி முளைத்தவன் கானூரில்
பரமனை பரஞ்சுடர் காணினே"

என்பது முதல் திருப்பாசுரம். இதனுள், உயிர்களுக்கெல்லாம் 'கரு' என மூலமாய் முளைத்து நின்றவனே பரம்பொருள் என்று குறிப்பிடுகின்றார். மூலப்பொருள் என்பதால் முதற்பொருள் என்றார். பரம்பொருள் என்பதால் அதற்கு மேலான பொருள் இல்லாமல் தானே மேலான பொருளாக இருப்பவன் என்றார். மூலப்பொருளாகவும் பரம்பொருளாகவும் உள்ள பொருளே மேலான ஒளிப்பொருளாகவும் உள்ளது என்று குறிப்பிட்டார்.

முதல் என்ற நிலையில் அமைந்த அந்த ஒரே ஒருபொருள் அறிவு நிலையில் பரம்பொருளாக, அருள் நிலையில் ஒளிப்பொருளாக விளங்குகிறது. 'கருவன்' என்ற காரணத்தால் மூலப்பொருள் ஒன்று எனக்

குறிப்பிட்டார். அப்பொருளின் இரு பண்புகளாக அறிவுத் தன்மையையும் அருட்டன்மையையும் குறிப்பிட்டார்.

***செறிவும் உறழ்வும் :*** அனைத்துப் பொருள்களும் கருவின்றி நிலைபெற முடியாது. எனவே, எல்லாப் பொருள்களுக்கும் கருவாக நின்று, அப்பொருள்களையெல்லாம் நிலைபெறுத்துமாறு போல, எல்லாப் பொருள்களும் அறிவைப் பெறுமாறு அவன் அமைந்திருக்கும் நிலையைச் ''செறிவு செய்திட்டிருக்கும் நிலை'' என்று குறிப்பிடுகிறார். எனவே, அவன் உயிரோடும், சிந்தை முதலிய அறிகருவிகளோடும் செறிவு செய்திட்டிருப்பன். ''செறிவில் அமைந்த ஊறு'' என்றும் குறிப்பிடுகிறார். பரம்பொருளினுடைய அறிவினை இரண்டு வகைகளிற் சுட்டிக் காட்டுகின்றார். ''செறிவுற்றிருக்கும் ஊறு'' என்பதாம். செறிந்திருப்பது என்பது ''விரலில் ஆழியைச் செறித்தான்'' என்ற உவமையின் மூலம் உணர வேண்டுவது. செருகவும் பின் எடுக்கவும் இயலாதவாறு இறுகிக்கிடப்பது. உயிர் என்ற பொருள் விரும்புகிறதோ இல்லையோ அதனுடைய அறியாமையை வெளியில் இழுத்து, உள்ளே வலிந்து சென்று பற்றித்தங்கி, வெளியில் எடுக்கவும் முடியாத நிலையில் இறுகிக் கிடக்கும் தன்மை. இவ்வாறு செறிந்துகிடக்கும் அறிவு 'ஊறு' எனநிகழும் என்று குறிப்பிடுகிறார். 'ஊறு' என்பது தான் இருப்பதை உணரவைத்து, உணரும் நிலை பெற்றபோது, உணர்வுக்கு உரிய அனுபவப் பொருளாக இருப்பது.

எனவே, இறைவன் உயிரினுள் அறிவாய்ச் செறிந்து நின்றான். பின்னர் உணருமாறு உணர்த்தி, உயிரானது உணர முற்பட்ட போது உணர்தலுக்கு உரிய விடயமாக நின்றான். இதனையே ''செறிவுற்றிருக்கும் ஊறு'' என்று குறிப்பிடுகின்றார் அப்பரடிகள். அவன் அறிவு என்னும் தலைமைக்குணம் இத்தன்மையது என்பதை உணர்த்தும் நிலையில் ஐந்தாம் திருமுறையில் இரண்டு பாசுரங்கள் காணக்கிடைக்கின்றன.

''குறியில் நின்று உண்டு கூறையிலாச் சமண்
நெறியை விட்டு நிறைகழல் பற்றினேன்
அறிய லுற்றிரேல் கானூர் முளையவன்
***செறிவு செய்திட்டிருப்பது என் சிந்தையே''***

என்பது திருக்கானூர்த் திருப்பதிகத்தின் மூன்றும் பாசுரம்.

''ஏறு ஒப்பானை எல்லா வுயிர்க்கும் இறை
வேறு ஒப்பானை விண்ணோரும் அறிகிலா
ஆறு ஒப்பானை அரத்துறை மேவிய
***ஊறு ஒப்பானைக் கண்டீர்*** நாம் தொழுவதே''

என்பது திருநெல்வாயில் அரத்துறைத் திருப்பதிகத்தின் நான்காம் பாசுரம்.

மேலே குறிப்பிடப் பெற்ற இரு செய்யுட்களிலும் அமைந்த செறிவு செய்திட்டிருப்பதும், ஊறு என நிற்பதும் இறைவன் அறிவு பற்றிய விளக்கங்கள் என்பதாம்.

இங்கே குறிப்பிடப் பெற்றவாறு செறிவு செய்திட்டிருப்பதே இறையறிவின் தன்மை என்பதை மிக விளக்கமாக எடுத்துக் காட்டியதோடு, உயிர்களின் அறிவின் தன்மை எத்தகையது என்பதையும் கூறி, அடிப்படையிலேயே இரண்டும் வேறுபாடுடையன என்று முடித்துக் காட்டுகிருர் கற்பனைக் களஞ்சியமாகிய சிவப்பிரகாச அடிகளார்.

இறைவன் நம்பியாரூரரைத் தோழனாகக் கொள்கிருன். தோழர்கள் இருவகை. செல்வத்துக்கு ஒரு தோழன்; அறிவுக்கு ஒரு தோழன். செல்வத்துக்கு ஒரு தோழனாகக் குபேரனை அமைத்துக் கொண்டான். இனி, அறிவுக்குரிய தோழன் கிடைக்கவில்லை என நீண்டநாள் கவன்றிருந்து, பின்னர் சுந்தரரை அறிவுத் தோழனாகக் கொண்டான் என்ற கருத்தைக் கீழ்வரும் *நால்வர் நான்மணி மாலைப்* பாடலால் வெளிப் படுத்துகின்றுர்.

"அறிந்து செல்வம் உடையானும் அளகைப் பதியான் தோழமை
கொண்டு
*உறழ்ந்த கல்வி யுடையானும்* ஒருவன் வேண்டும் என இருந்து
துறந்த முனிவர் தொழும் பரவை துணைவா! நினைத் தோழமை
கொண்டான்
*செறிந்த அறிவு வடிவமாய்த் திகழும் நுதற்கட் பெருமானே*"

இந் *நால்வர் நான்மணி மாலைச்* செய்யுளால் உயிர்களின் அறிவு அமைந்த முறையை எடுத்துக் காட்டுகின்றுர். ஒருபொருளைப் பார்த்ததும் அது இதனோடு ஒத்தது என்றும் இதனோடு மாறுபட்டது என்றும் இவ்வாறு ஒப்புமையும் உறழ்வுமாகப் பெற்றுப் பெற்று வளர்ந்த அறிவு என்று குறிப்பிட்ட அவர் இறைவன் அறிவைச் "செறிந்த அறிவு" என்று குறிப்பிட்டார். சிவப்பிரகாச அடிகள் இறைவன் அறிவு செறிந்த அறிவு என்று குறிப்பிடுவதற்கு மூலமாக நின்றது அப்பரடிகள் பாடலே எனக்கருதலாம்.

இனி, செறிவுற்றிருப்பது அல்லது செறிவு செய்திட்டிருப்பது என்று அவ்வறிவுப் பொருள் நின்ற திறத்தைக் கூறி, அது ஊறு என நின்று உணரவைத்து, உணர்வு வந்தபின் தன்னை அனுபவப் பொருளாக அமைத்து உணர்த்துகின்றது என்பதையும் தெளிவாக உணர்த்திய அப்பரடிகள், செறிவுற்றிருக்கும் பொருள் உணர்தலை எழுப்பி, உணர்த்தி, உணர்தலுக்குப் பொருளாகத் தன்னை ஆக்கிக்கொள்ளும் இவ்விரு நிகழ்ச்சிகளுக்கு இடையிலே வேருெரு செயலையும் குறிப்பிடுகிருர். அதனைக் கீழ்க்காணும் பதிகச்செய்யுளிற் காணலாம். அது ஐந்தாந்திருமுறையில் மூன்ருந் திருப்பதிகமாக அமைந்த, திருநெல்வாயில் அரத்துறைப் பதிகத்தின் மூன்ரும் பாசுரமாக அமைந்துள்ளது.

"கரும்பு ஒப்பானைக் கரும்பினிற் கட்டியை
விரும்பு ஒப்பானை விண்ணோரும் அறிகிலா

அரும்பு ஒப்பானை அரத்துறை மேவிய
சுரும்பு ஒப்பானைக் கண்டீர்நாம் தொழுவதே''

என்ற செய்யுளில் இறைவன் "வண்டினை ஒத்தவன்" என்று குறிப்பிடுகின்றார்.

விண்ணோரும் அறிகிலா அரும்பு என நின்றவன் என்பதால் உயிர்களிடத்திலே அரும்பு என, விரியாத மலரென, அறிய முயலும் விண்ணோரும் அறிய இயலாத அரும்பு என நின்ற நிலை என்பது உயிர்களிடத்திலே அறிவாய்ச் செறிந்திட்டிருக்கும் நிலை. செறிந்திட்டிருக்கும் அப்பொருளை வேறு யார்தான் வெளிப்படுத்த முடியும். செறிந்திட்டிருக்கும் நிலை எனப்பெறுவதாகிய அரும்பு நிலையை அவனே வண்டு என வந்து நின்று ஊதி மலர வைக்கிறான். இதுவே அவனுடைய அருள்நிலை.

செறிந்திருக்கும் தானே ஊறு என உறவைத்து விளங்குவதற்கு முன்னே சுரும்பு என நின்று ஊதி மலரவைக்கிறான் என்ற நிலையை உளங்கொண்டால் 'அறிவு அருள்' என்ற இரண்டும் ஒன்றாக இணையும் நிலையைக் கொள்ளலாம். சுரும்பினை ஒத்து அவன் தொண்டாற்றும் நிலையையே அருள்நிலை என்று குறிக்கலாம். இவ்வகையில் "அருளே" பெரியது என்பதாகக் கொள்ளப்பெறும். இதனாலேயே சார்பு நூலாசிரியராகிய உமாபதி சிவனாரும்

"அருளிற் பெரியது அகிலத்து இல்"

என்று வரையறை செய்து கூறி, அருளும் ஞானமும் வேறல்ல என்ற கருத்தை விளக்கும் முறையில் "திருவருளே பரஞானம்" என்று விளக்கிக் குறிப்பிடுவாராயினர்.

"கிரியையென மருவுமவை யாவும் ஞானம்
கிடைத்தற்கு நிமித்தமெனக் கிளக்கும் உண்மைச்
சரியை கிரியா யோகத் தன்மை யோர்க்குச்
சாலோக சாமீப சாரூபங்கள்
மருவியிடும் உயர் ஞானம் இரண்டாம் மாறா
மலம்அகல அகலாத மன்னு போதத்
திருவருள் ஒன்று; ஒன்று அதனைத் தெளியவோதும்
சிவாகமம் என்று உலகறியச் செப்பும் நூலே

என்பது சிவப்பிரகாசம், பத்தாம் செய்யுள்.

இவ்வாறு, அப்பரடிகள் ஐந்தாந் திருமுறையில் முப்பத்திரண்டு பண்புகளை உடைய பரம்பொருள் எனச் சொல்லினும், சிறப்பாகக் கருவாய் நின்ற முதற்பொருள் ஞானமும் அருளும் என இருதன்மை கலந்த பொதுமையாய் நின்றது எனக் கொண்டு, அப்பொருளை அடியடைந்து வணங்குதல் ஒன்றே நிகழ்த்த வேண்டுவது என்றார்.

இக்கருத்தினை அடிப்படையாகக் கொண்டு நோக்கினால் மணிவாசகப் பெருந்தகை அருளிய "மருவிய உயிரும் வளர்ப்போன்

காண்க'' என்பதன் உட்கிடை தெளிவு பெறுவதாகும். இதனையே அப்பரடிகளும் தண்ணீர் எப்பொருளையும் வளர்த்தல்போல உயிர் தோறும் நின்று அவைகளின் அறிவை வளர்த்து வருகிறான் என்ற பொருளில்,

''புனல் ஒப்பானை''

என்று, திருநெல்வாயிலரத்துறைப் பதிகத்திலேயே எட்டாந் திருப் பாசுரத்தினுள் கூறுவதையும் இணைத்துக் காணலாம்.

## தாம் தம் உணர்வின் தமி

மேலே கூறப்பெற்றவைகளின் திரண்ட கருத்தாகக் கொள்ளும் போது, இறைவன் பேரறிவாய் நின்று அறிவிக்கிறான் எனவும் அவன் தன்னறிவைப் பொறுத்தவரையில் அனைத்துப் பொருள்களிலிருந்தும் வேறுபட்டுத் தனித்து நிற்பவன் எனவும் அவன் அருளேயாகி விளங்குபவன் எனவும் கொள்ளுதல் பொருந்தவதெனலாம்.
இதனையே மெய்கண்டார்,

'தாம் தம் உணர்வின் தமி அருள்''

என்று ஐந்தாம் நூற்பாவிற் குறிப்பிட்டருளுகின்றார். மேலும் அப் பரடிகள்

"பொத்தல் மண்சுவர்ப் பொல்லாக் குரம்பையை
மெய்த்தன் என்று வியந்திடல் ஏழைகாள்
சித்தர் பக்தர்கள் சேர்திருக்கானூரில்
அத்தன் பாதம் அடைதல் கருமமே''

என்று ஐந்தாந் திருமுறையில், திருக்கானூர்ப் பதிகத்தில் நான்காம் பாசுரமாக அருளிச் செய்துள்ளார். இப்பகுதியின் மூலம் இவ்வுடம் பில் உள்ள அனைத்துக் கருவிகளும் பொய்யானவை; பொய் யானவை என்ற சொல்லை ''அசத்து'' என்ற சொல்லால் விளங்கிக் கொள்ளுதல் வேண்டும். 'மெய்த்தன்' என்று வியந்து மகிழ வேண்டாம் என்று கூறுவதன் கருத்து—அவை பொய்யானவை என்று கொள்ள வேண்டுவதன் கருத்து, அவை அறிவற்றவை என் பதே. மக்களையும் அவர் ''ஏழைகாள்'' என்று கூறுவதன் நோக்கம் அறிவற்றவர்கள் என்பதுதான்.

உயிரின் இணைப்பால் உடம்பு அறிவுடையதாகத் தோன்றுகிறது. இயல்பாகவே உடம்பு அறிவுடையதன்று. அவ்வாறே இறையின் இணைப்பால் உயிர் அறிவுடையதாய்த் தோன்றுகிறது. உயிரானது இணையாதபோது மெய்வாய் கண் மூக்குச் செவி போன்றவை அறி யும் தன்மையைப் பெறா. உயிரானது இணைந்து அறியச் செய்யும் போது, அறியும் தன்மையோடு இயங்கும் ஐம்புலன்களும் கீழே குறிப்பிடப்பெற்ற மூன்று செய்திகளை அறியா.

1. கண்ணானது காணும் செயலுக்கு அப்பாற்பட்டதாய்க் கேட்கும் செயலுக்கு உரியதை அறியாது.

2. காணும் தன்மையை உயிரின் இணைப்பால் பெற்ற கண்ணுனது கண்ணுகிய தன்னைப்பற்றி அறியாது.

3. கண்ணுனது தன்னைக் காணும் செயலுக்கு உட்படுத்தும் உயிரையும் காணுது.

இவ்வாறே, உயிரும் இறைவனுல் காணும்செயலை மேற்கொண்டாலும் கீழ்க்கண்ட மூன்றையும் காண இயலாது.

1. ஐம்புலன்களின் துணைகொண்டு கண்டாலும், கருவிகளின் துணையில்லாமல் காணப்பெறும் பொருள் ஒன்று இருப்பின் அதனை உயிரானது காண இயலாது. கருவிகளின் எல்லைக்கு உட்பட்ட பொருளையே அறியும்.

2. உயிர் தன்னையே அறிய இயலாது.

3. உயிரானது தன்னை இயக்கும் இறைவனையும் அறிய இயலாது.

ஐம்புலன்களும் உயிரும் இவ்வாறு அறிவு நிலையிலும் அறியும் நிலையிலும் குறைவு பெற்றவை என்பதை எடுத்துக்காட்டவே,

"மெய்த்தன் என்று வியந்திடல் ஏழைகாள்"

என்று குறிப்பிட்டருளினுர்.

ஆயினும், இறைவன் திருவடியைச் சார்ந்துவிட்டால் அனைத்தையும் அறிய முடியும் என்றும் குறிப்பிட்டார். அது அவன் அருட் செயல் என்றும் தெளியவைத்தார். இதனை விளக்கும் வகையில் "***அத்தன் பாதம் அடைதல் கருமமே***" எனக்கூறி முடித்துக்காட்டினுர். இவற்றின் அடிப்படையாக எழுந்ததே கீழ்க்கண்ட சிவஞானபோத நூற்பா.

விளம்பிய உள்ளத்து மெய் வாய் கண் மூக்கு
அளந்து அறிந்து அறியா ஆங்கவை போலத்
தாம்தம் உணர்வின் தமி அருள்
காந்தம் கண்ட பசாசத்தவையே.

## *முடிப்புரை*

திருஞானசம்பந்தப்பெருமான் அறத்தின் அடிப்படையில் நின்று பொருளுண்மையை நிலைநாட்டியமை போன்றே அப்பரடிகளும் பொருளின் அடிப்படையில் பொருளுண்மையையும் பொருளின் இலக்கணங்களையும் அடைதல் என்ற நெறிமுறையில் விளக்கும் செயலை மேற்கொண்டார்.

பொருளின் இலக்கணத் தன்மையை உணர்த்தும் வகையில் பொருள் தம்மளவில் நன்மையுடையவை, தீமையுடையவை

என்பனவல்ல; தீமையாயினும் நன்மையுடையவைகளாகவே ஆக்கப் பெறல் வேண்டும். அத்தகைய ஆக்கத்தினை விளைவிப்பது தொண்டே என்று கூறும் வகையில் ''தொண்டருக்குத் தொண்டராம் புண்ணியமே'' என்று குறிப்பிட்டருளினர். தீமையையும் நன்மையாக மாற்றுதற்குரிய பண்பே-பொருளின் முதன்மைப்பண்பு என உணர்த்தும் பொருள் நிலையே முதற்படியாக நின்றது. இனி, இரண்டாம் நிலையில் அப்பரடிகள் உணர்த்தும் பொருள் நிலைப்பண்பு அறிவு நிலையைச் சார்ந்தது.

அனைத்துப் பொருள்களுக்கும் மூலமாய்—கருவாய் நின்ற பொருள் ஒன்றே. அது ஏனைப் பொருள்களுக்கெல்லாம் அறிவுணர்த்தும் நிலை பெற்ற தலைமைப் பொருள். இறைவனின் அறிவு செறிந்த அறிவு; உயிர்களின் அறிவு உறழ்ந்த அறிவு. மெய், வாய், கண், மூக்குச் செவிகளைப் போலவே உயிரும் தம்முதல்வன் உணர்த்தினுல்தான் உணரும் தன்மை உடையது எனக்காட்டி, அவன் அறிவாய் நின்றுலும் அருளே மயமானவன் என்றுங் குறிப்பிட்டுக் காட்டி, அவ்வகையினுல் ஞானமும் அருளும் ஒன்று என விளக்கும் வகையில் ''தாம்தம் உணர்வின் தமி அருள்'' எனத் தெளிவுபட, மெய்கண்டார் எடுத்துக்காட்டுவதற்கு அப்பரடிகளின் ஐந்தாந்திருமுறை மூலமாயிருந்து நலம் விளைத்தது என்று கொள்ளுதல் தெளிந்த உண்மை எனல் தேற்றம்.

# 8. சிவசத்து

*முன்னுரை*

அப்பரடிகள் அருளிய ஆறுந்திருமுறையானது பல்வகைப் பெருமைகளின் களஞ்சியமாகத் திகழ்வது. ஆறுந் திருமுறை முழுவதும் தாண்டகயாப்பினுல் அமைக்கப் பெற்றது. 'தாண்டக வேந்தர், என்ற சிறப்புப் பெயராலேயே அழைக்கப் பெற்றவர் அப்பரடிகள். தேவாரத் திருமுறைகளிலேயே 'தாண்டகம்' என்ற யாப்புவகையை அமைத்துப் பாடியவர் திருநாவுக்கரசர் ஒருவரேயாதலின் "தாண்டகச் சதுரர்" என்று சேக்கிழார் சிறப்பித்துக் கூறுகின்ருர். திருஞானசம்பந்தர் இறையுண்மை போன்றவைகளை மிகச் சுருக்கமாகத் தொகுத்து ஒரு மொழியாகவோ, சில மொழிகளாகவோ கூறியவைகளைத் திருநாவுக்கரசர் மிக விரிவாக எடுத்துக் கூறும் இயல்புடையவர்.

திருஞானசம்பந்தரின் திருப்பதிகங்கள் நிறைமொழிகளாகக் கொள்ளத்தக்கவை. மந்திரமொழிகள் எனப் போற்றத்தக்கவை. ஆனுல், திருநாவுக்கரசரின் திருப்பதிகங்கள் ஒருவகை அனுபவ மொழிகள். நிழலில் இருந்தவன் நிழலின் இன்பத்தை அல்லது உயர்வை எடுத்து மொழிவதும் அனுபவ மொழிகளே. ஆனுல் நிழலில் இருந்தவன் நிழலின் அருமையை அறியும் அறிவில்லாதவனுனன். அவன் வெய்யிலை அடைந்து அனுபவித்தான்; மீண்டும் நிழலுக்கு வருகிருன்; வெய்யிலை அடைந்து, வருந்தி, பின்னர் நிழலுக்கு வந்தவன் வெய்யிலோடு இணைத்துக் கண்டு தன்னுடைய நிழல் அனுபவத்தைக் கூறுகின்ருனுதலின் இவனுடைய அனுபவம் முன்னவனுடைய அனுபவத்தைவிட வேறுவகையில் அனுபவித்த சிறப்புடையது எனக்கொள்ள வேண்டும். அவ்வகையில் திருஞான சம்பந்தருடைய அனுபவம் நிழலில் நின்றே நிழலை அனுபவித்து உணர்ந்த அனுபவம் போன்றது. திருநாவுக்கரசரின் அனுபவம் நிழலில் நின்றபோது நிழலின் அருமை தெரியாமல் அனுபவித்து, வெய்யிலில் சென்று அனுபவித்து, பின்னர் நிழலுக்கு வந்தபோது அனுபவித்த அனுபவம் போன்றது. முன்னர்ப் பெற்ற அறியாமை அனுபவம், வெய்யலின் அனுபவம், வெய்யிலால் பெற்ற அனுபவத்தோடு இணைத்துக் கண்ட நிழல் அனுபவம் என்ற மூன்று இணைப்புக்களைக் கொண்டதாக விளங்கும் ஒருவகைப் புதிய அனுபவ மொழிகள் திருநாவுக்கரசருடையவை.

1. நிழலில் இருந்தபோது அனுபவிக்க வேண்டியதைத் தவற விட்டமைக்காகக் கழிவிரக்கம் கொண்டு கூறுதல். 2. வெய்யிலில் பட்ட துன்பம். 3. வெய்யிலிலிருந்து துன்பமுற்றுத் தாளாது நிழலுக்கு வந்தபின் பெற்ற நிழலனுபவம் என்று மூன்ருக அமைத்துக் கொள்ள வேண்டும். இத்தகைய நிலையில் அப்பரடிகளுக்கு அமைந்த அனுபவத்தை மிகவும் போற்றிப் புகழ்கிருர் கற்பனைக்களஞ்சியம் சிவப்பிரகாச சுவாமிகள்.

''ஊர்ந்து வரும் இளவேறு உடையான் தன் உளத்தருளாற்
சார்ந்து சமண் வீட்டுறும் உனக்கே வரும் **சைவநலம்**
கூர்ந்து மிளிர்தரு நாவரசே! நல்குரவு முனஞ்
சார்ந்து மருவினர்க்கே சிறந்தோங்குறும் செல்வமுமே''

என்பது **நால்வர் நான்மணி மாலைச்** செய்யுள். அப்பரடிகள் தாம் சைவசமயத்தில் இருந்தபோது சைவசமயத்தை உண்மையாக உணரவில்லை; சைவசமயத்தை உணர முற்பட்டபோதும் சைவ சமயக் காவலர்களை அணுகிக் கேட்டு உணர்ந்து கொள்ளவில்லை. யாரைக் கேட்கவேண்டுமோ அவரைக் கேட்காமல் இயைபு கருதி யார் யாரையோ கேட்டுவிட்டார். அவர்கள் கூறிய வழியைக் கொண்டு நடந்தார். அதனுல் வந்ததே இச்சிறுமை. இவ்வுண்மையை அவர் மிகத் தெளிவாக உணர்த்தும் திருப்பதிகப் பகுதி ஒன்றை உணர்ந்து தெளியலாம்.

***''காத்தாள்பவர் காவல் இகழ்ந்தமையால்***
***கரைநின்றவர் கண்டுகொள் என்று சொல்லி***
***நீத்தாய கயம்புக நூக்கியிட***
***நிலைக்கொள்ளும் வழித்துறை யொன்றறியேன்***
வார்த்தை இது வொப்பது கேட்டறியேன்
வயிற்றேடு துடக்கி முடக்கியிட
ஆர்த்தார் புனல் ஆர் அதிகைக் கெடில
வீரட்டானத் துறை அம்மானே'' *(4—1—5.)*

என்ற திருப்பதிகச் செய்யுளில் ஓர் உவமையின் மூலம் தன்னுடைய நிலையை மிகத் தெளிவாகக் கூறிவிடுகிருர்.

கயம்—குளம். குளத்துநீரைக் காப்பவர் காவல்காரர். அப்பரடிகள் காத்து ஆள்பவர் எனக் குறிப்பிடுகிருர். காத்தலும் ஆளுதலும் ஆகிய இருவினைகளைக் கூறுகிருர். குளத்துநீரைக் கெடுதிவாரா வண்ணம் காத்தல் ஒருவகை. அவர்கள் குளத்துநீரைக் கெடுக்க வருவாரைத் தடுத்து, அக்கெடுதியானது குளத்துநீரை அடையாமல் காத்துநிற்பவர்கள். அவர்கள் செயல் ஒருவகை. பிறிதொருவகையினர் அந்நீரை நன்மையுடைய நீராக ஆக்கும் ஆக்கப்பணியில் ஈடுபட்டுச் செயல்புரிபவர். தீமைநீக்கமும், நன்மையாக்கமும் ஆகிய இருவகைச் செயல்களிலும் ஈடுபட்டுக் குளத்துநீரைக் காப்பவரைக் ''காத்தாள்பவர்'' என்ருர். குளத்துநீரை இவ்வாறு காத்தாள்பவர் இருப்பவும் அவர்தம் செயலை மதியாமல், அவர்தம் காவலை இகழ்ந்து

ஒதுக்கினேன் என்று கூறுகிறார். காத்தாள்பவரின் காவலை இகழ்ந்த தோடன்றி, அக்குளக்கரையில் நின்றிருக்கும் ஒருவரைக்கண்டார். குளத்தங்கரையில் நின்றிருந்தவர் என்பதே குளத்துக்கும் அவருக்கும் உள்ள இயைபு. அவரிடம் சென்று குளத்தின் வரலாறு, குளத்துள் அமைந்த நீரின் தன்மை, ஆழம் முதலியவற்றைக் கேட்டார். அவர் என்ன கூறினார்? எனின், அது விந்தையினும் விந்தை. சென்று நீரைத் தொட்டு, பின்னர் ஆழம் கண்டு, அதன் பெருமையைத் தெரிந்துகொள் என்று கூறினார். அவர் பேச்சை நம்பி, அக்கயத்தினுள் புக்கேனாக, இறங்கு துறையிலேயே நீந்தவேண்டிய நிலைமைக்கு ஆளாகி விட்டேன், குளத்தின் ஆழம் முதலியவைகளைத் தெரிந்து கொள்வதைவிட, என்னையே காத்துக்கொள்ள முடியாதவனாக ஆகி, நிலைக்கொள்ளும் வழிவகையை அறியாதவனானேன். இதுவே அவர் கூறும் விளக்கம்.

### *சைவத்தின் பெருமை*

காத்தலும் ஆளுதலும் ஆகிய செயல் மேற்கொண்டு வாழ்ந்த சைவப் பெருந்தகைகள் பலர் இருந்தனர். அவர்தம் செயலை மதியாமல், குளக்கரையில் நின்றிருந்த ஒரு காரணம் பற்றியே ஒரு சிலரை அடைந்து கேட்டேன். அவர்களும் கண்டுகொள் எனக்கூறி என்னை அதனுள் புகுந்து அழுந்துமாறு செய்து விட்டனர் என்று கூறுகிறார். காத்தாள்பவர்தம் அறிவுரையை இகழ்ந்து, கரைநின்றவர்தம் உரையை ஏற்றமையால், தான் எவ்வாறு வருந்த நேர்ந்தது என்பதைப் பலபட விரித்துரைக்கும் அப்பரடிகள் சில எடுத்துக் காட்டுக்களைத் தருகிறார்.

"கொய்யுலா மலர்ச்சோலைக் குயில் கூவ
மயிலாலும் ஆரூரரைக்
கையினால் தொழா தொழிந்து *கனியிருப்பக்*
*காய்கவர்ந்த கள்வனேனே"*

என்றும்,

"முன்பிருக்கும் விதியின்றி முயல்விட்டுக்
காக்கைப்பின் போனவாறே"

என்றும்,

"அருகிருக்கும் விதியின்றி அறமிருக்க
மறம் விலைக்குக் கொண்டவாறே"

என்றும்,

"பனிநீராற் பாவைசெயப் பாவித்தேனே"

என்றும்,

"என் ஆகத்து இருத்தாதே ஏதன்போர்க்கு
ஆதனாய் அகப்பட்டேனே"

என்றும்,

"எப்போதும் நினையாதே இருட்டறையில்
மலடுகறந்து எய்த்தவாறே"

என்றும்,

"விளக்கிருக்க மின்மினி தீக்காய்ந்தவாறே"

என்றும்,

"பாழூரிற் பயிக்கம் புக்கு எய்த்தவாறே"

என்றும்,

"தவமிருக்க அவம் செய்து தருக்கினேனே"

என்றும்,

"கரும்பிருக்க இரும்பு கடித்து எய்த்தவாறே"

என்றும் பத்து வகையால் உவமை கூறி விளக்கியும் பழமொழி கூறிப் பாங்கின் உணர்த்தியும் உள்ளார். இவையெல்லாம் நாலாந் திருமுறையின் ஐந்தாந் திருப்பதிகமாகிய திருவாரூர்த் திருப்பதிகத்தி லேயே அமைந்துள்ளவைகள். மேலே காட்டப்பெற்ற பத்துவகை விளக்கங்களில் ஆறு விளக்கங்கள் சைவசமயத்தையும் சமண் சமயத்தையும் இணைத்தோதும் அமைப்பில் உள்ளன. அவைகளைக் காணலாம்.

சைவசமயம் இருக்கவும் சமண் சமயத்தைச் சார்ந்த ஒன்றற்குக் கனியிருப்பக் காய்கவர்ந்தேன்; முயல்விட்டுக் காக்கைப்பின் போனேன்; அறம் இருக்க மறத்தை விலைகொடுத்து வாங்கினேன்; விளக்கிருக்க மின்மினி தீக்காய்ந்தேன்; தவம் இருக்க அவம் செய்து தருக்கினேன்; கரும்பு இருக்க இரும்பு கடித்து எய்த்தேன் என்று ஆறுவகையாக விளக்கம் கூறினார்.

இவைமுறையே கனியும் காயும், முயலும் காக்கையும், அறமும் மறமும், விளக்கும் மின்மினியும், தவமும் அவமும், கரும்பும் இரும்பும் எனப்பிரிந்து நின்று முறையே சைவசமயத்தையும், சமணசமயத் குறிப்பிட்டன. இங்கே சொல்லப் பெற்றவை அப்பரடிகளின் அநுபவ உண்மைகள்.

முதிர்ச்சிபெற்ற தத்துவக் கொள்கைகளை இருப்பிடமாகக் கொண்டதோடன்றி, அநுபவ முதிர்ச்சியும், காலம் பெறக் காத் திருந்து அயைக் கூடிய நிலையின்றி, உடனே நுகர்தற்குரிய பக்குவ மும் பெற்றுச் சிறந்திருப்பது சைவம் என்றும்;

முறையே அடையப்புகும் பயிற்சியை மேற்கொள்ள முற்படு வார்க்கு முயல்போன்று விரைந்து கொண்டுபோய்ச் சேர்க்கும் திறனும், ஆகாயத்தில் பறப்பது போன்ற அடைய முடியாக் கொள் கைகளை உடைத்தாதல் இன்றி, எவரும் எளிமையாகச் செயல் வடி வில் அமைத்து மேற் கொள்ளக் கூடிய பயிற்சியையும் உடையது சைவம் என்றும்;

செல்லும் வழிமுறையைச் சிந்திக்கின் அறம் தழுவிய வழி முறையை உடையது; வழி எவ்வாறுயினும் கவலையில்லை ; பயன் நன்மையுடையதாயின் அதனை அடைய எந்த ஒரு வழிமுறையையும் கையாளலாம் என வகுத்துக் கொள்ளல் இன்றி, அறம் தழுவிய பயிற்சி முறையைக் கொண்டதே சைவம் என்றும் ;

விளக்கானது வெளிச்சம் தருவதோடு குளிரையும் நீக்குவது போல, பயிற்சி முறையும் பயனை அடைவிப்பதோடு இடையிடையே தோன்றும் ஐயமகற்றி, வளமான வாழ்வையும் தரவல்லதாய் அமைந்திருக்கும் தன்மையுடையதே சைவம் என்றும் ;

உலகில் பிறந்த உயிர் தன்னுடைய காரியம் செய்வதுபோலத் தன்னை உயர்வுபடுத்திக் கொள்வதற்காக அமைந்த சமயம் சைவம் என்றும் ;

முடிந்த பயனாகிய இன்பத்தைத் தருவதில் கரும்பு போன்றது சைவசமயம் என்றும்; இவ்வாறு அதன் பெருமையைப் பல்லாற்றானும் விளக்கிக் காட்டுவாராயினர். இவ்வாறே சிவன், திருவடி, திருநாமம் என்றிவ்வாறான சைவசமயப் பிரிவுகள் எல்லாவற்றையும் தெளிய விளக்கமாக எடுத்தோதி விளக்கம் செய்வது அப்பரடிகள் மேற் கொண்ட பாதை எனக்கொள்ளுதல் வேண்டும்.

*சிவன் பெருமை :—* இவ்வாறே இறைவனுடைய தன்மையை விளங்க உரைக்க முற்படும்போது அவனுடைய சிறப்பியல்புகள் யாவற்றையும் இணைத்துக் கூறி வருகின்ற அப்பரடிகள் மிக நுட்ப மாகக் கூறும் பகுதிகள் சிலவற்றைச் சிந்திக்க வேண்டும்.

1. இறைவனை அறியும் நெறிமுறைகள் சிலவற்றை வகுத்துக் கொண்டு, அந்நெறிகளையும் பாராட்டிப் பேசுகின்ற சிலர் கூறும் கொள்கைகளை எடுத்துக் கொள்கின்றார். அவ்வாறு கூறுபவர்கள் கூறக் கேட்கும்போது அந்நெறிகளும் அறமுறைகளும் இன்பம் பயப்பனவாகத் தோன்றுகின்றன என்று குறிப்பிடுகின்றார். ஆனால், காலப்போக்கில் அவைகளெல்லாம் வாதம் செய்வோரையே — நெறிமுறைகளைக் கூறியவரையே அழித்துவிடுகின்றன என்று ஓர் உவமையின் மூலம் எடுத்துக் காட்டுகின்றார்.

"வளைத்துநின்று ஐவர் கள்வர் வந்து எனை நடுக்கஞ் செய்யத்
தளைத்து வைத்து உலையை ஏற்றித் தழல்எரி மடுத்த நீரில்
திளைத்து நின்று ஆடுகின்ற ஆமைபோல் தெளிவு இலாதேன்
இளைத்து நின்று ஆடுகின்றேன் என்செய்வான் தோன்றினேனே"

என்பது (4-79-6) அப்பர் திருவாக்கு.

ஐம்புலன்களைக் கள்வர் என்றார். அவர்கள் வளைத்து நின்றார்கள்; அச்சமுறுத்துகின்றார்கள் ; தளைத்துவிட்டார்கள் ; அவர்கள்சொற் படி ஆடுகிறேன். நான் ஆடுவது **இளைத்து நின்று** ஆடுகின்றேன்

என்றார். ஐம்புலன்கள் எனக்கு உதவி செய்ய அமைக்கப் பெற்ற அடிமைகள். ஆனால், ஆண்டானாக நின்று அவைகளை அடிமை செய்யவைக்க வேண்டிய யான் அடிமையாகிவிட்டேன். இளையர் என்பார் பணியாட்கள். இளைத்து நின்று ஆடுகின்றேன் என்பதன் மூலம் அப்பரடிகள் யான் ஐம்புலக் கள்வர்களுக்குப் பணியாளாகக் குற்றேவல் செய்வதாக என்னைத் தோற்றுவித்துக் கொண்டு நின்று, அவர்கள் பணித்தவாறே ஆடுகின்றேன் என்று குறிப்பிடுவதன் மூலம் கள்வராகிய ஐவரும் என்னை என்போக்கில் செல்லுமாறு விட்டு, எனக்குத் துணையாக இராமல், நான் அவர்கள் இடும் பணியைச் செய்யும் குற்றேவலாளனாக ஆகிவிட்டேன். இத்தகைய நிலையில் நின்று நான் அறிய முற்படும்போது, எனக்கு வரும் செய்திகள் இன்பம் விளைப்பன போலத் தோன்றுகின்றன. ஆனால், இயல்பில் அவை என்னை அழித்து விடுபவைகள் என்பதை அப்போது உணரும் தெளிவு இல்லாதவனாக அமைந்துள்ளேன் என்று குறிப்பிடுகிறார். ஆமையானது உலைநீரின் சூடு பக்குவமாக இருக்கும்போது ஆனந்தப்படுகிறது. ஆனால், உலைநீர் சூடு ஏற ஏற ஆமை அழிந்து போகிறது. அழிந்துபோவோம் என்பதை அறியாமல் உலைநீரின் சூடு பக்குவமாக இருக்கிறது எனக்கொண்டு திளைத்து ஆடுகின்ற ஆமைபோன்றது என் நிலைமை என்று குறிப்பிடுகின்றார். இவ்வுவமையின் மூலம் அப்பரடிகள் உணர்த்தும் கருத்தினை நன்கு சிந்தித்தல் வேண்டும்.

ஆண்டானாக இருந்து, அனைத்துக் கருவிகளையும் செயற்படுத்தி, அடக்கியாள வேண்டிய உயிரானது அடிமைத் தன்மையை எய்திவிட்டது. அதற்குக் காரணம் பெற்ற சிற்றின்பத்தையே பேரின்பம் எனக் கருதும் தவறான கொள்கை. துன்பமாக மாறுவதோடன்றித் தன்னையே அழிக்கவல்லதாகியதும், உலைநீரின் சூட்டில் உலக இன்பத்தையே காணும் பொய்மை உடையதாகியதும் ஆகிய இன்பத்துக்காகவே ஆண்டான் என நிற்க வேண்டிய உயிர் அடிமைத் தன்மையை அடைந்தது. உயிரானது இத்தகைய சிறுமை இன்பத்துக்காக ஏங்குகிறது என்ற நிலைமை தோன்றியதால் கருவிகளாக நின்று தொழிற்பட வேண்டிய ஐம்புலன்கள் தலைமைத் தன்மையை ஏற்றன; ஏற்றுள்ள தலைமைத் தன்மையை உறுதிப் படுத்திக் கொள்ளும் வஞ்சகர்களாகவும் ஆகிவிட்டன. இவ்வகையில் ஐம்புலன்கள் உண்மையை உணர்த்தும் நிலையில்லாதவைகளாயின. அவைகளால் அறியப்பெறும் எல்லாம் உண்மையெனத் தோன்றிப் பொய்ப்பனவே. இங்கே உண்மை, பொய் என்பனவற்றின் விளக்கங்களாக நாம் கொள்ளத்தகுவன மாறுபடும் தன்மையும் சிறிது நேரம் நிற்குந்தன்மையுமே.

''ஐம்புலன்களால் அறியப்பெறும் எல்லாம் அசத்து'' என்பதே அப்பரடிகளின் வாக்கின் நுட்பம் எனக் கொள்ளல் வேண்டும். அசத்து என்பதன் கருத்து இல்பொருள் என்றோ இல்லாதவை என்றோ கொள்ளக்கூடாது. மாற்றமுறுபவை என்றே கொள்ள வேண்டும். ஆமையானது உலைநீர்ச்சூடு பக்குவமாக இருக்கின்ற

காலத்தும் பெற்ற இன்பம் பொய்யன்று; உண்மையே. ஆயினும் அது சிறிது நேரம் நின்று மாறுபடுவது. மேலும் முடிவில்லாத் துன்பத்துக்குக் காரணமாக நின்ற இவ்வின்பம் ஆமைக்கு நன்மை தருவதன்று என்ற அளவிலேயே கொள்ள வேண்டும்.

2. இனி, ஆமையின் தன்மையை வேறொரு எடுத்துக் காட்டின் மூலம் நன்கு விளக்குகின்றார்.

''கூவல் ஆமை குரைகடல் ஆமையைக்
கூவலோடு ஒக்குமோ கடல் என்றல்போல்
பாவகாரிகள் பார்ப்பரிது என்பரால்
தேவதேவன் சிவன் பெருந்தன்மையே''

(5—100—5)

என்ற, இப்பாசுரத்தின் மூலம் கிணற்றில் வாழும் ஆமையானது கடலில் வாழும் ஆமையைக் காண்கிறது. கிணற்று ஆமையானது கடலாமையைப் பார்த்து, நீ வாழும் கடல் யான் வாழும் கிணற்றை ஒக்குமோ? இக்கிணற்றைவிடப் பெரியதா உன் கடல்? என்ற வினாக் களை எழுப்புகிறது. ஆனால், இவ்வினாக்களின் நோக்கம் 'கிணற்றை விடப் பெரியதன்று கடல்' என்ற கருத்தை உள்ளிட்டதே. இவ் வுவமையால், உயிர்கள் தத்தம் எல்லையையே பேரெல்லை என்று மயங்குந்தன்மை உடையவை எனத் தோன்றுகிறது. தாம் சார்ந்த எல்லையையே பெரிதெனக் கண்டு மயங்கும் தன்மையுடையவை என்று குறிப்பிடுகிறார். ஆனால், பெரிய கடலை அடையுமேயானால் முன்னே இருந்த கிணறு சிறியது, கடலே பெரியது எனக் கொள்ளும் உணர்வு அதற்கு உண்டாம் எனவும் ஒப்புகின்றார். சார்ந்திருக்கும் இடம் சிறியதாக இருப்பதால் பெரிய ஒன்றைக் காணும் ஆற்றலை அது பெற முடியவில்லை என்றும் உணர்த்துகின்றார். மேலே குறிப் பிடப்பெற்ற செய்யுளின் பிற்பகுதியில் சிவனைப் பார்க்க முடியாது என்று பாவகாரிகள் கூறுவர் என்று குறிப்பிடுகிறார். அவ்வாறு கூறுவதன் நோக்கம் சிவன் பெருந்தன்மையுடையவன்; பிரமம்; பரந்து வளர்ந்து சிறந்ததோடன்றி அனைத்துப் பொருள்களுக்கும் கருவாக நின்று தாங்கிய தன்மைத்து ஆதலின் பிரமம்; அனைத்துத் தேவர்களையும் நிலைநிறுத்தும் பேராற்றல் உடையவன் ஆதலின் தேவதேவன். அவனைப் பாவகாரிகள் பார்ப்பரிது என்பர் என்று கூறுகிறார். பாவகாரிகள்—சிறுமைச் செயலுடையர். சிறிய எல்லைக் குள் தம்மை இணைத்துத் தளைத்துக் கொண்டவர்கள், பெரிய பொருளை —பரம்பொருளைக் காணும் ஆற்றல் இல்லாதவராயினர்.

3. அடுத்து, சிவன் எனப்பெறும் பெருந்தன்மையானது எல்லோ ராலும் காணக்கூடிய நிலைமைத்தே என்று குறிப்பிடுகிறார். ஐம்புலன் களோடு இணைந்து காண முற்படும்போது, அவைகளாற் காணப் பெறுவனவெல்லாம் மாறுந்தன்மையன ஆதலின், சிவன் பெருந் தன்மையை அவைகளாற் காண இயலாது என்றார். உயிர்கள் தம் மளவில் நின்று காணமுற்படின், அவை சிற்றெல்லைக்குள் நிற்பன ஆதலின் அவைகளால் சிவன் பெருந்தன்மையைக் காண இயலாது

என்று குறிப்பிட்டார். அவ்வாறுயின், பாவகாரிகள் கூறுவதுபோல, சிவன் பெருந்தன்மையை யாருமே பார்க்க இயலாதோ? என்ற வினு தோன்றுகிறது. அதற்கு விடையாக அமைந்த திருப்பதிகத்துச் செய்யுள் ஆருந்திருமுறையில் அமைந்துள்ளது.

''மைப்படிந்த கண்ணுளும் தானும் கச்சி
மயானத்தான் வார்சடையான் என்னினல்லான்
ஒப்புடைய னல்லன் ஒருவ னல்லன்
ஓர் ஊரன் அல்லன் ஓர் உவமன் இல்லி
அப்படியும் அந்நிறமும் அவ்வண்ணமும்
**அவனருளே கண்ணுகக் காணின் அல்லால்**
இப்படியன் இந்நிறத்தன் இவ்வண்ணத்தன்
இவனிறைவன் என்றெழுதிக் காட்டொணுதே''
(6—97—10)

உயிர்கள் தாம் கருதியதை முடிக்க முடியாத நிலையில் அமைந்த காம்பிலா மூழைகள் ஆதலின், அவைகள் நினைக்கும் நினைப்புக்கள் பாம்பின் வாய்த்தேரையின் நினைப்பைப் போல்வன ஆதலின் அவைகள் தம்மை உணர்ந்து, தம்மின் இழிவை உணர்ந்து, தம்மின் மேலாய பரம்பொருளோடு இணைந்து, அவனருளே கண்ணுகக் காணுதல் வேண்டும். அவ்வாறு காண முற்படின் சிவன் பெருந் தன்மையை இப்படியன், இந்நிறத்தன், இவ்வண்ணத்தன், இவன் இறைவன் என்று எழுதிக் காட்டிவிட முடியும் என்று தெளிவு படுத்திக் கூறுகிருர்.

எனவே, அப்பரடிகள் திருவாக்கிலிருந்து உணரப்பெறுவன யாவை யெனில், சிவன் பெருந்தன்மையைக் கள்வராகிய ஐவராற் காண முற்படின் காண இயலாது; உயிர்கள் தம்மளவில்நின்று காண லுறின் அவனைக் காண இயலாது; ஏனெனில் உயிர்களின் அறிவை விஞ்சிய இருப்புடையவன். அவனருளே கண்ணுகக்காண முற்படின் காணுதற் கெளியனே. அப்பரடிகளின் இக்கருத்துக்களையே சாத்திர நூல்கள் பாசஞானத்தாலும், பசுஞானத்தாலும் பார்க்கப் பெறமுடி யாதவன்; பதிஞானத்தால் பார்க்கப் பெறுபவன் எனக் கூருநிற்கும். இக்கருத்தைத் தெளிய உணர்த்தும் நிலையிலேயே மெய்கண்டார்,

''உணருரு அசத்தெனின் உணராது இன்மையின்
இருதிறன் அல்லது சிவசத்து ஆமென
இரண்டு வகையின் இசைக்குமன் உலகே''

என்ற ஆரும் நூற்பாவை அருளிச்செய்வாராயினர். பாசஞானம், பசு ஞானம் என்பனவற்ருல் அறியப்படாமையின் சிவம் எனவும்; பதி ஞானத்தால் அறியப்படுதலின் சத்து எனவும்; இவ்விரண்டு தன்மை களும் இணைந்த பெருந்தன்மையே சிவம் எனவும் பொருள் பெற **''இரண்டு வகையிற் சிவசத்து ஆம்''** எனக் கூறினுர். இவ்வகையில் **அவனருளே கண்ணுகக் காண** வேண்டும் என்ற ஆரும் திரு முறையைக் கொண்டெழுந்தது மெய்கண்டாரின் *சிவஞான போதத்து* ஆரும் நூற்பா எனத் துணியலாம்.

## முடிப்புரை

அப்பரடிகள் பொருள் தன்மையை நிலைநிறுத்தும் அடிப்படைக் கொள்கையை முன்னிட்டுக் கொண்டு இறை, உயிர், தளை ஆகிய வைகளின் இயல்புகளைக் கூற முற்பட்டவர் என்றும், அடைதலாம் நெறியில் அம்முப்பொருள்களின் இயல்புகளையும் கூற முற்பட்டவர் என்றும் தோற்றுவாய் செய்து வகுத்துக் கொண்டமை முன்பேயும் கூறப்பெற்றது. அவ்வகையில் *முதற்படிநிலையில்* பொருளால்நன்மை யுடையவை என்றோ தீமையுடையவை என்றோ இல்லை; நஞ்சும் அமுதாம் என்ற தொடருக்கேற்பக் கைத்தொண்டினால் தன்னைச் சார்ந்த எல்லாப் பொருள்களையும் நன்மையுடைய பொருளாக ஆக்க முடியும் என்பதை நான்காந் திருமுறையில் விளங்க உரைத்தார். இனி, *இரண்டாம்படிநிலையில்,* பொருள் தன்மையால் எல்லாவற்றுக்கும் மூலமாய், தோன்றாத் துணையாய் நின்ற பொருள் ஒன்றே. ஏனைய எல்லாம் அம்பொருளை அடையும் தன்மையுடைய பொருளே என்பதை எடுத்துக்காட்டி, பொருளியல்பையும் அடைமுறையையும் ஐந்தாந் திருமுறையால் அமையக் காட்டினார்

மெய்மை என்னும் உழவினால் சிறந்து, விருப்பம் என்னும் நீர் பாய்ச்சி, தகவு என்னும் வேலியிட்டு, செம்மையுள் நின்றால்—திருத்தொண்டு செய் கடமைப்பாட்டில் நின்றால் சிவகதி விளையும் என அடைதல் முறையையும் சிறப்பாக எடுத்துக் காட்டியருளினார். ஆயினும், *பொருள்நிலையில் நின்று* முப்பொருளியல்பையும் அடைவு முறைகளையும் கூறியருளும் அப்பரடிகள் ஒரு நுட்பத்தை வெளிப்படுத்தியுள்ளார்.

''உறுகயிறு ஊசல்போல ஒன்று விட்டு ஒன்று பற்றி
மறுகயிறு ஊசல்போல வந்து வந்து உலவும் நெஞ்சம்
பெறுகயிறு ஊசல்போலப் பிறை புல்கு சடையாய் பார்த்து
அறுகயிறு ஊசலானேன் அதிகை வீரட்டனாரே''

(4.26.6)

என்பது அப்பரடிகள் திருவாக்கு.

நெஞ்சத்துக்கு ஊஞ்சலை உவமையாக்கினார். ஒன்று விட்டு ஒன்றைப் பற்றும்; பற்றியதை விட்டு வரும்; வேறு ஒன்றைப்பற்றும்; ஒன்றைவிட்டு ஒன்றைப் பற்றுவதும் வந்துவந்து உலவுவதும் நெஞ்சத்தின் இயல்புகள். ஆனால், இத்தகைய வழியைப் பின்பற்றாது, அறுந்த ஊசலுக்குத் தாய் தரையேயாவதுபோல் நெஞ்சம் பிற எதனையும் பற்றி நில்லாமல் அறுத்துக் கொண்டு, தனக்குத் தாயே யாகிய திருவடியில் வீழ்ந்துவிடுதல் வேண்டும். அவ்வாறு வீழ்ந்த நிலையில் பரம்பொருளானது, தன்னடியில் பற்றின்றி வீழ்ந்த உயிரை *ஒரு பொருளாக ஆக்குகிறது;* ஒருபொருளாந்தன்மையை உடையதாக ஆக்குகிறது என்று கூறுகிறார். உயிர் தன்னை ஒருபொருளாக உலகில் நிலை நிறுத்த வேண்டுமாயின், அதை ஒருபொருளாக ஆதற்குரிய தகுதியை யெல்லாம் கொடுத்துப் பொருளாக ஆக்கி நிறுத்துவதே இறைவன் திருவருள் என்று குறிப்பிடுகிறார்.

"பொருளல்ல வற்றைப் பொருளாகச் செய்யும்
பொருளல்லது இல்லை பொருள்"

என்ற திருக்குறளின் வண்ணம் பொருளாகத் தன்னை உலகில் நிலை நிறுத்திக் கொள்ளும் ஆற்றல் இல்லாத உயிர்களை இவ்வுலகில் 'பொருள்' எனநிலை நிறுத்தும் தன்மை வாய்ந்த ஒரே ஒரு பொருள்தான் திருவருள். திருவருளே, திருத்தொண்டின் மூலம் தன்னடியில் வீழ்ந்து கிடத்திக் கொண்டபோது, உலகில் என்றும் நிலைபெறும் பொருளாக அதனை ஆக்கி விடுகிறது என்று குறிப்பிட்டருளுவாராயினர். அத்திருப்பதிகச் செய்யுளைக் காண்க.

"துன்னகத் தேனுகித் துர்ச்சனவர் சொற்கேட்டுத்
துவர்வாய்க் கொண்டு
என்னகத் திரிதந்தீங்கு இருகை யேற்றிடவுண்ட
ஏழையேனன்
பொன்னகத் தடியேனைப் புகப்பெய்து பொருட்படுத்த
வாரூரரை
என்னகத் திருத்தாதே யேதன் போர்க் காதனய்
அகப்பட்டேனே"

(4—5.6)

என்னும் திருப்பதிகச் செய்யுளில் இறைவன் தன்னை ஒரு பொருளாக நிலைநிறுத்திய செயலைப் புகழ்ந்து பாராட்டுகின்றார். என்னைத் தன்னுள் புகப்பெய்து, இவ்வுலகில் என்னை ஒரு பொருளாக நிறுத்தி வைத்தான் என்று குறிப்பிடுகிறார். "மன்னு உலகத்து மன்னுதல் குறித்தோர்" எனவரும் புறநானூற்றுச் செய்யுளுக்கு, நிலைபேறில்லாத உலகத்தில் நிலைத்த பொருளாக நம்மை ஆக்குவது இறைவன் திரு வருளே எனக் குறிப்பிட்டுக் காட்டினார். இக்கருத்தை முற்ற நோக்கின், திருக்குறளில் வரும் பொருட்பாலுக்குப் பொருளை ஈட்டலும், காத்தலும் என்ற செய்திகளைக் கூறும் பகுதி எனக் கொள்ளாமல், தன்னை உலகில்—சமூகத்தில் ஒரு பொருளாக நிறுத்துதல் என்ற செயலுக்கு உரிய அறங்களாக உள்ளவற்றைக் கூறும் பகுதி எனப்பொருள் கொள்ள வேண்டுவதாம். இனி, மணி வாசகப் பெருந்தகை "என்னையும் இருப்பதாக்கினன்" என்று கூறும் தொடருக்கு, என்னை இவ்வுலகில் நிலைத்துநிற்கும் நிலைப்பொருளாக ஆக்கினன் என்று பொருள் கொண்டு நோக்கினல், அப்பரடிகள் இறைவன் தன்னை ஒரு பொருளாக அமைத்து நிலை நிறுத்தினன் என்று கூறுவதன் உண்மை தெளியலாம். இதையே இதற்கு முன் திருப்பாசுரத்திலும்,

"பண்டமாப் படுத்து என்னைப் பால்தலையில் தெளித்துத்தன்
பாதம் காட்டித்
தொண்டெலாம் இசைபாடத் தூமுறுவல் அருள்செய்யும்
ஆரூரரை"

என்று (4—5—5) எடுத்துக் காட்டியருளுவாராயினர்.

# 9. இருதிறன் அறிவு

## *முன்னுரை*

திருநாவலூரார், நம்பியாரூரர், வன்தொண்டர், தம்பிரான் தோழர் ஆகிய பெயர்களாற் சுட்டப்பெறும் சுந்தரமூர்த்தி சுவாமிகளுக்குத் திருக்கயிலையில் வழங்கிய பெயர் 'ஆலாலசுந்தரர்' என்பது. வன்மை பேசித் தொண்டராயினமையின் அவருக்கு 'வன்தொண்டர்' என்னும் சிறப்புப்பெயர் உண்டாயிற்று. ஞானப்பால் கொடுத்தாள்வம், தூலை மடுத்தாள்வம் என்ற அருளிப்பாடுகள் முறையே திருஞானசம்பந்தருக்கும் திருநாவுக்கரசருக்கும் உரியனவாயின. அவ்வாறே "*தடுத்தாள்வம்*" என்பது ஆரூரருக்குரியதாயிற்று. ஆயினும் ஏனைய இருவர் போலல்லாமல் "தடுத்தாளவேண்டும்" என்று திருக்கயிலையில் ஆலாலசுந்தரர் வேண்டிக் கொள்ள, அவ்வேண்டுகோளை உடன் கொண்டு தடுத்தாட்கொள்ளல் என்ற அருளிப்பாடு நடைபெறுகிறது.

நம்பியாரூரரின் வரலாற்றில் சிறப்புப்பெற்ற நிகழ்வுகள் நான்கு உள்ளன. (1) தடுத்தாட்கொள்ளல் (2) வன்தொண்டராதல் (3) தம்பிரான் தோழராதல் (4) அடியவர்க்கடியராதல் என்பன. இந்நான்கு அருளிப்பாடுகளையும் இவைகளை அடிப்படையாகக் கொண்ட அருளுரைகளையும் சிந்தித்துத் தெளிதல் கடனும்.

மேலே குறிப்பிடப் பெற்ற நால்வகை நிகழ்வுகளோடு, அவர் 'இன்பம்' என்ற ஒரு கொள்கையை விளக்க வந்தவராகவும் கொள்ள வேண்டும். திருஞானசம்பந்தர் அறத்தை அடிப்படையாகக் கொண்டு மெய்ப்பொருளுண்மையை நிலை நாட்டியது போல, திருநாவுக்கரசர் பொருள் என்னும் குறிக்கோளை அடிப்படையாகக் கொண்டு மெய்ப் பொருளியல்புகளை நிலைநாட்டியது போல, இன்பம் என்பதை அடிப்படையாகக் கொண்டு மெய்ப் பொருளியலை வரையறைப்படுத்தியும், அடைய முயல்வாருக்கு அடையும் நெறியை எடுத்துக்காட்டியும் தொண்டு செய்தவரே நம்பியாரூரர் என்று கொள்ளும்வகையில் அவருடைய செய்திகள் அமைந்திருந்தன என்பதை உணருதல் வேண்டும்.

## *தடுத்தாட் கொள்ளல்*

திருக்கயிலையில் ஆலாலசுந்தரராக இருந்தபோது மாதர்மேல் மனம்வைத்த காரணத்துக்காக இப்புவிமிசைத் தோற்றம் பெற அனுப்பப் பெறுகின்றார். அப்போது அவர்,

"செய்ய சேவடி நீங்கும் சிறுமையேன்
மையல் மானுடமாய் மயங்கும் வழி
ஐயனே தடுத்து ஆண்டு அருள்செய்" (பெ. 38)

என்று வேண்டுகின்ருர். மையல் மானுடமாய் மயங்குதல் என்றும் பந்த மானுடப் பாற்படுதல் என்றும் இருதொடர்கள் காணப் பெறு கின்றன. இவ்வகையில் மயங்காமல் தடுத்து ஆட்கொள்ள வேண் டும் என்று கேட்டுக் கொள்கிருர். மானுடப்பாற்படுதல், மானுட மாய் மயங்குதல் என்பதே இப்பூவுலகத்தில் அமைந்த குறை எனக் கருதி, அக்குறையில் நான் விழாதவாறு தடுத்து ஆட்கொள்ள வேண்டும் என்று வேண்டுகின்ருர். செய்ய சேவடி நீங்கும் சிறுமை யேன், மையல் மானுடமாய் மயங்கும் வழிநேரும்போது தடுத்தாட் கொள்ள வேண்டும் என்ற கருத்தை நுட்பமாக ஆராய்ந்தால் ஓர் உண்மை புலனும். இறைவன் திருவடியை நீங்கியிருத்தலாகிய சிறு மையையும், மானிடராய் மையல் கொண்டு நிற்கும் மயக்கத்தையும் இணைத்துக் காட்டுகின்ருர். திருக்கயிலையில் வாழும் மக்கள் அமைப் பும் பூவுலகில் வாழும் மக்கள் அமைப்பும் அமைப்பு நிலையில் (Structure) ஒன்றே. திருக்கயிலையில் சிவபெருமானைக் காணும் போது தேவதேவன் என்ற உணர்வு எழுகிறது. பூவுலக மக்களைக் காணும் போது மனித இனத்தைச் சார்ந்தவர்கள் என்ற எண்ணம் எழுகிறது. அமைப்பினுல் ஒருதன்மை கொண்ட பொருள்கள் இடவேறுபாடு காரணமாக வெவ்வேறு பொருள்களாகக் காணப் பெறுகின்றன. இவ்வாறு காணப்பெறுதல் குறை என்பதாகக் கொள்ள முடியாது. எனினும், ஆலாலசுந்தரரைப் பொறுத்தவரையில் அது குறையாகக் காணப் பெறுகிறது.

ஞானவாரமுதமுண்ட பிள்ளையார் அழுது ஞானப்பால் அருந்தினு ரெனின், அவர் உலகத்துயிர்களிடத்திலெல்லாம் சிவம் விளங்கி, அருளமுதம் பொங்கி வழியவேண்டும் என்ற கருத்தை அடிப்படை யாகக் கொண்டதே. அப்பரடிகளோ கைத்திருத்தொண்டினுலேயே உலகை நல்வழிப்படுத்த வந்த ஞானி. உலகமக்களெல்லாம் செய்ய வேண்டிய தொண்டினைத் தாமொருவராகவே செய்து திருத் தொண்டுக்கு ஆணியாக நின்றவர். முன்னவரின் திருப்பதிகங்களை விடப் பின்னவரின்திருப்பதிகங்களில்உருக்கம் மிகுந்திருக்கும். கசிவு அதிகமாக இருக்கும் ஆலால சுந்தரரோ தொண்டு நெறியில் முன் னின்ற இருவருக்கும் குறைந்தவரல்லர். திருக்கயிலையில் சிவபெரு மானுக்குத் திருநீற்றுத் தொண்டும், திருமலர்த் தொண்டும் செய்து சிறந்தவர். அனைத்துத் தேவர்களும் அஞ்சியோடுவதற்குக் காரண மாக இருந்த நஞ்சினை—ஆலகால நஞ்சினை நேர்நின்று, திரட்டி யெடுத்து, உருண்டையாக அமைத்துக் கொண்டுவந்து கொடுத்த ஆண்மையாளர். தொண்டினுல் உழைத்து, உழைத்து உரமேறிய கைகளாதலின் கறைபடாத கையுடையவர். "மேரு வரையின் மேம் பட்ட தவத்தான்" என்று சிவபெருமானுலேயே பாராட்டப் பெற்ற பெருமையுடையவர். இத்தகைய தவத்தாராகிய ஆலால சுந்தரர்

உலகத்துயிர்களுக்காகக் கேட்ட வரமே ''தடுத்தாட் கொள்க'' என்பது.

மக்கள் உருவில் மாக்கள் அல்லது விலங்குகள் வாழ்வதுண்டு, மக்களுருவில் மக்கள் வாழ்வதுண்டு. மக்களுருவில் பரம்பொருள் வருவதுண்டு. மக்களுருவத்தில் மாக்களை நினைவுபடுத்தாமல் மக்களாகவே வாழ்வது முறைமையான அறமுறை திறம்பாத வாழ்வு தான். ஆனல் மக்களுருவில் தான் இறைவனும் விளங்குகின்ருன். திருஞானசம்பந்தர் தாவில் சராசரங்களி லெல்லாம் சிவம் பெருக வேண்டும் என்று பாடுபட்டார். உலகத்துயிர்களுள் சிவம் நிலை பெற்றுள்ளது; ஆயினும் அச்சிவம் விளக்கமாகத் தோற்றமளிக்க வேண்டும் என்று பாடுபட்டார். திருநாவுக்கரசரோ திருத்தொண்டு செய்து, சிவனுறையும் இடமாகத் தம்மை மாற்றிக் கொள்ள வேண் டும் என்று பாடுபட்டார்.

உயிர்களில் சிவம் விளங்க வேண்டும் என்பது ஒருவகை. உயிர்கள் தம்மைச் சிவம் உறையும் இடங்களாக அமைத்து, தொழுது, தொண்டாற்றி, சிவனுறையும் தலங்களாகவே மாற்றிக் கொள்ள வேண்டும் என்பதாகக் கருதுவது இரண்டாம் வகை. ஆலால சுந்தரர் கேட்பது மூன்ரும் வகை. பூவுலகில் மக்களுடம்பில் உள்ளார்ந்த பொருளாய் அமைந்த சிவம் விளங்கித் தோன்றுவது ஒருவகை. சிற்சில சமயங்களில் சிவபரம்பொருளே மக்களுடம்பில் வந்துதோன்றினலும், பூவுலக மக்கள் மக்களுருவில் வந்து நின்ற சிவபரம் பொருளையும் மக்களாகவே கண்டுவிடுகிற மயக்கவுணர்வு மக்களினத்துக்கு உண்டு என்று கருதுகின்ருர். உயிர்களில் சிவம் விளங்கித் தோன்றினலும், உயிர்கள் தம்மைச் சிவனுறையும் இடங் களாக அமைத்துக் கொண்டாலும் உயிரும் சிவமும் என்ற வேறு பாடு இருக்கத்தான் செய்கிறது. இத்தகைய சிறுமையோடு, சிவமே வந்தாலும் மக்களாகக் கருதியே பார்க்கும் மயக்கமும் இருக்கிறது. இத்தகைய மயக்கமே அனைத்துக் குற்றங்களுக்கும் மூலமாய் அமைந்து விடுகிறது என்ற காரணத்தால் அவர் கேட்கும் வரம் கீழ்க்கண்டவாறு அமைகிறது.

ஐயனே, பூவுலகில் எப்பொருளைப் பார்த்தாலும் சிவபரம் பொரு ளாகவே பார்த்துத் தொண்டாற்றும் பேறு எனக்கு அமையவேண் டும்; மாக்களாயினும், மக்களாயினும் அவ்வப் பொருள்களாகவே யான் காணுவது மூவுலகத்து நியதியில் குறையற்றதாயினும் என்னைப் பொறுத்தவரையில் குறையுடையதே! எனவே, எப்பொருளையும் அவ்வப்பொருளாகக் கருதும் மயக்கம் நீங்கி, அப்பொருள்களுக்கு மூலமாகிய பெரும்பொருளாகவே யான் கண்டு வணங்கித் தொண் டாற்றும் வகையில் என் காட்சி அமைய வேண்டும் ; தலைமைபற்றிக் காணும் காட்சி அமைய வேண்டுமேயன்றிப் பன்மைபற்றிய காட்சி அமையக் கூடாது என்பதே அவர் கேட்ட வரத்தின் அடிப்படை. எனவே, அனைத்துப் பொருள்களும் சிவமேயாகக் காணும் காட்சிய மைய வேண்டும் எனவேண்டுகிருர். சிவமே மனிதவடிவில் வந்தாலும்

இத்தகைய காட்சியால் உண்மை தெளியலாம்; குறை நேராது என்று கருதுகின்றார். இதுவே, அனைத்துயிர்களுக்குமாக, காணும் பொருளெல்லாம் சிவமேயாகக் காணும் நிலைபெறவேண்டும் என்று வேண்டுகின்ற வரமாக அமைந்தது. எனவே தடுத்து ஆட்கொள்ளுதல் என்பது உலகியற்கையின் வண்ணம் மக்கள் முதலியவாக நான் பார்க்க முற்படும்போது, சிவமாகக் காணும் காட்சியை எனக்குக் கொடுத்து, இயல்பாகச் செல்லும் பார்வையைத் தடுத்து, நின் அடிமையாக்கி, என்னைக் காத்தல் வேண்டும் என்று வேண்டுகோள் விடுக்கிறார். இதனாலேயே அவர் பரவைநாச்சியாரைக் கண்டு காதலித்தபோது,

"சிவனருளோ"

என்றும், சங்கிலி நாச்சியாரைக் கண்டு மயங்கிய காலத்தே

"தன்னார் அருளால் வரும் பேறு"

என்றும் கண்டார் என்று சேக்கிழார் கூறுகின்றார்.

உயிர்களையெல்லாம் சிவமாக—மக்களையெல்லாம் சிவமாகக் காணும்காட்சி உயர்ந்ததேயாயினும், மக்களை மக்களாக, மானிடரை மானிடமாகக் காணும் காட்சி எவ்வாறு மயக்கக் காட்சியாக அமையும்? மானிடமாய் மயங்குதல் என்று குறிப்பிட்டருளுகின்றார், ஆலால சுந்தரர். மக்களுடம்பில் விலங்குணர்ச்சியானது செயற்படும்போது தோற்றத்தால் மக்களெனவும் உணர்ச்சிச் செயற்பாட்டினால் மாக்களெனவும் இணைத்தே கருதுதல் இயல்பு. ஆனால் மக்களை மக்களாகக் காணும்போது அம்மக்களிடத்தே இயல்பாகவுள்ள சிவமாம் பொருள் முழுமையாகப் புறக்கணிக்கப் பெற்றேவிடுகிறது. மக்கள் தன்மையும் சிவமாம் தன்மையும் ஆய இரண்டையும் இணைத்துக் காணவேண்டியதே உண்மைக் காட்சி. தலைமைத் தன்மையுடைய ஒருகூறு புறக்கணிக்கப் பெற்றமைக்கு மயக்கமே காரணம் எனக் கருதுகிறார் ஆலால சுந்தரர். எனவே, யாண்டும் யாவும் சிவமே காணப் பெறல் வேண்டும் என்பது ஆலாலசுந்தரரின் உட்கிடை. சிவமேயாய் அனைத்தும் தோற்றம் பெறும் போது, காணப் பெறும் பொருளெல்லாவற்றிற்கும் ஊறு செய்யாத தன்மையும், அடிமை செய்யும் பெருந்தகைமையும் எளிதில் கைவரப் பெறும் என்ற காரணம் பற்றியே தடுத்து ஆட்கொள்ள வேண்டும் என்று வேண்டுகின்றார்.

### வன்தொண்டர்

ஆலால சுந்தரர் இவ்வுலகில் திருநாவலூரிற் பிறந்தபின் நம்பியாரூரர் என அழைக்கப் பெறுகிறார். திருவெண்ணெய் நல்லூர்ப் பித்தனுக்கு அடிமையாகிறார். இந்நிகழ்ச்சிக்குப்பின், இவருக்குக் காட்சி நல்கி, இவருக்குள்ள பணிகளைக் கட்டளையிடும் இறைவன்,

"மற்றுநீ வன்மை பேசி வன்தொண்டன்
என்னும் நாமம் பெற்றனை"

என்று குறிப்பிடுகின்றான். வன்மை பேசிய காரணத்தால் வன் தொண்டன் ஆனார் என்னில் அது அவருக்கு ஒரு குறையே! வன்மை பேசியதுண்டாயின் அதற்கென அவரை "வல்வாயன்" எனக் குறித்தல் முறையாம். அவ்வாறின்றி "வன்தொண்டன்" என்பது எவ்வாறு பொருந்தும்! வன்மை பேசியது குற்றம் என்னின், நம்பியா ரூரரே

"தன்மையினால் அடியேனைத் தாம் ஆட்கொண்டநாள் சபைமுன்
வன்மைகள் பேசிட வன்தொண்டன் என்பதோர் வாழ்வு தந்தார்"

என்று குறிப்பிடுவதால் இறைவன் வன்தொண்டன் எனத் தன்னை ஆக்கிய நிலையை வாழ்வு தந்த நிலை என எண்ணிப் போற்றுகின்றார்.

நம்பியாரூரர் தம்மை ஆட்கொண்ட செயலைக் குறிக்கும் போதெல்லாம் வெண்ணெய் நல்லூரைக் குறிக்காமல் கூறுவதில்லை. "ஆவணம் காட்டி" என்ற சொற்களையும் குறிப்பிடுகின்றார். ஒரே ஒரு இடத்தில் மட்டும் "மண்ணின் மேல் மயங்கிக் கிடப்பேனை வலிய வந்து எனை ஆண்டு கொண்டானே" என்று குறிப்பிடுகின்றார். இக் குறிப்புக்களுக்கெல்லாம் அப்பாற்பட்டதாக ஒரே ஒரு சான்றுதான் கிடைக்கிறது. அச்சான்றுதான் "வன்மைகள் பேசிட" என்ற குறிப்பை எடுத்து மொழிகிறது. நுட்பமாக நோக்கினால் **ஆட்கொண்ட செயல்வேறு; தடுத்தாட்கொண்ட செயல்வேறு** என வேறுபடுத்தி உணரலாம். சபைமுன் வன்மைகள் பேசிட வன்தொண்டனும் வாழ்வு தந்த நிலையே ஆட்கொண்டநிலை. அது ஆலாலசுந்தரராக அமைந்திருந்த காலத்தில் நடைபெற்றதாகலாம். (இது மேலும் ஆய்வதற்குரியது) எவ்வாறாயினும், வன்தொண்டராக நம்பியாரூரர் எவ்வாறு விளங்குகிறார் என்பதையும் மேலே குறிப்பிடப்பெற்ற கருத்தின் உண்மை என்ன என்பதையும் கீழ்வரும் **நால்வர் நான்மணி மாலைச்** செய்யுளால் உணரலாம்.

"செல்வ நல் ஒற்றி யூரன் செய்ய சங்கிலியால் ஆர்த்து
மல்லலம் பரவை தன்னுள் மாழ்குற அமிழ்த்து மேனும்
அல்லும் நண்பகலும் நீங்காது அரனடிக்கு அன்பு செய்து
நல்ல இன்பு அடைந்திருப்பன் நம்பி ஆரூரன் தானே"

என்ற சிவப்பிரகாச அடிகளின் நால்வர் நான்மணிமாலைச் செய்யுளில் வன்தொண்டின் இயல்பு நுட்பமாக விரித்துக் காட்டப் பெறுகிறது. திருவொற்றியூர்ப் பெருமானே நம்பியாரூரரைச் சங்கிலியால் இழுத்துக்கட்டி, பரவை நாச்சியார் எனப்பெறும் கடலினுள் ஆழ்ந்து அமிழுமாறு **அமிழ்த்துமாயினும்**, நம்பியாரூரன் அவ னடிக்கு அன்பு செய்வதிலும், அதன் மூலம் நல்ல இன்பம் அடை தலிலும் மாறான் என்ற கருத்தை வெளிப்படுத்துகிறார். அதையே "**நல்ல இன்பு**" என்று குறிப்பிட்டுக் காட்டுகின்றார் சிவப்பிரகாசர். சபைமுன் வன்மை பேசியது என்பதைத் திருவெண்ணெய் நல்லூர்ச் சபையில் நாம் காணமுடியவில்லை. எனினும், சிவப்பிரகாசர் கூற்றி லிருந்து, இறைவனே வலிந்து சென்று நம்பியாரூரரைத் தொண்டுக்கு

மாறுன சூழ்நிலைகளைத் தோற்றுவித்து, அச்சூழ்நிலைகளிலேயே அவரை ஆழ்த்தி அமுக்கினாலும், அரனடிக்கு அன்பு செய்வதில், அவரை மாற்ற முடியாது என்றும் அத்தொண்டின் மூலமாகவே நல்ல இன்பத்தை அடையும் தன்மை உடையவரே நம்பியாரூரர் என்பதை நாம் துணிந்து தெளியலாம்.

## தம்பிரான் தோழராதல்

நம்பியாரூரர் திருவெண்ணெய் நல்லூரிலிருந்து புறப்பட்டுத் தலயாத்திரையாய்ச் சென்று தில்லையை அடைகிறார். "திருவாரூரில் நம்பால் வருக" என்ற அசரீரிவாக்கு எழுந்தது. அதனைமேற் கொண்டு திருவாரூர் செல்லுகின்றார். திருவாரூர் எல்லையை அடைந்த அவ்வளவிலேயே "நம் ஆரூரனாகிய வன்தொண்டன் நாம் அழைக்க இங்கே வருகின்றான்; நீங்கள் மகிழ்ந்து அவனை எதிர்கொண் டழைத்து வருக" எனக் கனவில் தோன்றி, அடியவர்களுக்குக் கட்டளையிடுகின்றார். திருக்கோயிலின் உள்வந்து பதிகம் பாடி வணங்கியதும், "தோழமையாக உமக்கு நம்மைத் தந்தனம்" என்று வான்வழிக்குரல் ஒன்று கூறிற்று. அன்றுமுதல் தம்பிரான் தோழர் ஆனார். இந்நிகழ்ச்சியை மதிப்பீடு செய்யும் நம்பியாரூரர்,

"தன்னைத் தோழமையருளித் தொண்டனேன் செய்த
துரிசுகள் பொறுக்கும் நாதனை"

என்று குறிப்பிடுவதன் மூலம் தோழனும் தன்மையால் குற்றங்கள் செய்ய நேர்ந்தது என்று குறிப்பிடுகிறார். தோழராந் தன்மையிலும் வன்தொண்டராந் தன்மையே தமக்கு இறைவன் அளித்த பெரு வாழ்வு என்று நம்பியாரூரர் மதிப்பீடு செய்வதை அறியலாம்.

## தொண்டர்க்குத் தொண்டராதல்

திருவாரூர்த் தேவாசிரிய மண்டபத்து அடியவரை வணங்கி நின்ற நிலையில் "அடியார்க்கும் அடியேன்" என்று பாடுகிறார். திருத் தொண்டர்களின் பெருமையை உலகினர்க்கு உணர்த்தவே ஆலால சுந்தரர் இந்நிலவுலகிற்குவந்து, நம்பியாரூரராகத் தோற்றம் பெற்றார் என்ற கருத்து ஆன்றோர்களால் ஒப்ப முடிந்த ஒன்று. திருஞான சம்பந்தரும் திருநாவுக்கரசரும் நேரே இறைவனுக்கு அடியரானார் என்றும் நம்பியாரூரர் இறைவன் அடியவர்களுக்கு அடியவர் ஆனார் என்றும் வரன்முறை அமைத்துக் கூறும் மரபு உண்டு. திருஞானசம் பந்தரும் திருநாவுக்கரசரும் தம்காலத்தில் வாழ்ந்த அடியவர்களைத் தத்தம் திருப்பதிகங்களிற் சிறப்பித்துப் பாடி, அவர்கள் பெருமையும் அவர்களால் வணங்கப் பெறும் இறைவன் பெருமையும் இன்னன வென மக்களுக்கு உணர்த்தியவர்களே. ஆயினும் நம்பியாரூரர் சிவபெருமானெனும் பரம்பொருளை முன்னிட்டுக் கொண்டே, அனைத்துக் காரியங்களிலும் ஈடுபடும் கொள்கையுடையவரென் பதை நாம் காணலாம்.

### ஒரு மதிப்பீடு

மேலே கூறப்பெற்ற நான்கு வகையான அருளிப்பாடுகளின் அடிப்படையில், நம்பியாரூரர் இவ்வுலகில் மேற்கொண்டு செய் முறைப் படுத்திக்காட்டிய கொள்கையை நாம் திட்பமுற உணர்ந்து தெளியலாம்.

திருக்கயிலேயில் மாதர்மேல் மனம் போக்கினுர் என்பது அவரிடம் சுட்டப்பெற்ற குற்றம். "ஈசர் அருளென, திருத்தொண்டத் தொகை தரப் போதுவான் மாதர்மேல் மனம் போக்கினுன்" என்பது தெய்வச் சேக்கிழார்வாக்கு. மாதர்மேல் மனம் போக்குதற்குக் காரணம் திருவருளா அல்லது ஆலால சுந்தரரின் முன்வினையா என்பதை அறிஞர்கள் நன்கு சிந்தித்தல் வேண்டும். எவ்வாருயினும், இந்நிகழ்ச்சியைக் காரணமாக வைத்து, வன்தொண்டர் ஆனுர். இறைவனும் தம்பிரான் தோழனுக ஆக்குகின்ருர்; சங்கிலிபால் தொடக்குண்ணவும், பரவைபால் அழுத்தவும் செய்யப் பெறுகிருர். எத்துணைப் பிழைசெய்தாலும் **திருவடிக்குப் பிழையேன்** என்று அறுதியிட்டுக் கூறுகின்ருர்.

> "அழுக்கு மெய்கொ டுன் திருவடியடைந்தேன்
> அதுவும் நான் படற் பாலதொன்ருனல்
> பிழுக்கை வாரியும் பால்கொள்வர் அடிகேள்
> பிழைப்பனகிலும் திருவடிப் பிழையேன்
> வழுக்கி வீழினும் திருப்பெயரல்லால்
> மற்றுநான் அறியேன் மறுமாற்றம்
> ஒழுக்க என்கணுக்கு ஒரு மருந்து உரையாய்
> ஒற்றியூரெனும் ஊர் உறைவானே" (7-54-1)

என்ற நம்பியாரூரர் திருவாக்கின் மூலம், எத்துணை இடர்களுக்குட் படுத்தினும்—இறைவனே வலிந்து உட்புகுத்தினும், அவனையன்றி வேறு எதையும் காணுத, பேசாத திருத்தொண்டு ஒன்றைப்பேணியே நல்ல இன்பம் துய்ப்பது என்பதை வாழ்ந்து காட்டிய அருளாளர் என்று நம்பியாரூரரைக் கொள்ளலாம். இவ்வகையில் நம்பியாரூரர்,

(1) தடைகள் நேர்ந்தபோதிலும் தொண்டில் வலிமையை மேற்கொளல்.

(2) சிவனுகவே, அருளாகவே உலகை—மக்களேக் காணுதல்; தொண்டு செய்தல்.

(3) தொண்டு செய்தலிலேயே சிவனுக்கு ஆட்பட்டு நல்ல இன்பம் துய்த்தல்.

என்ற மூன்று நெறிகளேயும் கொண்டு பயின்ற குணமுடையவராகத் திகழ்ந்தார் எனக் கொள்ளலாம்.

### நல்ல இன்பம்

அறம், பொருள், இன்பம் என்ற மூன்றனுள் முன்நின்ற இரண்டையும் திருஞானசம்பந்தரும் திருநாவுக்கரசரும் விளக்கிநின்றமை போலவே உண்மை இன்பத்தை—நல்ல இன்பத்தை இது என வரையறுத்தும் வாழ்ந்து காட்டியும் உலகிற்கு உணர்த்திய பெருந்தகையே நம்பியாரூரர் எனக்கொள்ளல் வேண்டும்.

எல்லாப் பொருள்களையும் சிவமாகக் காணும் நெறியை விரும்பிய நம்பியாரூரர் அப்பொருள்களைச் சிவமெனவே கொண்டு அடிமை பேணித்தொண்டு செய்ய முற்பட்டு, அவ்வாறு செய்வதன் மூலம் இன்பம் அடைதலே **நல்ல இன்பம்** எனக் கொண்டு வாழ்ந்தாராகக் கொள்ளலாம்.

### சிவயோகி

நம்பியாரூரர் இவ்வுலகில் வாழ்ந்த நாட்களிலெல்லாம் சிவயோகியாக நின்றே இவ்வுலகப் பொருள்களில் ஈடுபட்டவர். பெருமிழலைக் குறும்ப நாயனார் என்ற பரமயோகி நம்பியாரூரரையே தம் திருக்கண்களாகக் கொண்டு வாழ்ந்து வந்தவர்.

பெருமிழலைக் குறும்பரெனும் பரமயோகி
　　பெரிதுவந்து உன் திருவடித் தாமரையைப் போற்றி
விரைமலர்தூய் வந்தனை செய்கின்றா ரென்றால்
　　விளங்கிழையார் இருவரொடும் முயங்கலாமோ?

எனச் சிவப்பிரகாசர் தம் **நால்வர் நான்மணிமாலையிற்** குறிப்பிடுவாராயினர். அவர் இவ்வுலகில் பரவைநாச்சியாருடன் இணைந்து வாழ்ந்த நிலையை விளக்கப் புகுந்த தெய்வச் சேக்கிழார்,

தென்னாவலூர் மன்னன் தேவர்பிரான் திருவருளால்
மின்னாருங் கொடி மருங்குல் பரவையெனும் மெல்லியல்தன்
பொன்னாரும் முலை ஓங்கல் புணர் குவடே சார்வாகப்
பன்னாளும் *பயில் யோக பரம்பரையின்* விரும்பினார்

என்று (பெ. 327) உரைக்குமாற்றால் தெளியலாம்.

### திருநொடித்தான் மலைத் திருப்பதிகம்

நம்பியாரூரர் வெள்ளையானையின்மேல் இவர்ந்து கயிலைப் பதிகம் பாடிக்கொண்டே செல்கிறார். பதிகம் முடிந்த இடம் திருக்கயிலை. பதிகத்துக்குரிய நாயகரோ திருவஞ்சைக்களத்து அப்பர். இவ்வகையில் மண்ணுலகையும் திருக்கயிலையையும் இணைத்துக் கண்ட சிவயோகியாரே நம்பியாரூரர்.

திருநொடித்தான் மலைத் திருப்பதிகம் முழுவதும் பல அனுபவ உண்மைகளை விளக்கியருளும் திருப்பதிகமாய் விளங்குகிறது. அதனுள் விளங்கும் சில தொடர்கள் தத்துவ விளக்கம் தருபவைகளாக அமைந்துள்ளன.

"ஆனை உரித்தவன் எனக்கு வெள்ளானை அருள்புரிந்தான்"

"ஊனுயிர் வேறு செய்தான்"

"வெள்ளையானையின்மேல் என்னுடல் காட்டுவித்தான்"

"துஞ்சுதல் மாற்றுவித்துத் தொண்டனேன் பரம்
அல்லது ஒரு வெஞ்சின ஆனை தந்தான்"

மேலே குறிப்பிடப் பெற்ற திருப்பதிகத் திருவாக்குக்களிலிருந்து சில உண்மைகளைத் தெளியலாம்.

கரிய யானையை உரித்தவன்; வெள்ளை யானையை அருள் செய்தான் என்பதால் கரிய யானை அறியாமைக்கும் வெள்ளையானை அறிவுடைமையாகிய ஞானத்துக்கும் விளக்கப் பொருளாக அமைந்தன எனக்கொள்ளலாம்.

"ஊன் உயிர் வேறு செய்தான்" என்பதால் ஊன் எனப்பெறும் உடம்பையும் உயிரையும் வேறு செய்தான் என்று கொண்டு சிவமாகவே—ஒளியாகவே விளங்கும் நிலையை உண்டாக்கினான் என்பது பொருளாம் வெள்ளையானையின்மேல் என்னுடல் காட்டு வித்தான் என்பதால் நம்பியாரூரர் ஒளிப்பொருளாக விளங்கினும் உருவமெல்லாம் சிவப்பிழம்பாகவே ஒளி செய்யுமாறு அமைத்துக் காட்டினான் என்பதாம். துஞ்சுதல் மாற்றுவித்தான் என்பதால் சாதல் —இறப்பு என்பதை மாற்றி என்றும் வாழ்வதாகிய—இறப்பின்றி வாழ் வதாகிய—சாகாக்கலையுடன் வாழ்வதாகிய வாழ்வைத் தந்தான் என்று குறிப்பிட்டருளுகின்றார். இத்துணை நன்மைகளை இறைவன் செய்வதற்குக் காரணமாக இருந்த செயலாக நம்பியாரூரர் செய்தது என்ன?

ஊனை உயிர் வெருட்டி ஒள்ளியானை நினைத்திருந்தேன் என்று குறிப்பிடுகின்றார்.

ஊன்—உடல்; உயிர்—அறிவு. உடல் என்பது மாயையின் காரியப்பொருளாய் விளைந்தது. மாயை என்று சொல்லாது 'ஊன்' என்று குறிப்பிட்டுக் காட்டியதன் நோக்கம் ஊனைப்பற்றியுள்ள குறைகள் மூன்று. உடல்—மாயை; மாயை தொழிற்படுவது கன்ம வினையின் அடிப்படையில்; அது வந்ததற்குக் காரணம் ஆணவம் எனவே மூன்றையும் இணைத்துக் குறிப்பிடவே ஊன் என்றார்.

"ஊனை வெருட்டி" என்பதால் அசத்தாகிய ஊன் இறைவனைக் காண உதவாதாகலின் அதை அறிவினால் வெருளச் செய்து தனித்து இருக்கப்பண்ணினேன். சுருங்கக் கூறின் ஞானவாள் தன்னால் கூட்டில் செயலேதும் நடைபெறாதவாறு தடைசெய்து—வெருளவைத் திருந்தேன். ஏனெனில், உடலானது அசத்து; அது சத்துப் பொருளாகிய இறைவனை அறியாது. அறியாத அப்பொருள் துணை கொண்டு சத்துப்பொருளாகிய இறைவனை அறிய முடியாது ஆகலின் தனித்து நிற்க வைத்தேன்.

அடுத்தது உயிர். உயிர் அறிவுப்பொருள். எனினும் தானே அறியும் நிலை அதற்கு இல்லை. சார்ந்து சார்ந்து அறியும் இயல்புடையது. அசத்தைச் சார்ந்தபோது அசத்தாய் நின்று அறியும்; சத்துப் பொருளைச் சார்ந்தபோது சத்தாய் நின்று அறியும். ஊனைத்தனித்து நிறுத்தியதுபோல உயிரையும் தனித்து நிறுத்தல் வேண்டும். தனித்து நிறுத்துதலாவது கருவி கரணங்களைச் சேராது நிறுத்துதல். அவ்வாறு அதனை வெருளவைத்து நிறுத்தினேன். பின்னர் அவ்வுயிரை— உயிரின் இயல்பாம் அறிவை உயர்பொருளோடு இணைத்தேன். உயர் பொருளை "ஒள்ளியான்" என்றார். (1) ஒண்மை—தான் ஒளிப் பொருளாக இருந்து தன்னைச் சார்ந்த பொருள்களையெல்லாம் ஒளியுடையதாக ஆக்கும் தன்மை. (2) ஒண்மை—ஒட்பம். மலர்தலும் கூம்புதலும் இல்லாததாய், பொதுமை தழுவியதாய் அமைந்த அறிவு. (3) ஒண்மை—மூலமாக அமைந்த நுட்பம். அனைத்துப் பொருளுக்கும் மூலமாய்—கருவாய் அவ்வப்பொருளும் நின்று நிலைபெறுவதற்குரிய அடிப்படை மூலப் பொருளாய் நின்ற தன்மை. இம் மூன்றையும் இணைத்தால் ஒளி, அறிவு, மூலப்பொருள் ஆம் அருள் என்ற மும்மைக் குணங்களைக் கொண்ட பொருளாக அமையும்.

அத்தகைய பொருளோடு உயிரைச் சார்த்தி, அப்பொருளையே நினைத்திருந்தேன் என்று கூறுகின்றார்.

மேலே குறிப்பிடப் பெற்ற கருத்துக்களைத் தொகுத்து மெய்ப் பொருளியல் கருத்துக்களாக வகைப்படுத்துவோமானால் கீழ்க்கண்ட கருத்துக்கள் வெளியாகும்.

அசத்துப் பொருள் சத்துப் பொருளை அறியாது.

சத்துப் பொருள் ஒண்மைப் பொருளாய்—ஒள்ளியானாய் விளங்குவது.

சத்துப்பொருளை நேர்நின்று அறியும் ஆற்றல் எப்பொருளுக்கும் இல்லை.

சத்துப் பொருளோடு இணைத்து நிறுத்தப் பெற்ற உயிரே சத்துப் பொருளை அறியும் இயல்பினது.

சத்து, அசத்து ஆகிய இரண்டைப் பற்றிய அறிவும் உயிருக்கு உண்டு.

அசத்தாகிய கருவிகரணங்களும் உயிரல்ல; சத்துப் பொருளாகிய ஒள்ளியானும் உயிரன்று; இரண்டற்கும் வேறுபட்டதே உயிர்.

### *மெய்கண்டாரின் நூற்பா*

மேலே குறிப்பிடப் பெற்ற கருத்துக்களை இணைத்த நூற்பாவாக மெய்கண்டார் சிவஞானபோத ஏழாம் நூற்பாவை அமைத்துக் காட்டுகின்றார்.

"யாவையும் சூனியம் சத்து எதிர் ஆகலின்
சத்தே அறியாது அசத்து இலது அறியாது
இருதிறன் அறிவுளது இரண்டலா ஆன்மா"

என்பது அந்நூற்பா.

## *முடிப்புரை*

அறம், பொருள், இன்பம் என்ற முக்கூற்று உறுதிப் பொருள் களுள் மூன்ருவதாகிய 'இன்பம்' என்ற உறுதிப்பொருளைச் சிவயோ கத்தின் மூலம் இவ்வுலகில் அமைத்துக் காட்டிய பெருந்தகையே நம்பியாரூரர். அவர்தம் வாழ்வில் அமைந்த நால்வகை அருளிப் பாட்டு நிகழ்ச்சிகளும் ஆய்ந்து உணரவேண்டியவை. அவர் இறுதிப் பதிகமாகிய திருநொடித்தான்மலைப் பதிகத்தைத் திருஅஞ்சைக் களத்தில் பாட எடுத்து, திருநொடித்தான்மலை (திருக்கயிலை)யில் முடித்து, பின்னரும் அதை அஞ்சைக்களத்து அப்பருக்கே உரிமை யாக்கி அனுப்புகின்ருர். அவருடைய திருப்பதிகம் முழுவதிலும் இம்மையும் அம்மையும், குற்றமும் குணமும் கலந்தே அமைந் திருப்பதைக் காணலாம்.

"ஊனை உயிர் வெருட்டி ஒள்ளியானை நினைத்திருந்தேன்"

என்ற தொடரே மெய்கண்டாரின் சிவஞானபோத ஏழாம் நூற்பா வுக்கு உரிய அருட்சிந்தனை முழுமையையும் விளைவித்தது எனக் கொள்ளலாம். இவ்வகையில் இத்தொடரே உயிர்களுக்குரிய வழியை —சாதனத்தை அமைத்துக் கொடுப்பதாகவும் அமைந்தது எனக் கொள்ள வேண்டும்.

இனி, நம்பியாரூரர் மேற்கொள்ளும் ஓர் உண்மையை நாம் நினைத்தல் வேண்டும்.

குண்டையூர்க் கிழவரிடம் நெல் பெற்றது முதலாக, அதனை எடுத்து வர ஆள் வேண்டும் எனக் கேட்டது போன்ற செயல்களை யெல்லாம் நம்பியாரூரர் இறைவன் தரவே பெற வேண்டும் என விரும்புகிருர். சிவனைத் தவிர வேறு எப்பொருளும் தம் கண்ணுக்குத் தோன்றக் கூடாது என்றும், உலகப் பொருள் எதுவாக இருப்பினும் அது சிவமாகவே காணப்பெற வேண்டும் என்பதும், அவன் மூல மாகவே எப்பொருளும் வழங்கப் பெற்று, அவன் தந்த பிரசாத மாகவே அனைத்துப் பொருள்களும் அனுபவிக்கப் பெறல் வேண்டும் என்பதும் நம்பியாரூரர் வாழ்வில் அமைந்த நுட்பம். இதனுலேயே, சேரரிடம் பெற்ற பொருளையும் இறைவன் பூதங்களால் கவர்ந்து கொள்ளச் செய்தபின், இறைவனுலேயே கொடுக்கப் பெற்றுத் துய்க்கிருர் என்ற நுட்பம் உணர்தல் வேண்டும். இக் கருத்தின் அடிப்படையிலேயே தூது செல்லுதலாகிய நிகழ்ச்சியும் அமைகிறது என்பதே அவர் வாழ்வின் அடிப்படைக் கருவூலம் எனக் கருத வேண்டும். அவ்வாறு அவன் கொடுத்தாலேதான்

துய்ப்பேன் என்ற சிவயோகியாக வாழ்ந்தவர் நம்பியாரூரர். அதனுலேயே, இறைவனும் தாமே தம்மை முன்னிறுத்திக் கொண்டு பற்பல அற்புதங்களைச் செய்து காட்டுகிருன் என்றும் கொள்ளுதல் வேண்டும். இதனைச் சிவப்பிரகாசர் தம் *நால்வர் நான் மணிமாலையில்*, நோக்குறு நுதலோன் நம்பியாரூரரிடை அமைத்துக் கொண்ட விருப்பினுல், அவனே சில செயல்களைச் செய்தபோது, கோக்கலிக்காமர் வயிற்றிடைக் குத்திக் கொள்வதில் பொருள் இல்லை என்பதுபடப் பேசுகிருர். எனினும், இறைவன் தரவே துய்த்தல் என்ற வாழ்வியல் நுட்பத்தைத் திருவருட்செயலாக இவ்வுலகில் உணர்த்திக் காட்ட எழுந்தருளிய பெருந்தகையே நம்பியாரூரர் எனக் கொள்ள வேண்டும்.

# 10. தம்முதல் குரு

## முன்னுரை

அறம், பொருள் இன்பம் என்ற முத்திறத்தாலும் உண்மைப் பொருளை உணர்த்திய அருளாளர்களாகத் திருஞானசம்பந்தரும், திருநாவுக்கரசரும், தம்பிரான் தோழரும் அமைந்து திருத்தொண் டாற்றி உலகத்துயிர்களை நன்னெறிப்படுத்தினுர்கள் என்பதை முன் னுள்ள கட்டுரைகளிற் காணமுடிந்தது. இம்மூவரும் மூன்று கொள் கைகளைக் கந்தெனப் பற்றுக்கோடெனக் கொண்டு உண்மைப் பொருளை உணர்த்தினுர்கள். பற்றுக்கோடின்றித் தவிக்கும்—குறிக் கோளிலாது அலமரும் உயிர்களுக்கு மூவகைப்பற்றுக் கோடுகளைக் காட்டி, அவற்றின் முடிந்த பொருளாக விளங்கும் உண்மைப் பொருளை இது எனக் கூறி வரையறை செய்தார்கள். இம்மூன்றற்கும் மேலாம் நிலை ஒன்று உண்டு. அது பற்றுக்கோட்டினைப் பற்றிச் சென்று, பின் பற்றுக்கோடு இன்றிச் செல்லும் நிலை. ஆதாரத்தைப் பற்றிச் சென்று நிராதாரம் செல்லும் நிலை. சார்புணர்ந்து மேல் சென்று சார்பு கெட ஒழுகும் நிலை. மூவகைக் கந்தினையும் பற்றிச் சென்றபின் கந்தழித்துச் செல்லும் நிலை. கந்தழித்துச் செல்லும் நிலையே கந்தழி ஆயிற்று. "இம் மூன்றும் விட்டதே பேரின்ப வீடு" என்ற ஔவையார் வாக்கையும் உளங்கொண்டு நோக்குதல் வேண் டும். இத்தகைய கந்தழி நிலையனுபவத்தையும் அவ்வனுபவத்தை உள்ளீடாகக் கொண்ட தத்துவக் கொள்கையையும் நமக்கு விளக்கு பவைகளே மணிவாசகப் பெருந்தகை திருவாய் மலர்ந்தருளிய எட்டாந்திருமுறையும், மெய்கண்டார் அருளிய **சிவஞான போதத்து** எட்டாம் நூற்பாவும் ஆகும்.

## திருவாதவூரர்

திருவாதவூரில் பிறந்தருளிய காரணத்தால் மாணிக்கவாச கருக்குத் திருவாதவூரர் என்ற பெயர் உண்டு. இவருடைய வரலாறு, காலம் ஆகியவைபற்றி அறிஞர்களிடையே கருத்து மோதல்கள் உண்டு. இந்நூலுக்குரிய எல்லையை அடிப்படையாகக் கொண்டு ஒரே ஒரு கருத்தைமட்டும் இவண் குறிப்பிடுதல் வேண்டத் தகுவ தாகும்.

திருவாதவூரராம் மணிவாசகப் பெருந்தகை **தேவாரம் பாடிய மூவருக்கும் முந்தியவர்** என்ற கருத்து மணிவாசகத்தாலேயே

உணரக் கூடிய ஒன்ருக இருத்தலின், அதனை மறுத்தெழுத இயல வில்லை.

"பூதங்கள்தோறும் நின்ருயெனின் அல்லால்
போக்கிலன் வரவிலன் எனநினைப் புலவோர்
கீதங்கள் பாடுதல் ஆடுதல் அல்லால்
கேட்டறியோம் *உனைக் கண்டு அறிவாரை*"

என்பது மாணிக்கவாசகரின், திருவாசகத் திருப்பள்ளியெழுச்சியின் ஐந்தாம் பாட்டு. " கண்ணப்பன் ஒப்பதோர் அன்பின்மை கண்ட பின்" என்று சிறந்த அருளிப்பாடுகளைச் சிறந்தெடுத்தோதும் மரபினைப் பின்பற்றும் மாணிக்கவாசகர், திருஞானசம்பந்தர் வரலாற்றை அறிந்திருந்தாராயின் "கேட்டறியோம் உனைக் கண்டு அறிவாரை" என்று பாட ஒருப்படார்.

அவ்வாருயின் மூவர் முதலிகள் மாணிக்கவாசகரை ஏன் குறிப்பிடா தொழிந்தார்" என்ற வினு எழும்.

"நரியைக் குதிரை செய்வானும்
நரகரைத் தேவு செய்வானும்"

"குடமுழநந்தீசனை வாசகனுக்கொண்டாய்"

"வையைத் திருக்கோட்டில் நின்றதோர் திறமும் தோன்றும்"

என்ற குறிப்புக்கள் அவர்தம் பாக்களிற் காணப்பெறினும், மாணிக்க வாசகர் கடந்த நிலைப் பொருளனுபவமாகிய கந்தழிநிலை அனுபவம் பெற்றுச் சிறந்த பெருந்தகையாதலின், அவ்வனுபவத்தை உணர்த்தும் நோக்கமும் தத்துவமும் ஏனைத்தேவாரம் பாடிய மூவருக்கும் அப்பாற்பட்ட ஒன்று ஆதலின், திருவருள் அவ்வழியில் அவர்களை இயக்கிப்பாடுமாறு செய்யவில்லை என்றே கொள்ளுதல் வேண்டும். தேவாரம் பாடிய மூவரும் திருவருளின் வழிநின்று, அது உணர்த்திய கருத்துக்களை மட்டுமே உணர்த்தும் தன்மையில் பதிகம் அமைத்தார்களாயினமையின், முதன்மை அனுபவம் மூன்றும் முடிந்த பின்னரே அமையக்கூடிய கந்தழி அனுபவம்—கடந்த நிலைப் பொருளனுபவம் விளக்கும் கருத்துக்களை எடுத்தோதாராயினர்.

சிவபரம்பொருளைக் கலந்த பொருளாகவும் கடந்த பொருளாக வும் கொண்டு, அனுபவித்து, அனுபவமொழிகளாகிய திருப்பதி கத்தை விளக்கும் தொண்டினில், தேவாரம் பாடிய மூவரும் சிவபரம் பொருளின் கலந்த நிலை அனுபவத்தைப் பெற்றுப் பதிகம் அமைத் தவர்களே. மாணிக்கவாசகர் கடந்த நிலை அனுபவத்தைப் பெற்றுத் திருவாசகம் அமைத்தருளினர். இக்காரணத்தாலேயே மூவருக்கும் பிந்தியவராக அமைத்து, அவருடைய அருளிப்பாடுகள் எட்டாந் திருமுறையாக அமைக்கப் பெற்றன.

கலந்தநிலை அனுபவம், கடந்தநிலை அனுபவம் என்ற இரண்டும் ஒன்ருேடொன்று முரணுவன அல்ல. முன்னது விளைந்த பின்னரே

பின்னது மலரும். சிவபரம்பொருள் ஒன்றே. அது இருவகையில் உயிர்களுக்கு அனுபவப் பொருளாக அமைகிறது. எனவே நால்வர் என்றும் படிமுறை நான்கு என்றும் கூறி அமைத்து, அனுபவப் பொருள் ஒன்றே என்று சுட்டிச் சென்றனர். (விரிக்கிற் பெருகும்).

*திருக்களிற்றுப் படியார்* என்ற சாத்திரநூல் தென்புகலிவேந்தன் செயல், திருவாமூராளி செயல், வன்தொண்டன் தொண்டு என முதல் மூவரையும் கூறியபின் திருவாதவூரரை அவ்வாறு சொல்லாமல் திரு வாதவூரரைத்தேன் என்றே கூறியொழிந்தார். பரம ஆனந்தத்தையே தந்தார். அதனுல் எம்முடைய பிறவிப்பிணி அகன்றது என்று குறிப்பிடுகின்ருர்.

> ''பாய்பரியோன் தந்த பரமானந்தப் பயனைத்
> தூயதிரு வாய்மலராற் சொற்செய்து—மாயக்
> கருவாதை யாம் அறியாவாறு செய்தான் கண்டாய்
> திருவாத வூராளுந் தேன்''

என்பது அந்நூலின் 73 ஆம் வெண்பா.

## பெருந்துறை

தோணித்துறை, அறத்துறை, அருட்டுறை ஆகியவைகளைப் புகும் இடங்களாகக்கொண்டனர் தேவார மூவரும். மாணிக்கவாசகப் பெருந்தகையோ 'பெருந்துறை' புகுந்தார். இப்பெருந்துறை அனு பவம் முன் குறித்த மூன்று துறைகளை அடிப்படையாகக் கொண்ட தேயாயினும்—அவற்றின் விளைவேயாயினும், அத்தகைய மூன்று முன் அனுபவங்களை இங்கே காணமுடியாது. இவ்வனுபவத்தைத் ''திருப்படையாட்சி'' என்னும் பகுதியில் சிறப்புற விளக்கியருளு கிருர்.

தேவார முதல் மூவரும் சென்று அவனைப் பற்றினுர்கள். தொண் டர் ஆயினர். ஆனுல், இறைவனே வலியவந்து மணிவாசகரைத் தொண்டராக ஆக்கிக்கொண்டனன். இக்கருத்தினைச் சிவப்பிரகாசர் தம்முடைய *நால்வர் நான் மணிமாலை* 12 ஆம் செய்யுளில்,

> கடல்நிறவண்ணன் கண்ணொன் றிடந்து
> ...... ...... ......
> பண்டைநாள் ஒருசிலர் தொண்டர் ஆயினர்
> ...... ...... ......
> பாடும் பணி நீ கூடும் பொருட்டு
> மதுரை மாநகரிற் குதிரை மாறியும்
> விண்புகழ் முடிமிசை மண்பொறை சுமந்தும்
> நீற்றெழில் மேனியில் மாற்றடி பட்டும்
> **நின்னைத் தொண்டன் என்னக் கொண்டனன்**

என்று கூறி விளக்குவாராயினர். மாணிக்கவாசகரும் இவ்வனு பவம் விளைந்த முறையை விளக்கும் வகையில்,

"ஏறுடையான் எனையாளுடை நாயகன் என்னுள் புகுந்திடிலே"

"இந்துசிகாமணி எங்களை ஆள எழுந்தருளப் பெறிலே"

"ஈறறியா மறையோன் எனை ஆள எழுந்தருளப் பெறிலே"

என்று, திருப்படையாட்சியின் இறுதிவரிகளிற் குறிப்பிட்டருளி யுள்ளார். இங்கே உள்ள அனுபவத்தில் முதன் மூன்று நிலைகளிற் பெற்ற அனுபவம் "ஆகாது" என்றும் கூறி விளக்குகின்றார்.

## பொய்யாமையும் பொய்மையும்

மணிவாசகப் பெருமான் எடுத்துக்காட்டும் நெறிமுறை ஒன்று உண்டு. திருவள்ளுவர் எடுத்துக்கூறும் "மெய்யுணர்தல்' 'அறி வுடைமை' ஆகிய பகுதிகளில் பொருளல்லவற்றைப் பொருள் என்று உணரும் அறியாமையை நீக்கிவிட்டு, எப்பொருள் எத்தன்மைத் தாயினும் அப்பொருள் மெய்ப்பொருள் காண்பது அறிவு என்று கூறுகிறார். இவ்வகையில் பொய்மைத்தன்மை மெய்மைத்தன்மை என்ற இருதன்மைகளை அடிப்படையாகக் கொண்டு ஆராய்தல் வேண்டும். இவ்வாய்வினைக் கீழ்வரும் மூன்று பகுதியனவாகப் பிரித்து உணரலாம்.

(1) பொய்மைத்தன்மைகளை நீக்குவதும் மெய்மைத்தன்மை யைக் காண்பதும் ஆகிய ஒரு ஆய்வு. எடுத்துக்காட்டாக நோக்கும் போது பரம்பொருள் என்ற ஒன்று, சத்துவம் இராசதம் தாமசம் என்ற குணங்களைக்கொண்டது அன்று என—அவ்வாறுள்ள பொய்த் தன்மைகளுக்கும் பரம்பொருளுக்கும் தொடர்பு இல்லை என நீக்கி விட்டு, இறைமைக் குணங்களாகிய சத்து, சித்து, ஆனந்தம் என்பவைகளைக் கொண்டது எனக் கருதுவது. எனவே பரம் பொருள் நிர்க்குணம் என்றும் பரம்பொருள் சகுணம் என்றும் ஆய்ந்து கொள்ளும் முறை.

2. பொய்த்தன்மைகளின் நீக்கமே மெய்த்தன்மை என்று கொள்வது. எடுத்துக்காட்டாக நோக்கின் பரம்பொருள் இத்தன்மை யுடையது அன்று என்று கண்டு, இவ்வாறே அன்று, அன்று என நீக்கிச் செல்வதன் மூலமாகவே மெய்த்தன்மையை உணருதல், சகுணத்துவத்தை நிர்க்குணமாக ஆக்கிக் காணுதல். இவ்வகையில் பரம்பொருள் என்பது இது அல்லாதது அது என்ற வகையிலேயே உணரப்பெறும்.

3. அனைத்துத் தன்மைகளையும் பொய்மைத்தன்மை என்ற அடிப்படையிலேயே ஆராய்ந்து, முடிவு செய்து, அம்முடிவிலேயே நின்றுவிடுதல். மெய்மைத் தன்மையைப் பற்றிய முடிவினைச் செய்யும் தகுதி தமக்கு இல்லை என்றே முடிவு செய்துவிடுதல். "பொய்காட்டிப் பொய்யகற்றிப் போதானந்தப் பொருளாம் மெய் காட்டும் மெய்கண்டார்" என்ற விளக்கத்தில் பொய்யைக் கண்டு அகற்றுதலும் மெய்யைக் காட்டுதலும் ஆகிய இருநிலைகளையும்

உடன் கொள்ள வைக்கும் ஆய்வு ஒப்பப் பெறுகிறது. ஆயினும், பொய்கண்டு, பொய்யகற்றுவது என்ற ஒன்றிலேயே நாட்டம் மிகுந்து, மெய்நாடும் முயற்சியில் தாம் எள்ளளவுக்கும் தகுதியில்லை எனக் கண்டு தன்னை வெறுத்து நிற்றல்.

மேலே குறிப்பிடப்பெற்ற மூன்றுமே மெய்ப்பொருள் காணும் முயற்சியே. எனினும் முன்னுள்ள இரண்டும் மெய்ப்பொருள் காண வேண்டும் ; காணமுடியும் என்ற குறிக்கோளில் நம்பிக்கைகொண்டு ஆய்வைச் செலுத்துவது. மூன்ருவதாக அமைந்த நிலையில் பொய்யைக் கண்டு, பொய்யினின்றும் மீளமுடியாத நிலைமையை உன்னி, பொய்யிலிருப்பதற்காக வருந்தி, பொய்யிலிருந்து மீள முடிந்தாலே போதும் எனக் கவன்று நெக்குருகும் நிலை. மெய்யைக் கண்டு, மெய்ப்பொருளாய்வினைச்செய்து, மெய்ப்பொருளை அடைய வேண்டும் என்று எண்ணுவதை விடுத்து, பொய்யாமையைப் பொய் யாமையாக்க முயலும் ஒரு செயலையே மேற்கொள்ளுதல். இதுவே மாணிக்கவாசகப்பெருமான் மேற்கொண்ட நிலைமையாகும்.

> ***"விச்சுக்கேடு பொய்க்கு ஆகாது என்று இங்கு எனை வைத்தாய்***
> இச்சைக்கு ஆனர் எல்லாரும் வந்து உன்தாள் சேர்ந்தார்
> அச்சத்தாலே ஆழ்ந்திடுகின்றேன் ஆரூர் எம்
> பிச்சைத் தேவா என் நான் செய்கேன் பேசாயே"

> *"**புறமே போந்தோம் பொய்யும் யானும்** மெய்யன்பு*
> பெறவே வல்லே னல்லா வண்ணம் பெற்றேன் யான்"
> ***யானே பொய் என் நெஞ்சும் பொய் என் அன்பும் பொய்***
> ஆனல் வினையேன் அழுதால் உன்னைப் பெறலாமே

என்பவை ***திருவாசகம்***, *85, 90, 94* ஆகிய எண்ணுள்ள செய்யுட் களாம். என்னைச் சார்ந்த அனைத்தும் பொய், பொய்யின் முழுமையே யான், எனக்கு ஆசை இருக்கிறது ; அழமுடிகிறது அவ்வளவே என்று கதறுகின்ருர். மேலும்,

> நாடகத்தால் உன்னடியார் போல் நடித்து நான் நடுவே
> வீடகத்தே புகுந்திடுவான் மிகப் பெரிதும் விரைகின்றேன்

என்று திருவாசகத் திருச்சதகப் பதினைந்தாம் செய்யுளை நோக்கும் போது தன்செயல்களாக உள்ளவை அனைத்தும் நாடகமே என்று குறிப்பிட்டிருப்பதைக் காணலாம்.

கண்டதே காட்சி, கொண்டதே கோலம் என்ற உலகாயதத் தன்மையை வெறுத்து, காணும் பொருள் யாவிலும் கலப்பு இருத்தல் இயற்கையே ; உண்மைப் பொருளை நோக்கிக் காணலே அறிவுடைமை என்று அறிவியல் தன்மையார்ந்த அறிவாராய்ச்சி நிலையையும் வெறுத்து, தன்னையும் உட்பட்ட அனைத்தையும் பொய் என்று வெறுத்துத் தனித்து நிற்கிருர். யான் ஆர் ; என் உள்ளம் ஆர்; ஞானங்கள் ஆர் என்ற ஆய்வைத் தொடங்கிய மாணிக்கவாசகர்

இறுதியாக வந்த முடிவு, யானும் பொய் என் நெஞ்சும் பொய், யான் பெற்ற ஞானமும் பொய் என் செயல் முழுவதும் நாடகம் என்று தன்னைப் பொய்யின் வண்ணமாகவே ஆக்கிக் கொண்டு செல்லும் நிலையையே சைவ சித்தாந்த சாத்திரம் ஊசல் கயிறு அற்ற தன்மை என்று குறிப்பிடுகிறது. உயிர் ஐந்திந்திரியங்களையும் உண்மை எனப் பற்றிப் பொருளை அறிய முற்படுவதனாலேயே அது தன்னையும் அறிய இயலாததாய், உலகையும் அறிய இயலாததாய் ஆகிறது. ஆன்மாக்கள் இவ்வாறு ஐம்புலவுணர்வுகள் எனப்பெறும் ஐயுணர்வுகளால் மயங்கி, தம்மையும் தம் முதலையும் அறியமாட்டாது நிற்கையினாலேயே இறைவன் அவ்வான்மாக்கள் முன் வெளிப்பட்டுத் தோன்றுதல் இல்லை.

மணிவாசகப் பெருந்தகையோ அனைத்தையும் பொய் என்று ஒதுக்கிய காரணத்தால் ஞானமே உருவாய் உயிரின் உள்ளேயே இடையீடின்றிக் கலந்திருக்கும் முதன்மைப் பொருளே தம்மை உணர்த்த முற்பட்டு வெளிவந்து விடுகிறது. "அனைத்தும் பொய்" என்ற நிலையில் உலக ஊஞ்சற் கயிறு அற்றதும் தாயாய் நின்ற பரம் பொருள் குருவாக வெளிப்பட்டுத் தன்னையும், ஆன்மாவையும் உணர்த்த முற்பட்டது. இவ்வகையில், மணிவாசகப் பெருந்தகையின் உள்நின்றுணர்த்தி வந்த பரம்பொருளே வெளிப்பட்டுத் தோன்றி, மணிவாசகப் பெருந்தகைக்கு உரிய குருவென வந்து நின்றருளுவாராயினர்.

இவ்வகையில் குருவாக வருவதற்குரியவன் உள்நின்று அவ்வுயிரை அன்று தொட்டு இன்று வரையில் படிநிலை வளர்ச்சியில் உருவாக்கிக் காப்பாற்றிவந்த பரம் பொருளே. இப்போது குருவாக வந்து நேர்நின்று, அறியாமை அகற்றி, அறிவினைக்கொளுத்துகின்றது. இது வரையில் உள்நின்று உணர்த்தி வந்த பரம்பொருள் குருவாகவெளிப் பட்டுத்தான் ஆகவேண்டும் என்ற அவசியம் என்ன? உண்மைப் பொருளுணர்த்துவதே அமையுமே என்ற வினவை எழுப்புவதுண்டு. சிவஞானமுனிவர் "வீடுபேற்றைக் காதலித்து அவ்வச் சமயந் தோறும் உளவாகிய "பந்தமும் பிரிவும் தெரிபொருட் பனுவல் படி வழி சென்று சென்றேறிச்" சைவத்தின் எய்தப் பெற்றோர், ஆசிரியன் காட்டும் சைவாகம நெறியிற் சமய தீக்கையுற்றுச் சரியை நெறியைத் தலைப்பட்டு, அதுமுற்றிய பின்னர் விசேட தீக்கையுற்றுக் கிரியை நெறியைத் தலைப்பட்டு, அது முற்றிய பின்னர் யோகநூல் கேட்டு யோகநெறியைத் தலைப்பட்டு, இம் மூன்றும் முறையால் முற்றியபின்னர் நிருவாணதீக்கை பெற்று, ஞானநெறியைத் தலைப் பட்டு வீடுபேறடைவர்." என்று சிவஞானபோத மாபாடியத்தில் எட்டாஞ் சூத்திரவுரையில் எடுத்துக் காட்டினார். இதனை அதிகரணமும் ஏதுவுமாக வகுத்துக் கொண்ட முறையில் "ஈண்டு இவ்வான் மாக்களுக்கு முற்செய்தவத்தால் ஞானம் நிகழும் என்றது என அதிகரணத்தைக் காட்டி. அதற்குரிய ஏதுவாக" மேற் சரியை கிரியா யோகங்களைச் செய்துழி நன்னெறியாகிய ஞானத்தைக் காட்டி யல்லது மோக்ஷத்தைக் கொடாவாகலான் என்பதைக் காட்டி முடிப்பாராயினர்.

ஞானமே—ஞானம் ஒன்றே முத்தியைக் கொடுக்க வல்லது ஆதலின் அதனை உணர்த்துவதற்குக் குருவானவர் வருதலும், தீக்கை செய்தலும் அவசியம் என்று சிவஞானமுனிவர் எடுத்து விளக்கிக் காட்டுகின்றார். ஆயினும், சரியை, கிரியை, யோகம் என்ற மூன்று படிகளிலும் நிற்க வேண்டும் என்ற ஞானமும் அவற்றின் சிறப்பியல்புகளை உணர்த்திய தீக்கை ஞானமும் ஒருவகையில் அபரஞானமாக அமைத்துக் கொண்டால், அபரஞானங்களாகிய அவை பரஞானத்தைக்காட்டி நிற்க; பரஞானம் ஒன்றே முத்தியை அடைவிக்கும் நேர்ப்பாதை எனக் கொள்ளல் வேண்டும். அபரம், பரம் என்ற சொற்கள் வேறு பொருளையும் தரும் எனக் கொண்டு நீக்க முற்பட்டால் சாதன ஞானம், சாத்திய ஞானம் என இரண்டாகப் பகுத்து உணரலாம். உள்நின்று இறைவன் உணர்த்திவந்தாலும் வெளி நிலையிலும் தீட்சைசெய்யச் சிலர் இருந்து வரல் வேண்டும் என்பதும் தெரியவருகிறது. இறுதியாகப் பெறவேண்டிய ஞானத்துக்குத் தம் முதலே குருவாக வருவார் என்பதும் கொள்ளக் கிடக்கிறது. மரபு வழிப்பட்ட கொள்கையை ஒத்துக் கொள்ள மனமில்லாதவர்கள் இங்கே ஒரு வினவை எழுப்புதல் இயற்கை. உள்நின்று உணர்த்திய இறைவனே குருவாக நேர்நின்றும் உணர்த்தும் போது இடையில் உள்ள தீக்கை முதலியவைகளும், அவைகளைச் செய்து வைக்கும் ஆசாரியர்களும் இரண்டாம் நிலைப்படுத்தப் பெறுகிறார்களே, ஏன்? என்பது வினா. உண்மை ஞானத்தைப் பெறும் வகையில் படிமுறை வளர்ச்சியானது தேவை என்பதை இன்றைய விஞ்ஞானமுறை முடிவுகளும் ஒப்புகின்றன. எந்த ஒரு கொள்கையும் உறுதியாக மனத்தில் பதியவேண்டுமானால் பலவகையான பயிற்சி முறைகளை அமைக்க வேண்டிய நிலைமை அவசியமானதே. இவ்வகைகளில் ஆகமங்களும், வழிநூல், சார்பு நூல் ஆசிரியர்களின் உரைகளும் கூறுவனவற்றை எடுத்துக் காட்டியே சிவஞானமுனிவர் உரையெழுதுகின்றார். ஆயினும், மெய்கண்டார் திருவாக்கில் "தம்முதல் குரு" என்ற தொடர் மிகஅழுத்தமாக வெளிப்பட்டருளுகிறது என்பதையும் கருதிப் பார்க்காமலிருக்க முடியாது. இவ்விரண்டையும் நிறைவு செய்யும் வகையில் இரண்டு கருத்துக்களை மெய்கண்டார் தெளிவுற எடுத்தருளுகின்றார்.

### *அயர்ந்தனை வளர்ந்து*

சிவஞானபோத எட்டாம் நூற்பாவில் வருந்தொடர் "அயர்ந்தனை வளர்ந்து" என்பது. குருவாக நின்ற சிவபரம்பொருள் முதன் முதலாக அருளிய உபதேச மொழி "ஐம்புலன்கள் வேடர்களாக நின்று உம்மைத் தளைக்க, நீயும் வளர்ந்தாய்" என்பது. வளர்ந்தாலும் அயர்வு உண்டு. மாயாதனு விளக்காம் என்ற வழிநூலாசிரியரின் உரையையும் உடன்கொண்டு நோக்கும்போது, மாயாகாரியங்கள் துணைசெய்தபோதிலும் வளர்ச்சி உண்டு. இறைவனால் உள் நின்று உணர்த்தப்பெறவும், அவனால் அளிக்கப்பெற்ற தனு, கரண, புவன, போகங்களும் ஞானத்தை உணர்த்தும் நிலையில் நன்முறையிலேயே துணைசெய்தன. "மன்னவன் தன்மகன் வேடரிடத்தே தங்கி வளர்ந்து அவனை அறியாது மயங்கிநிற்ப" என்ற உவமையை

முழுமையாகப் பொருத்திப் பார்த்தல் ஒப்புமையுடையதன்று. ஆணவமலத்தின் பற்று என்ற ஒன்றைத்தவிர மற்றவையெல்லாம் இறைவனால் அருளப்பெற்றவைகளே. அவைகளாலெல்லாம் உயிருக்கு நன்மை என்பதைத் தவிரத் தீமை இல்லை. இறைவன் அமைத்திருக்கின்ற படிநிலை வளர்ச்சி முறையில் அமையும் ஞானத்தில் எத்தகைய குறைவும் இல்லை என்பதைக் குறிக்கோளாகக் கொண்டு சிந்தித்தல் தேவையானது. "புதன் மறைந்து வேட்டுவன் புள் சிமிழ்த்தல்" என்றாற்போல ஆணவமலத்தின் காரணமாக ஒருவேளை ஐம்புலன்கள் நம்மை வேடரெனத் தாக்கும் என்ற அச்சத்துடனேயே உயிர்கள் வளர்ந்திருந்த காரணத்தால் "அயர்ந்து வளர்ந்தனை" என்று குறிப்பிட்டார். வளர்ச்சி இருப்பினும் சோர்ச்சி இருக்கிறது. காரணம் உயிர்களுக்கும் தம்மை முற்றாக நீக்கிக்கொண்டு செயலாற்றும் தன்மை அமையவில்லை. சரியை, கிரியை, யோகம் ஆகிய மூன்று நிலைகளிலும் தம்மைப் பற்றிய எண்ணம் உயிர்களுக்கு இருக்கவே செய்கிறது. இது ஆணவ மலத்தின் இருப்பினால் விளைவது. இந்நிலையில் தம்முதல்வனான இறைவனே நேர்நின்று குருவாகக் காட்சி தரும்போது அனைத்தும் அடங்குவதும் அடக்குவதும் இன்றி ஒடுங்கி விடுகின்றன, என்றும் கொள்ளலாம். ஆயினும், மெய்கண்டார் அவ்வாறு கொள்ள வில்லை. உயிர்கள் அறிவுடைப் பொருளானமையின் அறிவு வளர்ச்சியைப் படிமுறை வளர்ச்சியில் அமைத்து, சோர்வு நீக்கத்துடன் கூடிய தழைந்தவளர்ச்சி என்ற ஒன்றைத் தம்முதலே குருவாக வந்து நின்று தொட்டுக்காட்டி, வளர்ச்சியை எய்துவிக்கிறது என்று கருதுகின்றார். இத்தகைய ஒரு வளர்ச்சியைப் பெறவிட்டே, முடிவில்தானே வந்து இணைத்து, சோர்வுநீக்கி, தழைச்சியைக் கொடுத்து நிறைவு செய்கிறது எனக் கொள்ள வேண்டும். உள் நின்று உணர்த்தியதே போதாதோ எனின் போதாது. உள்நின்று ணர்த்துங் காலத்து, உயிரின் அறிவோடு ஒட்டி, சில அமைப்புக்களையே உருவாக்கிக் கூறமுடியும். பின்னரும், பலதுணைகளை அமைத்துப் பலவகையான நிலைகளில் அறிவினை வளர்ச்சிபெறச் செய்ய வேண்டிய அமைப்பும் இறைவனுக்கு உண்டு. இவையும் போதாத நிலையில் இறுதியில் நேர்நின்று உணர்த்துகிறான். உணர்த்திய ஒன்றைச் செயல் முறையில் உணர்ந்து தெளிவடையவும் வேண்டிய பயிற்சி ஒன்றைக் கொடுக்கிறான். இவ்வளவும் செய்த பின்னரே "அந்நியம் இலாமை" வருகிறது. இதனாலேயே முன்னை நிலையில் பெறுகின்ற ஞானம் சார்புநிலையில் பெறுகின்ற ஞானம் என்றும், இப்போது தம்முதலே குருவாகவந்து நேர்நின்று, இதுவரை பெற்ற அனைத்தும் பற்றுக்கோடு பற்றி வருகின்ற ஞானம் என்றும், அவை துணையாக அமையுமேனும் பற்றுக் கோடற்ற ஞானமே வீடு பேற்றுக்கு ஏது என்றவகையில் அத்தகைய ஞானம் இது என்றும் உணர்த்துதல் அவ்வனுபவத்தை அருளுதல் ஆகிய நிலைகள் ஏற்பட்டன என உணர்தல் வேண்டும்.

### தவத்தினில் உணர்த்தல்

மாணிக்கவாசகப் பெருந்தகைக்குக் குருவாக நின்று உணர்த்திய இறைவன் அவரை இந்நிலவுலகத்தில் "நிற்க" எனப் பணித்துச்

சென்று விடுகின்றான். உயிர்கள் உணர்ந்து விட்டன எனில் முத்தியை எய்துதல் வேண்டுவது தானே! ஆயினும், தம்மையும் தம் கூட்டத்தவரையும் மறைத்துக் கொண்டு, மணிவாசகரை இந்நிலவுலகில் நிற்க வைத்து விட்டான்.

"புவனியிற் சேவடி தீண்டினன் காண்க
சிவனென யானும் தேறினன் காண்க
அவன்எனை ஆட்கொண்டு அருளினன் காண்க"

என்ற திருவண்டப்பகுதியின் (61-63) வரிகளை அடிப்படையாகக் கொண்டு, "தம்முதல் குருவுமாய்" என்பதை உளங்கொள்ளும் மெய்கண்டார், 'உம்'மையால் உள்நின்று உணர்த்தியதும், பலவாறான துணைகள், ஆசாரியர்கள், தீக்கை முறைகளால் உணர்த்தியதும் அவனே என்பதைக் காட்டினார். இனி,

"இன்றெனக் கெளிவந்தருளி
அழிதரும் ஆக்கை ஒழியச் செய்த ஒண்பொருள்
இன்றெனக்கு எளிவந்திருந்தனன் போற்றி
அளிதரும் ஆக்கை செய்தோன் போற்றி
ஊற்றிருந்து உள்ளங் களிப்போன் போற்றி"

என்று திருவண்டப்பகுதி (117—121) குறிப்பிடுவதன் மூலம் அவன் செய்த அருள்தன்மையை மெய்கண்டார் உளங்கொள்ளுகிறார். இவ்வாறு ஆட்கொண்ட பின்னரும் விட்டுப் போனது ஏற்றுக்கோ?

"புணர்ப்பது ஒக்க எந்தை என்னை
    ஆண்டு, பூண நோக்கினாய்
புணர்ப்பது அன்று இது என்ற போது
    நின்னோடு என்னோடு என் இதாம்
புணர்ப்பதாக அன்றிதாக
    அன்பு நின் கழற்கணே
புணர்ப்பதாக அங்கணாள
    புங்கமான போகமே"

என்ற திருச்சதகம் 75 ஆம் பாடலை உன்னி நோக்கினால், மணிவாசகரை ஆண்ட பின்னரும், மணிவாசகர் தமக்குக் கிடைத்த பேற்றினைச் செயல் முறையில் வைத்து உணர வேண்டும், துய்க்க வேண்டும் என்ற நிலையில் வளர்ச்சிப்படி ஒன்றினை அமைத்துச் சென்ற இறைவனருளை உளங்கொண்ட மெய்கண்டார், "தவத்தினில் உணர்த்த விட்டு" என்று நூற்பாவை யாத்தாராகக் கொள்ளல் வேண்டும். தவத்தினில் உணர்த்தவிடுதல் என்பது கேட்டதைச் சிந்தித்துத் தெளிதல் என்ற பொருளுடன் அடக்கி நிறுத்திவிடுதல் ஆகாது. இங்கே மணிவாசகப் பெருந்தகைக்கு அருளிய உபதேசம் "சிவாயநம" என்பதாக மணிவாசகப் பெருந்தகையே அமைத்துக் கூறுகின்றார்.

"நானேயோ தவம் செய்தேன் சிவாயநம எனப் பெற்றேன்"

என்பது மணிவாசகர் திருவாக்கு. ஏனையோர்க்கு "நமசிவாய" என்பது தொடக்கம். மணிவாசகப் பெருந்தகைக்கும் அது தொடக்க மாக இருந்திருக்கலாம். ஆயினும், இறைவனே குருவாக வந்தபோது "சிவயநம" என்பதே மூலமொழியாக நின்றது. மேலும், அவன் அம்மொழி மூலம் கொடுத்த அனுபவம் உண்டு. அவ்வனுபவத்தை மேலும் மேலும் தளிர்க்க வைத்து, அனுபவ மூலமாக அனுபவித்துத் தெளிகின்றார் என்பதைக் கருத்தாகக் கொண்டு "தவத்தினில் உணர்த்தவிட்டு" என்ற தொடரை மெய்கண்டார் அமைத்தருளு கிறார்.

இவ்வகை அனுபவ முதிர்ச்சியால் மணிவாசகப் பெருந்தகை முன்பு கருதியதுபோலத் தாம் பொய் அன்று எனக்கருதி, பொய்ப் பட்ட தன்மையை இடைப்பட்டது எனக்கொண்டு, இடைப்பட்ட தன்மை இடைப்படவே அழிந்தது எனக்கொண்டு, யானும் அவனும் "அநந்நியம்" என்று கொண்டு—அந்நியமில்லை என்று கொண்டு, அந்நிலையை அனுபவத்தால் கைவரப்பெற்று, இறுதியில் அரனடி அடைந்தார் என்பதை உளங்கொண்ட மெய்கண்டார்,

"ஐம்புல வேடரின் அயர்ந்தனை வளர்ந்தெனத்
தம்முதல் குருவுமாய்த் தவத்தினில் உணர்த்தவிட்டு
அந்நியம் இலாமையின் அரன்கழல் செலுமே"

என்று தம் எட்டாம் நூற்பாவினை அமைப்பாராயினர்.

## முடிப்புரை

மேலே எடுத்துக் கூறப்பெற்றவாற்றால், பெருந்துறை புகுந்து பேரின்ப வெள்ளம் மூழ்கிய புனிதன் மொழிந்த திருவாசகமே வாசகம் எனக்கொண்டு, அவர்பெற்ற கந்தழிநிலை அனுபவமே, ஏனைச் சார்புகளின் மூலமாக வந்த ஞானத்திலும் முதிர்ந்த ஞானமாக இருந்தது என்றும்; அந்நிலை ஞானம் பெறுவதற்குரிய வழிகள் மூன்று எனினும் தம்மையே 'பொய்' எனவும் அனைத்தும் 'பொய்' எனவும் உணர்ந்து தெளிந்த வகையில், மணிவாசகப் பெருந்தகைக்குக் கந்தழிநிலை உபதேசத்தையும் அனுபவத்தையும் தம் முதலே குருவாக வந்து நேர்நின்று கொடுத்து, அவற்றைத் தவத்தினில் உணர்த்தவிட்டு, உணர்ந்து தெளியவைக்கும் நிலையில் இவ்வுலகில் விட்டுச் சென்றது என்றும்; அத்தகைய கந்தழிநிலை அனுபவம் பெற்ற மணிவாசகப் பெருந்தகை அயர்ச்சியின் நீங்கிய வளர்ச்சி யைப் பெற்றுச் சிறந்து இறைவனடியில் இணைந்துநின்று பேரானந்தப் பேரனுபவம் பெற்றார் என்றும்; இது இறைவன் தானே முற்படப் போந்து அருளிய நெறியாதலின் இது பெருந்துறை எனப்பெற்றது என்றும் இக்கந்தழிநிலை அனுபவ விளக்கமாக எழுந்த திருவாச கத்தை மூலமாகக் கொண்டு தெளிந்த வகையில் சிவஞானபோத எட்டாம் நூற்பா மலர்ந்தது என்றும் விளக்கிக் காட்டப்பெற்றன.

# 11. தண்ணிழல் ஆம் பதி

## *முன்னுரை*

திருமுறைகள் பன்னிரண்டனுள் ஒன்பதாந் திருமுறையாக விளங்குவது திருவிசைப்பாவும் திருப்பல்லாண்டும். தேவாரப் பதிகங்களைப் போலவே இசைநலம் வாய்ந்த திருப்பதிகங்களாக இருந்தமையால் திருவிசைப்பா என்றே பெயர் பெறுவனவாயின. இத்திருமுறையில் அமைந்த திருப்பதிகங்கள் இருபத்தொன்பது. இருபத்தொன்பதாம் திருப்பதிகம் திருப்பல்லாண்டு எனப்பெயர் பெறும். 365 பாக்கள் உள்ளன இத்திருமுறையில் என்று ஒரு பழம் பாடலால் தெரிவிக்கப் பெற்ற போதிலும் இப்போது கிடைக்கப் பெறுவன 301 பாக்களே. ஏனைய திருமுறைகளிற் காணப்பெருத "திருப்பல்லாண்டு" என்ற பகுதியைக் கொண்டு விளங்கும் தனித்த ஒப்புயர்வற்ற திருமுறையாகும் இது. திருக்கோயில் வழிபாட்டில் இத்திருமுறைக்கு ஒரு தனிப்பெருமை உண்டு. திருக்கோயில் நாட் பூசையில் 'பஞ்ச புராணம்' பாடவேண்டும் என்பது மரபு. தேவாரம், திருவாசகம், திருவிசைப்பா, திருப்பல்லாண்டு, பெரிய புராணம் என ஐந்திலும் ஐந்து பாட்டுக்கள் பாடப்பெற வேண்டும். இவ்வகையில் ஒன்பதாந்திருமுறையில் மட்டும் இரண்டு பாக்கள் பாடப்பெறுகின்றன. இத்தகைய சிறப்பு இத்திருமுறைக்கு உண்டாயினமைக்குக் காரணம் மக்கள் மனத்தை ஈர்த்து நிற்கும் தனித்தன்மை உடைமையே. அவ்வாறே தத்துவ இயலாரும் இத்திருமுறையைப் பொதுமையாக நோக்கி அமைந்துவிடாமல், தனிமைச் சிறப்புடன் காணவேண்டிய நிலையில் தத்துவக் கொள்கலமாகவும் இத்திருமுறை விளங்கி வருகிறது. ஒன்பதாந் திருமுறை ஒன்பது அருளாளர்களால் திருவாய் மலர்ந்தருளப்பெற்றது. திருமாளிகைத்தேவர், சேந்தனர், கருவூர்த்தேவர், பூந்துருத்திநம்பி காடநம்பி, கண்டராதித்தர், வேணட்டடிகள், திருவாலியமுதனர், புருடோத்தமநம்பி, சேதிராயர் என்ற ஒன்பது அருளாளர்களும் பல்லாற்ருலும் பெருகிய சிறப்புக்கள் பலவும் கொண்டு விளங்கியவர்கள்.

## *சித்தர் மரபு*

ஒன்பதாந் திருமுறையுள் முதல்நின்ற நான்கு திருப்பதிகங்களை அருளிய திருமாளிகைத்தேவர் 'போகர்' என்ற சித்தரிடம் தீக்கை பெற்றுத் திருவாவடுதுறையுள் வாழ்ந்த சித்தர் என்று கொள்வது ஒரு மரபு. இவருக்குப் பின் வந்தவராய் அமைந்த சேந்தனருக்குப்பின்

அமைந்த கருவூர்த் தேவரும் போகரிடம் தீக்கை பெற்றவரே. திருமாளிகைத் தேவர் சிவமரபுபற்றியும் கருவூர்த் தேவர் சத்தி மரபுபற்றியும் சிறப்பு வழிபாடுகள் கொண்டவர் என்றும் தெரியவருகின்றன. திருமாளிகைத் தேவர் செய்த சில சித்து விளையாட்டுக்கள் தெரியுமளவுக்கு அவருடைய ஊர், பெயர், சாதி முதலியனபற்றித் தெளிவாகத் தெரியவில்லை. எனினும் கருவூர்த்தேவர்வேதியர் குலத்தில் பிறந்தவர். இவர் பகல் முழுவதும் சிவபரம் பொருளை இனிய இசைப்பாக்களாற் பரவுவதும் இரவுமுழுவதும் சிவயோக சமாதியில் திளைத்திருப்பதும் ஆகிய வழக்கம் உடையவர் என்பது தெரிகிறது.

போகரிடம் தீட்சை பெற்ற சித்தர்களாக இருவரும் விளங்கினார்கள் என்ற வரலாறு ஆய்ந்து துணியக்கூடிய சான்றுகள் பலவற்றைக் கொண்டிருக்கவில்லை. எவ்வாறுயினும், ஓராண்டு சிவயோக சமாதி கூடி, பின் தெளிந்து ஒரு திருமந்திரப் பாட்டினை அருளிய திருமூலரும் இரவு முழுவதும் சிவயோக சமாதியில் நின்று பெற்ற அனுபவத்தையே திருவிசைப்பாக்களாக அருளிய பெருந்தகையாய கருவூர்த்தேவரும் கொள்கையால் ஒத்தவர்களே என்பதைக் காண முடிகிறது.

திருமாளிகைத்தேவர், கருவூர்த்தேவர் ஆகியோர் மேற்கொண்ட சித்தர் மரபு பற்றிய வாழ்வும், சிவயோக சமாதி முறைகளும் அவர்கள் அருளிய திருவிசைப்பாக்களும் ஒன்பதாந் திருமுறையாகத் தொகுக்கப் பெற்ற ஒன்றே, திருமூலர் திருமந்திரமும் பத்தாந் திருமுறையாக இணைக்க வேண்டிய சூழ்நிலையை உருவாக்கிய காரணமாக இருக்கலாம்.

இறைவனின் அருள்பெற்று, அவனைப்பாடிய அருளாளர்களுடைய பதிகங்களே திருமுறைகளாகத் தொகுக்கப் பெறும் மரபு எட்டாந் திருமுறை வரை அமைந்த பொதுமைமரபு எனக் கொள்ளலாம். ஒன்பதாந்திருமுறை தொடங்கியே சித்தர்மரபும் திருவருள் மரபுடன் இணைந்து நின்று திருமுறைகளில் இடம் பெறுவனவாயின எனவும் கொள்ளலாம்.

### வைணவமும் சைவமும்

வைணவர்களாக இருந்த சிலர் சைவசமய அருளாளர்களாகத் தம்மை மாற்றிக்கொண்டு வாழ்ந்துள்ளாகள். திருவாலியமுதனார், புருடோத்தம நம்பி ஆகிய இருவரும் வைணவராயிருந்து பின்னர்ச் சைவசமயம் சார்ந்து திருவிசைப்பா அருளிய பெருந்தகைகள் என்பது தெரியவருகிறது. இவ்வகையில் ஒன்பதோந்திருமுறையானது வைணவ சைவக்கலப்பும் இடம்பெறக் கூடிய வகையில் இசைப்பாக்களை ஆக்கித்தந்த பெருமையுடையது எனக் கொள்ளலாம். இனி, சேந்தனார் ஒருவரே திருப்பல்லாண்டு பாடியவர். இறைவனுக்கு வாழ்த்து அருளும் வகையில் சைவத்திலேயே முதன்முதல் திருப்பல்லாண்டு அமைக்கப் பெற்றது என்றும் பின்னரே அது

வைணவத்துக்குச் சென்று நிலைபெற்றது என்றும் கூறுவர். இதற்கு எதிரான கருத்தினை எடுத்துச் சொல்லுவோரும் உளர்.

## தத்துவக்கொள்கை

திருமாளிகைத் தேவர் தாம் பாடிய முதற்பதிகத்தில் ஒவ்வொரு பாட்டின் இறுதியிலும், *விளம்புமா விளம்பே, பணியுமா பணியே, கருதுமா கருதே, உரைக்குமாறு உரையே, நணுகுமா நணுகே, இசையுமாறு இசையே, நுகருமா நுகரே, தொடருமா தொடரே, விரும்புமா விரும்பே, நினையுமா நினையே* என்ற தொடர்களை இறுதியாகவைத்து முடித்தருளுகின்றார். இவைகளை முத்திநிலைபற்றியோதிய திருவாக்குக்கள் என்று சிவஞான சுவாமிகள் சிவஞானபோதத்துப் பதினொன்றும் சூத்திர உரையில் எடுத்து எழுதியுள்ளார்கள்.

சிவஞானமாபாடியத்தில் சிவஞானமுனிவர் உயிரோட்டமாக அமைத்து எழுதிவரும் செய்திகளுள் இதுவும் ஒன்று. வேதஉரைகள், ஆகம உரைகள், ஆகம உரைகளுள்ளும் சில ஆகமங்கள் என இவைகள் முரணித்தோன்றுங்கால் வன்மை மென்மை பற்றிக் கருத்தமைவுகளை மேற்கொள்ள வேண்டும் என்று எடுத்தெழுதி விளக்கியருளுவார். அவ்வாறே திருமுறைகளுள்ளும் பெத்தநிலை வாக்கியம் முத்திநிலை வாக்கியம் என்பவைகளைத் திருவருளால் தெளிய உணர்ந்து உணர்த்தியருளிய பெருமை சிவஞான முனிவர் ஒருவரையே சாரும்.

இனி, திருமுறைகளுக்குச் சாத்திரக் கருத்தமைந்த நுட்பங்களைக் காணும்போது, சாத்திரநூற்கருத்துக்களைத் திருமுறைகளிற் கொண்டு போய் இணைத்துக் காணும் முயற்சியை விடுத்து, திருமுறைகள் நமக்குத் தெள்ளத் தெளிய உணர்த்தும் சாத்திரக் கருத்துக்கள் எவை என்று காணுதல் நலம் பயப்ப தொன்றும். மேலும் ஒரு திருமுறை தரும் கருத்தினை வேறு திருமுறைகள் தெளிய உரைக்கும் பகுதி உள்ளனவா என்பதையும் கொண்டு ஆய்தல் வேண்டும். இவ்வகையில் அப்பரடிகள் தேவாரக் கருத்தினை இங்கே எடுத்துக் காட்டுதல் நன்மை பயப்பதாம்.

> "புழுவாய்ப் பிறக்கினும் புண்ணியா உன்னடி என் மனத்தே
> வழுவா திருக்க வரம் தர வேண்டும் இவ்வையகத்தே
> தொழுவார்க்கிரங்கி யிருந்து அருள் செய் பாதிரிப்புலியூர்ச்
> செழுநீர்ப் புனற்கங்கை செஞ்சடைமேல் வைத்த தீவண்ணனே"
>
> **(4.94.8.).**

இத்திருப்பதிகச் செய்யுள் ஒரு புதுமையை நமக்குத் தெரிவிக்கிறது. என்மனம் இறைவா உன் திருவடியை நினைக்க வேண்டும். ஆறறிவு படைத்தநிலையிலேயேயான் என்மனத்தை அவ்வாறு செய்ய வைக்க இயலவில்லை. மனிதநிலையை விடக் கேவலமான புழுநிலையை யான் அடைந்தால் எவ்வாறு நினைக்க முடியும்! அதனால், என்மனம் உன் திருவடியை நினைக்க வேண்டும் என்று இன்றுள்ள ஆணையை நீ

வரமாக மாற்றி, "உன் திருவடி என்மனத்தில் என்றும் இருக்க வேண்டும்" என்று அமைத்துவிட்டால் நன்மைதானே! என்று கேட்கிருர். இதனல் மனிதநிலையில் முடியாமையோடு, திருவருள் நிலையில் அவ்வாறு அமைந்து விட்டால் நன்மை இரண்டாலும் ஒன்றேயாயினும், அது எளிது என்பதை உளங்கொண்டார்.

அவ்வாறே ஓர் எளிய அமைப்பை 'விதியாக' அமைக்கிருர் திருமாளிகைத்தேவர்.

மனம், வாக்கு, காயம் என்ற மூன்ருலும் அமைக்கும் பதினெரு செயல்களை அமைத்தருளுகின்ருர். மனத்தைப் பற்றியனவாக விரும்புதல், கருதுதல், நினைதல் என்ற மூன்றையும், வாக்கினைப் பற்றியனவாக விளம்புதல், உரைத்தல், பணிதல் என்ற மூன்றையும், செயலைப் பற்றியனவாக நணுகுதல், இசைதல், நுகர்தல், புணர்தல், தொடர்தல் என்பவைகளையும் அமைக்கலாம். இவை மூன்றையும் முறையே புலன்கடந்த பொருளியலார் முடிபுகள் என்றும், அற இயலார் முடிபுகள் என்றும், அருளியல் எனப் பெறும் அனுபவ இயலார் முடிவுகள் என்றும் கொள்ளலாம். திருமாளிகைத்தேவர் புலன்கடந்த பொருளியலார் கூறும் கருத்துக்களையும், அற இயலார் கூறும் கருத்துக்களையும், அருளியலார் அல்லது அனுபவ இயலார் கூறும் கருத்துக்களையும் எடுத்துக் கூறி, இறைவனே! இவையெல்லாம் பற்பலரும் கூறும் உம்முடைய பெருமைகளே; இவைகளை யெல்லாம் தாங்கள் என் மூலமாக ஏற்றுக்கொண்டு, ஒரு தொண்டன் எவ்வாறு நினையவேண்டும் என்பதை எனக்குத் தந்தருள வேண்டும் என்று வேண்டுகோள் விடுத்தல் ஒருவகை.

இனி, இறைவன், பற்பல பிறப்புக்களாகத் தொடர்ந்து அறிவானுகவும், அறிவிப்பானுகவும், அறிவாய் அறிகின்ருனுகவும் இருந்து செயற்பட்ட நிலையில், உயிரானது முதிர்ந்த அறிவைப் பெறுவதற்குப் பற்பல பிறப்புக்கள் எடுக்க வேண்டிய நிலை உண்டாகிறது. எல்லாவகை அமைப்புக்களையும் அமைத்துக் கொடுத்தாலுங்கூட, இன்னம்பர் ஈசன் கீழ்க்கணக்கு எழுதி, அறிவாய் நின்று அறிந்து நின்ற போது உயிர்களின் பக்குவ முதிர்ச்சிக்கு உரிய விழுக்காடு மிகவும் குறைந்தே காணப்பெறுகிறது. அதனல் ஒரு வழியை அருளிச் செய்கின்ருர். ஒரு வேலைக்காரனுக்குத் தேவையானதைக் கொடுத்துவிட்டு, பின் அவன் செய்த வேலைக்கு, ஈடுசெய்ய முடியாதாயினும் ஈடு செய்தல் போல, இப்படித்தான் நான் நினைக்க வேண்டும், நினைத்துவிட்டால் வெற்றி, இப்படி நான் நினைத்து நிற்குமாறு நீ நினைத்துவிடு என்று வேண்டிக் கொள்ளுகின்ருர். அப்பரடிகள் மாற்றிக் கேட்டது போல, திருமாளிகைத் தேவரும் படிநிலை வளர்ச்சியாகக் கொண்டு போகாமல் முடிநிலை வளர்ச்சியாகவே அமைத்துக் கூறும் நயம் சிந்தித்து உணரற்பாற்று.

இவ்வமைப்பில் அறிவானுடன் உடனுய்க் கலந்து நின்று காணும் உபகாரம்; அறியப்பெறும் பொருளுடன் வேருய் நின்று

காட்டும் உபகாரம்; அறிவாய் அறிவானாக நின்று விளைந்த அறிவின் வன்மை மென்மைகளைக் கண்டு, பின் இவ்வுயிருக்கு உரிய பக்குவ முதிர்ச்சிக்குத் தேவையானது என்ன என்பதையும் கண்டு நிற்கிற காணும் உபகாரம் ஆகிய மூன்றையும் உள்ளடக்கி, அவைகளைப் படிமுறையில் வளர்த்திச் செல்லாதே, முற்ற முடிந்த நிலையில் தொண்டனாகிய யான் இவ்வாறு செய்யுமாறு, அறியுமாறு, சொல்லுமாறு நீ செய்யவும், அறியவும், சொல்லவும் வேண்டும் எனக் கேட்டருளுகின்றார்.

திருமாளிகைத் தேவர் இவ்வாறு தன் நினைப்பைக் கூறி, இவ்வாறு யான் நினையுமாறு நீ நினை என்று முறைமாற்றுவதன் நோக்கம் என்ன?

அவன் நினைக்க, உயிர் நினைக்கும்போது உயிரின் கருவிகள் பாசத் தன்மை வாய்ந்தவைகளாக அமைந்தன. எனவே, இந் நினைவுகளைப் பாசத்தன்மையுடைய கருவிகளோடு இணைந்து நின்று உயிர் அறிய முற்படுகிறது இயக்கும் நிலை என்று சொல்லப் பெறும்காணும் உபகாரம் ஒன்றைமட்டுமே இறைவன் மேற்கொள்ளும்போது நினைவுகள் பாசத் தன்மையுடையனவாக அமைந்துவிடுகின்றன. இதே நினைவுகளை நாம் நினைக்குமாறு அவன் நினைப்பானாயின் அவனோடு இணைந்து நிற்கும் அளவே நம்முடையதாகும். அப்போது இறையருள்—பதிப்பொருள் இந்நினைவை மேற்கொள்ளும்போது, பதிப்பொருளே கருவியாக நின்று உயிர்கள் நினைக்கின்றன என்ற நிலை உண்டாகும். அதுவே மெய்ப்பொருளைக் காணும் வழி என்று காரைக்காலம்மையாரும் உணர்த்துகின்றார். திருமாளிகைத் தேவரின் இக்கருத்தை மிகநுட்பமாக எடுத்து விளக்குகின்றார் மெய்கண்டார்.

> "ஊனக்கண் பாசம் உணராப் பதியை
> ஞானக் கண்ணினிற் சிந்தை நாடுக"

என்பது மெய்கண்டார் வாக்கு.

இறைவன் உடனாய்நின்று காண, காட்ட நாம் அறியும்போது ஊனக்கண் பாசம் உணரா நிலைமையே உண்டாகும். ஏனெனில் அவன் உயிரினுள் அத்துவிதமாகக் கலந்து நிற்றல் ஒன்றே செய்கிறான். ஞானக் கண்ணினிற் சிந்தை நாடுதல் என்பது, பதிஞானம் நினைக்க, அதனை உயிர்கள் நம் சிந்தையில் நாடிக் காணுதல், என்ற பொருளை உடன்கொண்டது. இங்கே மூன்று நிலைகள்; ஆயினும் நினைவு ஒன்று.

நினைவுகளைத் திருமாளிகைத் தேவர் தனித்தனியே கூறிவிட்டார், நினைவுகளை இறைவன் தனியே நினைக்கலாம். இது முதல் நிலை. இதனால் உயிர்களுக்கு எப்பயனும் இல்லை. இதே நினைவுகளை உயிர்கள் நினைக்கலாம்; அதற்கு இறைவன் உயிரினிடத்தே அத்துவிதக்கலப்பாக நின்று இயக்கலாம். இது இரண்டாம் நிலை. இந் நிலையில் இறைவன் நிற்கவும், உயிர்கள் வேறு கருவிகளையும் உடன் கொள்வதால், அவை பாசப்பிணிப்புடையவை ஆகையால் முழுமை

யாகப் பதியறிவை அடைய முடியாது. அடுத்தநிலை மூன்றும்நிலை. இங்கே அதேநினைவுகளைப் பதிப்பொருள் நினைக்கிறது. நினையுமாறு நினை என்ற வகையில் அத்துவிதக் கலப்பு ஒப்பப்பெறுகிறது. என் நினைப்பில் நீ அடங்கி இயக்குவதைவிட, உன்நினைப்பில் நான் அடங்கி, உன்னையே கண்ணாகக் கொண்டு, உன்னையே காண வேண்டும் என்ற அமைம்பில் உன்னுள் நான் அத்துவிதக் கலப்பில் நின்று, உன்னையே காணவேண்டும் என்று வற்புறுத்து முகத்தால் "நினையுமா நினையே" என்ற தொடரமைப்புக்களை எடுத்துக் காட்டியருளினர். காணும் உபகாரம், காட்டும் உபகாரம் முதலியவை மேலும் பதின்மூன்றும் தலைப்பில் விளக்கப்பெறும். இவைகளை உடன் கொண்ட மெய்கண்டார்,

"ஊனக்கண் பாசம் உணராப் பதியை
ஞானக்கண்ணினிற் சிந்தை நாடி
உராத்துனைத் தேர்த்தெனப் பாசம் ஒருவத்
தண்ணிழலாம் பதி விதி எண்ணும் அஞ்செழுத்தே"

என்பதனல், மெய்ப்பொருளைத் திருவருளாற் காணுதல் என்ற ஒன்று மட்டுமே அன்று, அவ்வாறு காணப்புகின் பாசம் தாமே கழியும். நாமாக முயன்று நீக்கியும் நீக்கலுறுப் பாசம் தாமே ஒருவும் என்றூர்.

இவ்வகையில் பதியானவன் நிழலாக இருக்க, அந்நிழலுள் ஒடுங்கிப் பயன் பெறுபவைகளாக உயிர்கள் விளங்குகின்றன. உயிர்களை இடமாகக் கொண்டு இறைவன் உபகாரம் செய்தல் இல்லாமல், பதிப்பொருளில் அடங்கி, உயிரானது அத்துவிதக் கலப்பையெய்தி, தொண்டனாக இணைந்துவிடுகிறது. அத்துவிதத்திலும், இங்கே சிவப்பதத்தினுள், நமப்பதம் ஒடுங்கிய நிலையே பேசப்பெறுகிறது.

அடுத்து, மேல் எட்டாம் சூத்திரத்தில் குருவாக வந்து நின்றவர் செய்தருளிய மாற்றம் "சிவாயநம" எனப்பெற்றது. அவ்விதியே இந்நூற்பாவினல் செய்முறையாக்கப் பெறுகிறது. 'சிவப்பதமேயாய நமப்பதம்" எனக்கொள்ளும் அத்துவிதமே 'விதி' என எண்ணுதல் வேண்டும். இவ்வகையில் எண்ணத் துணைநின்றது திருமாளிகைத் தேவர் பதிகங்களை உள்ளிட்ட ஒன்பதாம் திருமுறையே என எண்ணுதல் தெளிவாம்.

## முடிப்புரை

மேலே கூறப்பெற்றவைகளால், ஒன்பதாந் திருமுறையானது சிறப்புக்கள் பலவற்றைக் கொண்ட திருமுறை என்பதும், சித்தர் மரபுடன் இணைந்த ஒன்று என்பதும், திருமாளிகைத்தேவர் "தொடருமா தொடரே" என்பது போன்று கூறப்பெறும் பதினெரு தொடர்களும் நினைவு, சொல், செயல் ஆகிய மூன்றையும் கொண்டவை என்பதும், 'தொண்டனேன்' என்பது தனித்த பொருளுடையது என்பதும், "நினையுமாறு நினை" எனச் சொல் மாற்றம் செய்தது தத்துவவிளக்கம் தழுவிய ஒன்று என்பதும், தண்ணிழலாம் பதி, விதி எண்ணும் அஞ்செழுத்தே என்ற தொடர்களின் பொருள்களும் விளக்கப்பெற்றன.

# 12. அவனே தானே ஆகிய அந்நெறி

*முன்னுரை*

'திருத்தொண்டத்தொகை' பாடிய சுந்தரர் தடுத்தாட்கொள்ளப் பெற்றபின் திருவெண்ணெய் நல்லூர் அருட்டுறையுள் புகுந்து, தம்மை அடிமையாக்கிக் கொள்ள வந்த வெண்ணெய் நல்லூர்ப் பித்தனைத் தேடுகிறார். இறைவனும் தோன்றி, தம்மைத் தமிழாற் பாடும் தொண்டினை மேற்கொள் எனக்கூற, "உம்மைப்பற்றி யான் என்ன சொல்லிப் பாடுவேன்" என்று கேட்க, முன்னே எம்மைப் 'பித்தன்' என்றாயே, அதையே வைத்துப்பாடுக என்றான். உடனே ஆரூரர் 'பித்தா' எனத்தொடங்கிப் பாடுகிறார். இதன் மூலம் நாம் தெளிந்து கொள்ளும் ஓர் உண்மை உண்டு. இறை என்பது உன்னால் ஆராய்ந்தறியப் பெற்று, அது வாக்கிறந்து, மனமிறந்து, கடந்து நின்று, எல்லாமாய் அல்லதுமாய் இருந்த பரம்பொருள் என்று உன்னாற் சொல்லும் பொருள் அன்று. இத்தகைய அறிவாராய்ச்சியை விடுத்து, அன்பினால் நீ என்ன சொல்கிறாயோ, அதனுட் புகுந்துகொண்டு, ஆமாம்! ஆமாம்! நீ சொன்ன அப்பெயருக்குரியவன் தான் நான் என்று தன்னை ஆக்கிக்கொள்ளும் பொருளே இறை என்பதை உணர வேண்டும். இதனை,

"சொல்லும் இடமன்று சொல்லப் புகும் இடம்
எல்லை சிவனுக்கு என்று உந்தீபற
என்றால் நாம் என் செய்கோம் உந்தீபற"

எனத் திருவுந்தியார் (29) என்ற சாத்திரநூல் கூறுகிறது.

இவ்வாறு, ஒரு சொல்லை எடுத்துக் கொடுத்துப் பாடவைத்தது ஒருமுறை. சுந்தரரே மீண்டும் ஒருமுறை இதே கேள்வியைக்கேட்கிறார். அடியவர் பெருமையைப் பாடுக என்று இறைவன் திருவாரூரிற் கூறியபோது, எனக்கு ஒன்றும் தெரியாதே, என்ன சொல்லிப் பாடுகேன் என்றபோது ஒரு வார்த்தையை எடுத்துக் கொடுத்துப்பாடவில்லை. தானே ஒரு வரி பாடுகிறான். தன்னைப் பாடுவதற்கு ஒரே ஒரு சொல்லை மட்டும் எடுத்துக் கொடுத்தான். ஆனால், தன் அடியவரின் பெருமையைப் பாடுவதற்கு ஒருவரியையே எடுத்துக்கொடுக்கிறான். இவ்வாறு இறைவனும் நம்பியாரூரருமாக இணைந்து பாடிய திருத்தொண்டத் தொகையில், பெருமான் என்ற பொருள்தரும் 'பிரான்' என்ற சொல்லாற் பாராட்டப்பெறுகின்ற அருளாளர்கள் இருவர். ஒருவர் ஞானசம்பந்தர்; மற்றவர் திருமந்திரம் அருளிய திருமூலர்.

"வம்பறு வரிவண்டு மணநாற மலரும்
மதுமலர்நற் கொன்றையான் அடியலாற்பேணு
*எம்பிரான் சம்பந்தன்* அடியார்க்கும் அடியேன்
ஏயர்கோன் கலிக்காமன் அடியார்க்கும் அடியேன்
*நம்பிரான் திருமூலன்* அடியார்க்கும் அடியேன்"

என்பது சுந்தரர் அருளிய திருத்தொண்டத் தொகையின் ஐந்தாவது செய்யுள்.

இனி, திருநாரையூர்ப் பொல்லாப் பிள்ளையாரின் திருவருளை இளம்பருவத்தேயே பெற்று, மறைந்துகிடந்த தேவாரப்பதிகங்கள் வெளிப்படக் காரணமாயிருந்தவரும் தேவாரங்களைத் தொகுத் தமைத்த அருளாளருமாகிய நம்பியாண்டார் நம்பிகள் சுந்தரர் பாடிய திருத்தொண்டத் தொகையை அடியொற்றி, **திருத்தொண்டர் திருவந்தாதி** என்ற நூல் அருளினார்கள். அதனுள்,

"குடிமன்னு சாத்தனூர்க் கோக்குலம் மேய்ப்போன் குரம்பை புக்கு
முடிமன்னு கூனற் பிறையாளன் தன்னை முழுத்தமிழின்
படிமன்னு வேதத்தின் சொற்படியே பரவிட்டு *என் உச்சி*
***அடிமன்ன வைத்த பிரான்*** மூலனாகின்ற ***அங்கணனே***

என்று திருமூலரைச் சிறப்பிக்கின்றார்கள். இச்செய்யுளின்படி நம்பி யாண்டார் நம்பிகள் திருமூலரை ஞானஆசாரியனாகக் கொண்டு, அவருடைய திருவடிகளைச் சூட்டப் பெறுதலாம் தீட்சை பெற்றுச் சிறந்தவர் என்பது கொள்ளக் கிடக்கின்றது.

*தவராசயோகி* என்றும், *சிவராசயோகியென்றும்* பாராட்டப் பெறும் திருமூலரே வேதம் ஆகமம் என்ற இரண்டையும் ஒன்று என இணைத்த முதல் அருளாளர். "என்னை நன்றாக இறைவன் படைத் தனன், தன்னை நன்றாகத் தமிழ் செய்யுமாறே" எனத் தோற்றுவாய் செய்து கொண்டு, ஓராண்டு முழுவதும் சிவயோகசமாதியில் நின்று பெற்றுத் துய்த்த பேரின்ப அனுபவத்தை ஒரு திருமந்திரச் செய்யு ளாக—சிவநெறிச்சாத்திரமாகத் தெளிய எடுத்துக் கூறியருளி யவர்கள். ஆகமக் கருத்துக்களை அனுபவப் பொருளாக ஆக்கி, அவ்வனுபவத்தின் தெளிவாக அமைக்கப் பெற்றவைகளே திருமந் திரப் பாக்கள்.

தோத்திர நூலாகவும் சாத்திர நூலாகவும் அமைந்த பெருமை திருமூலர் திருமந்திரத்துக்கே உண்டு. சைவசித்தாந்தக் கருத்துக்களை அரண் செய்து நிற்கும் மெய்ப்பொருளியற் கருத்துக்களை வெளிப் படையாக எடுத்துக்கூறிய தத்துவஞானி திருமூலரே. இதனை,

"பதி பசு பாசம் எனப் பகர் மூன்றில்
பதியினைப் போல் பசு பாசம் அனாதி
பதியினைச் சென்று அணுகாப் பசு பாசம்
பதியணுகிற் பசு பாசம் நில்லாவே"

என்ற திருமந்திரச் செய்யுளால் நன்கு தெளியலாம்.

திருவாசகமும் திருமந்திரமும் முறையே தோத்திர நூலாகவும் சாத்திர நூலாகவும் கொண்டொழுகி வருவது சைவசமய மரபு. வடலூர் வள்ளல் இராமலிங்கசுவாமிகள் இத்தகைய மரபினை மேற் கொண்டிருந்தவர்கள் என்பது வரலாற்றுண்மை.

திருஞானசம்பநதருடைய தேவாரங்கள் ஒருநெறியமனம் வைத்துணர்ந்து அருளப் பெற்றவைகள் என்ற கருத்துடன் மந்திர நுட்பங்கள் பலவும் தன்னகத்தே கொண்டும் விளங்குவது என்ற கருத்து முன்பேயும் விளக்கப் பெற்றது. ஆயினும் 'மந்திரம்' என்ற பெயராலேயே வழங்கப்பெறுவது 'திருமந்திரம்' ஒன்றே. திருமூலர் அருளிய தமிழ் மூவாயிரத்துக்கும் 'திருமந்திரம்' என்பதே பெயர்.

''நிறைமொழி மாந்தர் ஆணையிற் கிளந்த
மறைமொழி தானே மந்திரம் என்ப''

என்ற இலக்கண முறைப்படி, இன்றும் விளங்கும்நூல் திருமந்திரமே. திருமந்திரம் மூவாயிரத்துள்ளும் உபதேசம் முப்பது ; மந்திரம் முந் நூறு பொதிந்துள்ளன என்ற கருத்து உண்டு. இதனை

மூலன் உரைசெய்த மூவாயிரந் தமிழ்
மூலன் உரைசெய்த முந்நூறு மந்திரம்
மூலன் உரைசெய்த முப்பது உபதேசம்
மூலன் உரைசெய்த மூன்றும் ஒன்றுமே''

என்ற திருமந்திரப் பாடலால் உணரலாம். இவ்வாறன்றி, முப்பது உபதேசம் அடங்கிய நூலொன்றையும், முந்நூறு மந்திரங்கள் அடங் கிய நூல் ஒன்றையும் தனித்தனியே செய்துள்ளார் என்றும் கூறுவர் சான்றோர்.

இத்தகு மேன்மை வாய்ந்த திருமந்திரத்தைப் பத்தாந் திருமுறை யாக அமைத்து இணைத்தது நம்பியாண்டார் நம்பிகளே என்ற கருத்து அதிக எண்ணிக்கையினரால் ஒத்துக்கொள்ளப் பெற்ற ஒன்று.

திருமுறைத் தொகுப்பு என்ற அடிப்படையில் நோக்கும்போது தில்லையிலே மறைத்து வைக்கப் பெற்றிருந்த பண்சுமந்த திருப்பதிகங் களை மட்டுமே தொகுக்கும் வகையில் முதல் ஏழு திருமுறைகள் அமைந்தன. காரைக்காலம்மையார் பிரபந்தங்களும் பிறவும் காலத் தால் முதல் ஏழு திருமுறைகளுக்கும் முற்பட்டனவே யாயினும், மறைந்திருந்து பின் வெளிப்பட்டனவாகிய திருப்பதிகங்களை மட்டுமே முன்னர்த் தொகுத்தார்கள். திருப்பதிகம் போலவே உள் ளத்தை உருக்கும் இசையமைப்பும் பொருளமைதியும் உடையன வாய் நின்ற திருவாசகம், திருக்கோவையார் என்ற இரண்டையும் எட்டாந் திருமுறையாகவும், முதல் ஏழு திருமுறைகளைப் போலவே இசைப்பாடல்களாய் விளங்கிய திருவிசைப்பா, திருப்பல்லாண்டு

ஆகியவை ஒன்பதாந் திருமுறையாகவும் அமைக்கப் பெற்றன. திருமூலர் திருமந்திரம் காலத்தால் மிக முற்பட்டதாயினும், தோத்திரமே யன்றிச் சாத்திரமாகவும் விளங்கிய பெருமையை உடையதாதலின் பத்தாந் திருமுறையாக வைக்கப் பெற்றது.

திருமந்திரமே இன்றுள்ள சாத்திரநூல்கள் எல்லாவற்றிற்கும் மூலமாக நின்ற முதல்நூல் என்று கொள்ளுதல் வேண்டும். *பன்னிரு திருமுறை வரலாறு* இரண்டாம் பாகத்தில் பக்கங்கள் 479முதல் 507 வரையில், திருமந்திரத்தை மூலநூலாகக் கொண்டு ஏனைய மெய்கண்ட சாத்திரங்கள் எவ்வாறு தத்துவக் கொள்கையை உருவாக்கியுள்ளன, என்பதை விரிவாக விளக்கியுள்ளார். மேலும், அவர் "இதுகாறும் எடுத்துக்காட்டிய ஒப்புமைப் பகுதிகளைக் கூர்ந்துநோக்குங்கால், சிவஞானபோதம், சிவஞான சித்தியார் முதலிய சைவ சித்தாந்த சாத்திரங்களாகிய மெய்கண்ட நூல்கள் எல்லாவற்றிற்கும் சைவத் திருமுறை பன்னிரண்டனுள் பத்தாந் திருமுறையாக விளங்கும் இத் திருமந்திரமே முதல் நூலாகத் திகழும் சிறப்புடையது என்பது நன்கு புலனுதல் காணலாம்" என்று எழுதுகிருர். எனவே, திருமந்திரம் தமிழகத்தில் விளங்கிய ஒரு சாத்திர முதல்நூல் என்று கொள்ளுவதில் இழுக்கில்லை.

திருமந்திரத்துக்கே உள்ள சில தனிப்பெருமைகளை நாம் உளங்கொளல் வேண்டும்.

திருக்கயிலையில் நந்தியெம்பெருமானிடம் ஆகமப் பொருள்களையெல்லாம் ஐயமறக் கேட்டுணர்ந்த சிவயோகியார் தென்னுட்டின்கண் விளங்கும் அகத்தியனுரைக் காணவேண்டும் என வருகிருர். அவர் தென்னுடுநோக்கி வருவதன் காரணம் அகத்தியனுரைக் காணவேண்டும் என்பதே. அகத்தியரைக் காணவேண்டும் என்று வருகிற சிவயோகியாருக்குத் தமிழில் நூல் செய்யவேண்டும் என்ற விருப்பம் இருந்ததாகத் தெரியவில்லை. மூலன் என்ற இடையன் உடம்பில் புகுந்தபின், அவ்வுடம்பை இடமாகக் கொண்டு நிட்டை கூடியிருந்தார். முன்னமேயே அட்டமாசித்திகளையும் இயற்றும் வல்லமை பெற்றிருந்தவரே அவர். ஆகமப் பொருள்களையெல்லாம் கேட்டுணர்ந்த சான்றேரே அவர். ஆயினும், மூலன் உடம்பிலிருந்து கொண்டு நிட்டை கூடிய காலத்து, முன்னில்லாத ஒரு புதிய அனுபவம் அவருக்கு உண்டாயது எனக் கொள்ளவேண்டும். திருமூலர் தாம் மேற்கொண்ட மூலன் உடம்பினை "எனது முன்னை நற்றவத்தின் பயனுக, இறைவனுல் எனக்கு நன்ருகத் திருத்தமாகச் செய்தளிக்கப் பெற்ற நல்ல படைப்பாகும் இது என்று பாராட்டுகிருர். முன்னை உடம்பைவிட—இறைவனுல் மறைத்துவிடப்பெற்ற சிவயோகியாராக இருந்த உடம்பைவிட—இப்போது ஏற்றிருக்கும் மூலன் உடம்பு எனக்கு நலந்தரும் வாழ்வினை நல்கும் சிறப்புடைய உயர்ந்த உடம்பு எனக் கூறி,

"பின்னைநின்று என்னே பிறவிபெறுவது
முன்னை நன்ருக முயல்தவம் செய்கிலர்

*என்னை நன்றாக இறைவன் படைத்தனன்*
*தன்னை நன்றாகத் தமிழ்செய்யுமாறே''*

*(திருமந்திரம்—81)*

என்ற இத்திருமந்திரப் பாடலை அருளிச் செய்கின்றார். இங்கே ''தன்னை நன்றாகத் தமிழ் செய்யுமாறு, என்னை நன்றாக இறைவன் படைத்தனன்'' என்பதன் குறிப்பு, இறைவனைத் தமிழாற் பாடுதற்கு என்று பலரும் பொருள் கொண்டனர். இறைவனை இன்பப் பொருளாக அனுபவித்தல் என்பதையே ***தமிழ் செய்தல்*** என்று குறிக்கிறார் திருமூலர். ''தன்னை நன்றாகத் தமிழ் செய்யுமாறு என்னை நன்றாக இறைவன் படைத்தனன் என்ற அவர் வாய் மொழியின் அமைப்பு, இறையனுபவத்துக்கு இவ்வுடம்பு ஏற்ற பெற்றி, அமைப் புடையதாக இருக்கிறது என்று குறிப்பிடுகிறாரேயன்றி, அட்டமா சித்திகளைப் பெற்ற காரணத்தால் தமிழிற்பாடுதல் என்பது சிவயோகி யாராக இருந்த உடம்பைக் கொண்டும் அவரால் செய்ய முடியும். ''என்னை நன்றாக இறைவன் படைத்தனன், இதைவிட வேறு பிறவி எனக்கு எதற்காக? இத்தகைய பிறவியைப் பெறுவதற்குத் தவஞ் செய்கிலரே பலரும்'' என்று அவர் பாராட்டுவதற்குக் காரணம் அவர் இப்போது ஏற்றிருக்கும் உடம்பானது இறைவனை அனுபவப் பொருளாக ஆக்கி, இன்பப்பொருளாகத் துய்ப்பதற்கு ஏற்புடைய தாக இருப்பது என்ற காரணத்தாலேயே. இவ்வகையில், தாம் இது வரையில் கேட்டறிந்த பொருள்களையெல்லாம், மூலன் உடம்பில் நின்று அனுபவப் பொருளாக்கினார். அறிந்தவைகளெல்லாம் அனு பவங்களாகத் துய்க்கப்பெற்றன. துய்த்த அனுபவங்களின் தெளிவே திருமந்திரப் பனுவலாக வெளிப்பட்டது எனக்கொள்ள வேண்டும். சிவயோகியார் முன்னே கேட்டறிந்தவை வேதமாகுக, ஆகமமாகுக. அவையெல்லாம் அனுபவமாக—தமிழாக நின்று துய்க்கப் பெற்ற பின்னரே திருமந்திரமாக வெளிப்பட்டது எனக்கொள்ள வேண்டும். இவ்வகையில் திருமூலர் சொல்லும் சில ஒற்றுமைகளைக் கவனிக்க வேண்டும்.

வேதம் ஆகமம் என்ற இரண்டும் ஒன்றே. அவை இரண்டற் கும் பேதம் இல்லை என்ற குரலைத் தமிழகத்தில் முதன்முதலில் முழக் கியவர் திருமூலரே. வேதம், ஆகமம் என்ற இரண்டற்கும் உள்ள ஒரு தொடர்பை வேறுவகையில் விளக்கிக் காட்டுகிறார் மாணிக்க வாசகர். வேதம் இறைவனால் சொல்லக் கேட்கப்பெற்றது. ஆகமம் என்பது இறைவன்தான் சொன்னதை, வேதத்தை, தானே செய் முறைப் பயிற்சியமையச் செய்து காட்டினான்.

*மன்னும் மாமலை மகேந்திரம் அதனில்*
*சொன்ன ஆகமம் **தோற்றுவித்து** அருளியும்*

என்ற மணிவாசகர் வாக்கினுள், தான் சொன்ன வேதத்தைத் தோற்றுவித்தல் என்பது தானே நூலாக நின்று செயற்படுத்திக் காட்டியருளுதல். இதனையே அவர் ''***ஆகமம் ஆகி நின்று அண்ணிப்***

பான்'' என்று சிவபுராணத்திலும் குறிப்பிட்டருளுவாராயினர். சிவனால் அருளப் பெற்ற கொள்கைகள் சிவம்' ஆயின ; ''சிவநெறி'' எனப்பெற்றன. சிவநெறி என அறியப்பெற்ற நெறியாக-கேட்கப் பெற்ற கேள்விச் செல்வமாக-கருத்துக்கு உரிய கருத்துப் பொருளாக நின்ற அதனை வாழ்க்கைப் பயிற்சி முறையாக-அனுபவ முறையாக அமைத்துச் செயற்படுத்திக் காட்டிய காலத்தே சிவன், சைவனாக நின்றான். சிவநெறியைத் தானே பயிற்சி செய்து காட்டும் செயல் துறையாளனாக வந்தான். அவன் அப்போது 'சைவன்' ஆனான்' அறிமுறைக் கொள்கை செயல்முறைத் துறையாக மாற்றம் பெறு கிறது. சிவன் சைவனாக வருகிறான். இதனையே, மாணிக்கவாசகர்,

''ஐயாறதனிற் சைவன் ஆகியும்''

என்று குறிப்பிட்டருளுவாராயினர். இதனையே தெய்வச் சேக்கிழார்,

வேதநெறி தழைத்தோங்க, மிகுசைவத்துறை விளங்க

என்று எடுத்துக் காட்டினார். மொழி பற்றிய சர்ச்சையில் வேதம் என்ற சொல் அமையப் பெறவில்லை. அறியப் பெறுவன, கருத்துப் பொருளாக உள்ளவை, கொள்கையாக உள்ளவை எல்லாமே வேத நெறி. அவைகளையே செயல்முறைப்படுத்தும்போது 'சைவத்துறை' என்று குறிப்பிட்டிருக்கின்றார்.

அறியப் பெற்ற கொள்கை சிவமாகவும், செயல் முறைக் கொத்த தாய் அமைக்கப் பெற்ற அமைப்புநிலையே சைவத்துறையாகவும் கொள்ளப் பெற்றன. இவையிரண்டும் துணையாக நிற்க, அப்பரம் பொருளைத் துய்த்துப் பேரானந்தம் பெறுதல் என்பதே தமிழ் செய் தல். அவ்வாறு இன்பப் பொருளாக இறைவனை அனுபவிப்பதற்குத் தமிழ்ப் பிறவியாகிய மூலன் உடம்பு மிகவும் துணை செய்தது எனக் கூறி, அவ்வின்பத் திளைப்பில் வெளிவந்தவைகளே திருமந்திரப் பாக்கள் என்பதைத் திருமூலரே விளக்கிக் காட்டினார். இவ்வகை யில் வேதம், ஆகமம், வடமொழி தமிழ் ஆகியவைகளை இணைத்துக் காட்டி, அறிதலும் துய்த்தலும் என்ற இருவகைகளே இவைகள் என்று கூறி ஒற்றுமைப் படுத்திக் காட்டினார். இனி, திருமந்திரம் பத்தாந் திருமுறையாக அருளாளர்களால் நிறுத்தப் பெறுகிறது என் பதை உளங்கொண்டு, மெய்கண்டார் நமக்கு அருளும் சாத்திர நுட்பத்தை ஓர்ந்து கொள்ளுதல் வேண்டும். அவ்வகையில், மெய் கண்டார் கொள்வதற்குரிய மூலமாக எவ்வாறு திருமந்திரம் இருக் கிறது என்பதையும் நாம் உணர்தல் வேண்டும்.

'சிவம்' என்ற சொல்லைப் பரம்பொருளுக்கு உரிய சொல்லாக எடுத்து வழங்கிய முதல் நூலாகத் திருமந்திரத்தைக் கொள்ளலாம். 'சைவம்' என்பதை ஒரு சமயமாகக் கொண்டு வாழ்ந்த சைவ வாதியை நாம் மணிமேகலையில் காணமுடிகிறது. திரிபுரம் எரித்த விரிசடைக் கடவுள் என்பதுபோலத் தொடர் மொழிகளால் அப்பரம் பொருள் அனுபவநிலையால் உணர்த்தப் பெற்றாலும், 'சிவம்' என்ற சொல்லாற் குறியீடுசெய்து அப்பரம் பொருளை வழங்கிய பெருமை திருமூலரையே சாரும்.

"சிவனோடு ஒக்கும் தெய்வம் தேடினும் இல்லை"
"குருவே சிவமெனக் கூறினன் நந்தி"

என்பவைகளெல்லாம் அனைவரும் எளிமையிற் கூறும் பழக்கப் பாட்டிற் குரியனவாகிய திருமந்திர வாக்குக்கள். இனி, திருவைந் தெழுத்தின் விளக்கமாகச் 'சிவ' என்ற சொல்லை அமைத்துக் காட் டிய நயமும் சிந்திக்கற்பாலது. இனி, பரம்பொருளை மந்திரமும், தந்திரமும், மருந்துமாக இருக்கிறான் என்று கூறும் அப்பரடிகள் திருவாக்கைப் போலவே திருமூலர் பரம்பொருளை உபதேசம், மந்திரம், தமிழ் என அமைத்துக் கொண்டு கூறினர் என்பது நுனித்து உணரற்பாலது. இதனாலேயே அவர்,

"மூலன் உரைசெய்த மூவாயிரந் தமிழ்
மூலன் உரைசெய்த முந்நூறு மந்திரம்
மூலன் உரைசெய்த முப்பது உபதேசம்
மூலன் உரைசெய்த மூன்றும் ஒன்றாமே"

என்று (3046) அருளினர். இவ்வகையில் 'சிவம்' என்ற சொல்லையே அமைத்து இம்மூன்றையும் நுட்பமாக விளக்கியுள்ளார்.

திருவைந்தெழுத்தினை விளக்கும்போதும் 'சிவம்' என்ற பரம் பொருளை மந்திர அடிப்படையில் நிறுத்தி விளக்கிக் காட்டி, அதனை உபதேசமாகவும், தமிழாகவும் அமைத்துக் காட்டியுள்ளார்.

திருமூலர் தம்முடைய திருமந்திரநூலில் முதல் தந்திரத்தில் முதல் தலைப்பாக 'உபதேசம்' என்ற ஒன்றைக் கொள்கிறார். அதனுள் முப்பது பாடல்கள் உள்ளன. அவற்றினுள் பரம்பொருள் ஏழு பெயர்களாற் சுட்டப்பெறுகின்றது.

நந்தி, பதி, ஆரியன், சதாசிவன், குரு, அரன், சிவன் என்பவை களே அவை. அவர்களின் செயல் முறைகளைக் குறிப்பிட்டு நோக் கினால்,

*நந்தி* — களிம்பு எனப் பெறும் மலத்தை அழித்தல், உடம் பைக் கோயிலாகக் கொண்டு குடியிருத்தல், தாயாக நின்று மும்மலத்தை மாற்றுதல், தயவு என்னும் குளமாக நிற்றல், சதாசிவன் ஐம்புலன்களின் தீமையை மாற்ற, அங்கே நன்மையை வைத்தல், யோகம் உரைத்தல், போதம் தருதல்.

*பதி* — அருட்கண்ணை விழிப்பித்து, களிம்பு அணுகாத கதிரொளி காட்டி, பளிங்கிற் பவளம் பதித்தல்— உயிரில் சிவத்தைப் பதித்தவன். இதனாலேயே 'பதி' என்ற பெயர் வந்தது போலும்.

*ஆரியன்* — தோற்றத்தால் மலமறுப்பவன்; சூரியனாய் இருளை ஓட்டுபவன்.

| | |
|---|---|
| ***சதாசிவம்*** | தமிழ் என்று சொல்லப் பெறும் இன்ப அனு பவத்துக்குரிய ஐந்து இடங்களைத் தோற்றி, பின் ஐம்புலன்களாக மாற்றி, பின் அவற்றின் தீமைகளை மாற்றியவன். |
| குரு | அறிவினுள் அழியும் அறிவு என்பதுபோல ஒரு குறியை அறிவிப்பவன். |
| ***சிவம்*** | மூலவித்து. கலப்புக்குரிய பொருள். |

என்று இவ்வாறு விளக்கிக் காட்டுவதை உணரலாம். இவ்வாறு உபதேசமும் மந்திரமுமாக அமைந்த 'சிவம்' என்பது தமிழாக, அனு பவமாக அமையும்போது 'சாயுச்சியம்' என்று குறிப்பிடுகின்ருர். அதற்குரிய இரண்டு செய்யுட்கள் கீழே கொடுக்கப் பெறுகின்றன.

வெளியில் வெளிபோய் விரவிய வாறும்
அளியில் அளிபோய் அடங்கிய வாறும்
ஒளியில் ஒளிபோய் ஒடுங்கிய வாறும்
தெளியும் அவரே ***சிவசித்தர்*** தாமே

என்பது உபதேசம் 12 ஆம் பாடல்

''சைவம் சிவனுடன் சம்பந்த மாகுதல்
சைவம் தனையறிந்தே சிவம் சாருதல்
சைவம் சிவம் தன்னைச் சாராமல் நீங்குதல்
சைவம் சிவானந்தம் சாயுச்சியமே''

என்பது 1513 ஆம் பாடல்.

மேலே குறிப்பிடப் பெற்ற இரண்டு பாடல்களிலும் இருவகைக் கலப்புக்கள் பேசப் பெறுகின்றன. அதே சமயத்தில் கலப்பின் பொதுத் தன்மையும் பேசப் பெறுகிறது. முதலில் கலப்புத் தன் மையை நோக்குவோம்.

உபதேசப் பகுதியில் அமைத்த பாட்டின்மூலம் கலப்புத்தன்மை மூவகையில் அமைகிறது, என்பதை உணரலாம். வெளி, அளி, ஒளி என்ற மூன்றும் ஒன்றனுள் ஒன்று கலக்கின்றன. ஆனல், அவைகலக்கும் கலப்பு நிலையும் மூன்று சொற்களால் சுட்டப் பெறு கின்றன.

வெளியில் வெளி கலப்பதை விரவுதல் என்றும், அளியில் அளி கலப்பதை அடங்குதல் என்றும், ஒளியில் ஒளி கலப்பதை ஒடுங்கு தல் என்றும் சுட்டிக் காட்டுகிறது.

மேலே குறிப்பிட்டவைகளைத் தெளிந்தவர் வேறு; துய்த்தவர் வேறு. தெளிந்தவர்களைச் '' சிவசித்தர் '' என்று குறிப்பிடுகிருர். இவைகளைத் துய்த்தவர்களைச் 'சாயுச்சியர்' என்று குறிப்பிட்டாலும், அக்கலப்பு இருவகையாக உள்ளது என்றும் விளக்குகின்ருர்.

*வெளியில் வெளிபோய் விரவுதல்* கட்டு, தடை இவை நீங்கிய நிலேயே 'வெளி' எனக் குறிக்கப்பெறும். அகண்டன் என்ற சொல் தரும் பொருள்போல சிவபரம்பொருள் கண்டிதப்படாத அகண்ட பரானந்தப் பொருளாக அமைந்திருக்க, அதனுள் ஆன் மாவானது சென்று விரவுதல். தடைகளற்ற வியாபகநிலேயில் ஆனந்தத்தில் கலத்தல். விரவுதல் என்பது துய்க்கும் எண்ணத் துடன் பொருந்தியிருத்தல் என்பதாம். அனுபவிக்கும்போது அறிவுங் கடந்த சுகமாக அமையினும், அனுபவிக்கப் பெற்ற இது இன்ன தன்மையது எனப் பின்னர் அறிதற்கேற்பப் பொருந்தும் நிலேயே விரவுதல்.

*அளியில் அளிபோய் அடங்குதல்* பெருங்கருணையில் சிறி தளவு சென்று அடங்கிவிடுதல். உலகத்து உயிர்களெல்லாம் உய்ய வேண்டும் என்று பொதுமையில் செயற்படும் பேராக் கருணையை உன்னும்போது அதனுள் தான் அவனே அடைய எண்ணிய எண்ணம், செயல் ஆகிய அனைத்தும் ஒன்றுமற்றது என அடங்கிப் போய்விடுதல். எனவே பரம்பொருளின் கருணை வடிவாய் நின்று செயலாற்றும் முடிவிலாற்றலில், தான் மேற்கொண்ட செயல் அடங்கி அழிந்துவிடுதல். இங்கே தோன்றும் ஆற்றற் பொருண் மையை உணர்த்தும் உபதேசமே "அவனன்றி ஓரணுவும் அசை யாது" என்பது.

*ஒளியில் ஒளிபோய் ஒடுங்குதல்* பேரறிவுக்குமுன் சிற்றறிவு ஒருபயனும் அற்று ஒடுங்கிவிடுதல்—தன்வலியிழத்தல் என்பதாகக் கொள்ள வேண்டும். ஒளி என்பது பரஞ்சோதி; ஒளியும் அறிவும் இணைந்த நிலே, ஒளியும் அறிவும் ஒன்றே.

இவ்வாறு ஆனந்தம், செயல், அறிவு என்ற மூன்றுலும் கலக்கும் கலப்பே உபதேசப்பகுதியில் சொல்லும் கலப்பு. இக்கலப்பினைத் தெளிவாக அறிந்து கொள்பவர் "*சிவசித்தர்*" என்ற பெயர் பெறு வர் என்று குறிப்பிட்டார். எனவே, சிவம் இம்மூன்றுக நின்ற கலப்புக்குரிய பொருள் என்றும் சித்தர் எனப்பெறுபவரும் அக் கலப்புக் குரியவர்களேயாயினும், சித்தத்தில் அக்கலப்பை அறியும் அவ்வளவிலேயே நிற்கின்ற காரணத்தால் "சிவசித்தர்" எனப் பெற்றுர்.

அடுத்து, கலக்கும் நிலே *சாயுச்சியம்*. அது இரண்டுவகை. சிவத்தை அறிந்த நிலேயில் சிவசித்தம், சிவசித்தர் என்பது உபதேசப்பகுதியிற் குறிப்பிடப்பெற்றதுபோல சைவம் என்பது சிவத்துடன் கலந்த நிலே என்று பேசுகிருர். சிவன் என்ற பொருளே மூவகையில் நின்ற கலப்புக்குரிய பொருள் என அறியும் நிலேயில் உள்ளவர் ***சிவசித்தர்***. சிவத்துடன் துய்ப்புநிலேயில் சம்பந்தம் பெற்றுவிட்டால் சைவம். எனவே, சிவம் அறியும் முறை; சைவம் அடையும் முறை. அடையும் முறையிலும், அறிந்தபிறகே அடையும் முறையையே சைவம் என்று சொல்ல வேண்டும். சைவம் என்பது மூவகைக் கலப்பாலும் இணை

தலாயினும் ஆனத்தத்தில்—சிவானந்தத்தில் அழுந்தி நிற்றலே 'சாயுச்சியம்' என்ற சொல்லாற் குறிக்கப்பெறும்.

இச்செய்யுளின் மூன்றும் வரியின் மூலம் இருவகைக் கலப்பினைக் கூறுகிறார். சிவமானது தன்னை—உயிரைச் சார்வது ஒருமுறை. சிவம் தன்னைச் சாராமல் நீங்கிச் சென்று, சிவத்தை அறிந்து, சிவத்தைச் சார்தல் இன்னொருமுறை.

சிவம் தன்னைச் சார்ந்த நிலை என்பது கேவலநிலை. உயிரினுள் இறைவன் தன்னுடைய பெருமைகளையெல்லாம் உள்ளடக்கிக் கொண்டு, உயிரின் அறிவு, இச்சை, செயல் மேற்பட்டு விளங்கு மாறு தாம் அவற்றின் உள்ளடங்கி நின்று, அவ்வுயிருக்கு உதவி செய்யும் முறை.

இரண்டாவது முறை சுத்தநிலை. இங்கே உயிர் எப்போதும் சிவம் தன்னுள் வந்து சாராதவாறு-தனக்குத் தன்முனைப்பு ஏற்படாத வாறு தன்னைக் காத்து, தான் சிவத்தை அறிந்து, சிவத்தின் வியாபகத் துள் தன்னை ஒடுக்கிக்கொண்டு, சிவம் ஆற்றும் செயலின் வழியே தன் வலியெல்லாம் மடங்க நின்று, சிவவயத்ததாய்த் தொழிற் படுதல். இதனையே மெய்கண்டார்,

"அவனே தானே ஆகிய அந்நெறி"

என்று சிறப்பித்துக் காட்டினார். சிவத்துக்கும் உயிருக்கும் அமைந்த கலப்பால் விளங்கும் நெறி இரண்டே.

சிவம், உயிர் என்ற இருபொருட் கலப்பு —சைவம் இன்று நேற்று ஏற்பட்டதன்று. கலப்பினுள் ஒன்று மற்றொன்றைவிட மேற்பட்டுத் தோன்றுதல் என்ற வகையில் இருவகை நெறிகள் உண்டாகின்றன.

சிவத்தினுடைய அறிவு, இச்சை, செயல் ஆகியவற்றில் உயிரானது தன்னுடைய அறிவு, இச்சை செயல் கீழ்ப்படுமாறு அடக்கி, சிவமே வெளிப்பட, தான் அதனுள் அடங்கி நிற்குமேல் அதுவே சுத்த நெறி, சித்த சைவ நெறி. அதுவே அவனே **தானே யாகிய அந்நெறி.** இங்கே, தற்செயலற்று, தற்போதமற்று, நாதன் தன் செயலேதான் என்று நிற்கும் முறை உண்டாம்.

இதற்கு மாறாக, உயிரானது ஆணவத்தோடு நின்ற நிலை எனப் பெறும் கேவலத்தில் தான் உயர்ந்து நிற்க, தன்னுள் சிவபரம் பொருள் அடங்கி நின்ற நிலை. இந்நெறி கூடாது என்பதற்காகத் திருமூலர் நயம்பட அமைத்துக்காட்டியுள்ளார். சிவம் எக்காலத்தும் உயிராகிய தன்னைச் சார இடம் கொடுக்காமல், தானே சிவத்தைச் சார்ந்திருக்கும் நிலையே 'சைவம்' எனப் பெற்றது.

இதனாலேயே **சைவசித்தாந்தம்** என்பதற்கும் ஒரு புதியவிளக் கத்தைத் திருமூலரிடம் காணுகிறோம். **சித்தாந்தம்** என்ற சொல்லுக்-

குத் தன்கொள்கை அல்லது கொள்கைகள் பலவற்றையும் ஆராய்ந்து முடிந்த முடிவுக் கொள்கையாக அமைக்கப்பெறும் கொள்கை என்று பொதுவாகப் பொருள்கொள்வர். பூர்வபட்சம் சித்தாந்தம் என இணைத்துக் கூறும்முறையால் இவ்வுண்மையை அறியலாம். ஆயினும், திருமூலர் கருத்தின்வண்ணம், சைவசித்தம் தெரிவித்த அந்தம் எனக் கொண்டு, சிவம் சைவமாக நிற்க, உயிர் சிவத்தோடு அறிகலப்பை மேற்கொள்ளாமல் அனுபவக் கலப்பை மேற்கொண்டு நிற்கும்போது அது சைவக்கலப்பாகும். 'சைவ'க் கலப்பில் தன்னை அறிந்தே சிவத்தைச் சாருதல் உண்டு. அவ்வகையில் அறிந்து, துய்த்து முடிந்தபின் உலகவர் நன்மைக்காக அவ்வனுபவ உண்மையை வெளிப்படுத்தும்போது உயிரிடம் தொழிற்படுவது **சைவசித்தம்.** சைவசித்தம் தந்த-அனுபவ அடிப்படையில் வெளிப்படுத்தும் முடிந்தநிலைக் கொள்கைகளே, **சைவ சித்தாந்தம்** என்பதன் பொருளாகக் கொள்ள வேண்டும் என்பது திருமூலர் தரும் விளக்கம்.

திருமூலர் திருமந்திரமே தமிழ்ச் சாத்திரத்தின் மூலம், முதல் நூல் எனக்கொண்ட மெய்கண்டார் இதுவே "சைவ சித்தாந்த நெறி" என்பதை உணர்த்தும் முகத்தால்

"அவனே தானே ஆகிய அந்நெறி"

எனக் கூறி, அதன் விளக்கமாக, உயிரானது சிவத்துடன் ஏகனாகி நிற்றல் வேண்டும். ஏகமாக நின்றாலும் இறை செலுத்தும் வழியில் தற்போதம் இன்றி, செயற்படும் அவ்வளவிலேயே நின்றுவிடுதல் வேண்டும் என்ற கருத்தை வெளிப்படுப்பாராயினர். இவ்வாறு நின்றால் மூலமலமும், மாயை கன்ம மலங்களும் இல்லாமற்போகும் என்றார்.

இவ்வாறுதான் நிற்க வேண்டும் என்ற அறிநிலையே போது மானது என, ஞானமே தேவை என்பார் கருத்தை மறுத்து, ஏகனாய் நின்று இறைபணி நிற்றல் தேவை என்று குறிப்பிடுகின்றார். இதனை நாவுக்கரசுபெருமான் "பணி செய்து கிடப்பது" என்ற சொல்லாற் குறிப்பிட்டார்.

இனி, இறைவன் நின்றநிலை மூவகையால் நிற்கும் அத்துவிதக் கலப்பு என்பதை மெய்கண்டார் இரண்டாம் நூற்பாவினுள், அவையே ஆய், தானே ஆய், அவையேதானே ஆய்என மூன்றாக அமைத்துக் காட்டவும், இங்கே இருவகை நிலையே எடுத்துக் காட்டவும் அமைந்த வேறுபாடுகளைத் தெளிந்து உணர்தல் வேண்டும். இரண்டாம் நூற்பாவினுள் மூன்றாக வகுத்துக் காட்டப்பெற்ற அதே நிலை இங்கும் உண்டு.

கலப்புக்குரிய பொருள் இரண்டுங்கலந்து நின்றாலும் அவைகள் தத்தம் தனித்தன்மைகளை இழந்து நின்று இக்கலப்பை அமைக்க வில்லை. கலந்து நின்ற காலத்தேயும் அவ்வப்பொருளின் தனித்

தன்மை நிலைநாட்டவே பெறுகிறது. இதனாலேயே திருமூலர் மூவகைக்கலப்பையும் ஒருசேர அமைத்துச் சொல்லாமல் விரவுதல் அடங்குதல், ஒடுங்குதல் என்ற மூன்று சொற்களால் அமைத்துக் காட்டினார். எனவே, இரண்டாம் நூற்பாவினுள் கூறப்பெறும் அவையேதானேயாய் என்பதே கலப்பு. அவைகளுக்குள் பரம் பொருள் கலந்த கலப்புநிலையை அவையேயாய் என்றும், அவைகள் தானாகிய பரம்பொருளைச் சார்ந்து நின்ற நிலையில் தானேயாய் என்றும் நிற்கும் இருவகை நெறிமுறைகளையே வெளிப்பட உணர்த்தும் போக்கில் ''அவையேதானே ஆய்'' என மெய்கண்டார் அமைத்துக் காட்டினார். அதே கருத்தை அதே அமைப்பான தொடரின் மூலமாகவே "அவனே தானே ஆகிய அந்நெறி" என எடுத்துக்காட்டி முடித்தார். அவையேயான கலப்பிலும், தானேயாய கலப்பிலும் தத்தம் தனிநிலை இழக்கப் பெறவில்லை என்ற கருத்தை வலியுறுத்தவே "அவையே தானேயாய்" என இணைத்துக் காட்டி, விளக்கம் சொல்லும் வகையில் அமைத்தருளியுள்ளார் மெய்கண்டார்.

ஏகனாதல் என்ற நிலையை அறியும் ஞானமொன்றே முத்திக்கு ஏது என்பாரையும், இறைபணி நிற்றல் என்ற சரணாகதி நிலையே போதும் என்பாரையும் இணைத்து, ஏகன் ஆதல் இறைபணி நிற்றல் என்ற இரண்டிடத்திலும் செயலமைப்புச் சொற்களைக் கொடுத்து, ஏகனாகி நின்ற காலத்து, அவன் அறிவிக்க அறிந்து, செயற்படச் செயற்பட்டு, நிற்கும் நிலையினால், பேரறிவும் பேராற்றலுங் கொண்டு பெருங்கருணை வடிவாய்ச் செயலாற்றும் அவனை உணர்ந்து தானே ஒடுங்கும் நிலை உண்டாகும். அத்தகைய அறிவினால் எத்தகைய தன்முனைப்பும் தோன்றாது. ஆகையால் அறிவும் செயலும் இணைந்தே செயற்படுவதை எடுத்துக் காட்டினார். திருமூலர் முன்னெச்சரிக்கையாகச் சொல்லிக்காட்டுவதுபோல, கணமேனும் சிவமானது தன்னைச் சாரும் நிலைக்கு இடங்கொடுக்காமலே சென்று, சிவத்தைச் சார்ந்து விடவேண்டும் எனபதற்காக ஏகனாதல் இறைபணி நிற்றல் என அறிவும் செயலும் இணைய நிறுத்திக் காட்டினார் மெய்கண்டார்.

திருமந்திரத்தை மூலமாகக் கொண்டு நோக்கினால் மேலும் பல கருத்துக்கள் விரிவுபெறும். விரிவஞ்சி விடுக்கின்றோம்.

# 13. கண்டு காட்டுதல்

*முன்னுரை*

திருமுறைகள் பன்னிரண்டனுள்ளுஞ் சிறந்தது எனப் போற்றப் பெறுவது பதினொராந் திருமுறை. இத்திருமுறையை அருளியவர்கள் பன்னிருவர். இறைவன் ஒருவன் ஏனைய அருளாளர் பதினொருவர். இறைவனும் ஏனைய பதினொரு அருளாளர்களும் ஒப்பநின்று வரிசைப் படுத்தப்பெறுகின்ற காரணத்தால் இறைவனும் அடியவர்களும் தத்தம் பெருமைகளால் மதிக்கற்பாட்டிற் குரியவர்களேயாயினும் திருமுறையை வழங்கியவர்கள் என்ற பட்டியல் அமைப்பில் ஒரு தன்மைப்படவே நின்றார்கள் என்று எடுத்துக் காட்டும் பெருமையு டையது. இனி, நாற்பது நூல்களைக்கொண்ட இத்திருமுறை பதி னொன்றாந் திருமுறையாக ஆதற்குக் காரணம் இத்திருமுறையில் பதினொரு சிவனடியார்களைப் பற்றிய நூல்கள் உள்ளன. அவ் வொன்றே பெருமைக்குரியது என்ற வகையில் பதினொராந் திருமுறை யாயிற்று. சிவனைப் பற்றிய நூல்கள் 25; முருகனைப்பற்றிய நூல் 1. விநாயகரைப் பற்றிய நூல் 3 என்பனவே ஏனைய இருபத்தொன்பது நூல்கள்.

சிவபெருமான் அருளிய பாடல்கள் இரண்டு ; நூல் ஒன்று. இரண்டு பாடல்களும் சீட்டுக்கவி அமைப்புடையனவே. தருமிக்குப் பொற்கிழி அளிப்பதற்காக எழுதிய போட்டிப் பாட்டு ஒன்று. பாணபத்திரருக்குப் பொன் வேண்டி எழுதிய பாட்டு ஒன்று. முன்னது சங்க இலக்கியங்களுள் ஒன்றாகிய குறுந்தொகையில் இணைக்கப் பெற்றுள்ளது. நூல் களவியல். இறைவன் தருமிக்குப் பொற்கிழி அளிக்க எழுதிய பாட்டும், இறையனார் களவியலும் முறையே குற்றம் உடையது, குறை உடையது என ஆய்வாளர்களால் தூற்றப் பெற்ற பழிச்சொற்களை உடையவை. திருமுறையில் சேர்க்கப் பெற்றுவிட்ட ஒரு காரணத்தாலேயே குற்றமாப் பாடும் இயல் புடைய இறைவன் பாட்டும் குற்றம் நீங்கிய, குணம் உடைய பாட் டாகவே ஏற்றுக்கொள்ளப் பெற்றுள்ளது.

ஏனைத் திருமுறைகளுக்கு இல்லாத பெருமை ஒன்று இதற்கு உண்டு. திருக்கயிலாயத்தில் சென்று அரங்கேற்றப் பெற்ற திருக் கைலாய ஞானவுலா பதினொராந் திருமுறையிலேயே உள்ளது. மேலும், அடியவர்கள் உலகவாழ்க்கையில் ஒதுக்கிடத்திருந்து ஏதோ எளிய, சுவையற்ற வாழ்க்கை வாழ்ந்தவர்கள் அல்லர்; அவர்கள்வீரர்

களே என எடுத்து நிறுவியநூல்களைக் கொண்டிலங்குவது பதினொரா வதுதிருமுறையே. எல்லாவற்றுக்கும் மேலாக, அனைத்துப் பொருள் களுக்கும் மூலப்பொருளாக விளங்கிய முழுமுதற் பொருளாம் சிவ பெருமானே மூன்றுமுறை ''அம்மையே'' என்றழைத்த பெருமைக்கு உரியவராகிய காரைக்காலம்மையாரின் திருப்பதிகங்களை—எல்லாத் திருப்பதிகங்களுக்கும், திருமுறைகளுக்கும் மூத்த திருப்பதிகங்களைத் தன்னகத்தே கொண்டு விளங்குவது பதினொன்றாந் திருமுறை.

பதினொன்றாந் திருமுறையில் பாடப்பெற்ற பன்னிருவரும் தமிழ் மொழியின் பன்னிரண்டு உயிரெழுத்துக்களைப் போன்றவர்கள். அகரம் ஒன்றே தனக்கும் மேலாக ஓர் உயிரெழுத்தில்லாமல் தானே ஏனைய எழுத்துக்களுக்கெல்லாம் உயிரெழுத்தாய் நின்றது. அகரம் உயிரெழுத் தென்றால் அதன் துணையின்றிப் பிறக்க முடியாத ஏனைய பதினொரு எழுத்துக்களும் முறையாகச் சொல்ல முற்படின் உடலெ ழுத்துக்களே. ஆயினும், ஏனைப் பதினொரு எழுத்துக்களையும் உள் நின்று உண்டாக்கி, இயக்கி நின்றாலும் அகரம் என்ற உயிர் எழுத்து ஏனைய எழுத்துக்களில் தன்னை மறைத்துக்கொண்டு, அவை களுக்கும் 'உயிர்' என்ற பெயரை அமைத்துக் கொடுக்கிறது என்னின் அகரத்தின் தலைமையும், இறைமையும், அருண்மையும் நோக்கி உணரற்பாலன. தனித்தியங்கும் உயிர் ஒன்றே; அது அகரம். ஏனைய உயிரெழுத்துக்களும் அகரத்தைச் சார்ந்துதான் இயங்கும் ஆயினும், அகரம் தன்னைப் புலப்படுத்திக் கொள்ளாமல், ஏனைய பதினொரு எழுத்துக்களும் தனித்தனி இயங்கும் ஆற்றலுடை யனவே; தனித்தியங்குவதால் அவையும் உயிரெழுத்துக்களே என்று உணரப்பெறுமளவுக்கு, ஏனைய பதினொரு எழுத்துக்களுக்கும் உயர்ந்த வாழ்வினை, பெருமையினை அளித்து, அவற்றினுள்ளே தன்னை ஒடுக்கிக்கொண்டது அகரம். இவ்வாறே பன்னிரண்டாய் நின்ற திருமுறையாசிரியர்களில் திருவாலவாயுடையவனே அரு ளாளன்—அருளை ஆள்பவன். ஏனையோர் அருளாளர்கள்— அருளால் ஆளப்பெற்ற பெருமையுடையவர்கள். ஆயினும், ஆள் வானும் ஆளப்பெற்றவர்களும் என்ற வேறுபாடின்றி, அவர்களுள் தன்னை மறைத்துக்கொண்டு, பதினொரு அருளாளர்களைக் கொண்டே 'பதினொரு' என்ற எண்ணிக்கையை மலரவைத்தவன், ஆனான்.

இறைவன் தன்னைத் தனித்து நிறுத்திக் கொள்ளத்தகும் பெருமை யுடையவன் ஆயினும், அவன் ஒரு அடியவர் பெருமையை இன்னொ அடியவருக்கு எடுத்துரைத்து உதவிபுரியச் சொல்வதையே பொரு ளாகக் கொண்டு பாடியிருப்பதால் இரண்டு அடியவர்களின் பெரு மையை எடுத்துக்கூறி, அப்பெருமையில் தன்னை மறைத்துக் கொள் பவன் ஆகிறான்.

இனி, தமிழும் சைவமும் பெருமை கொண்டு மகிழ்தற்குரியவகை யில் தன்னை வெளிப்படுத்திக் காட்டிய பெருமை ஒன்றே பதினொராந் திருமுறைக்குரிய வைரக்குப்பாயம் என அமைந்த பெருமை எனக் கொள்ளவேண்டும்.

'ஆலவாயில்' என்ற அழகிய தமிழ்ப்பெயராலும் 'கூடற்பதி' என்ற சிறப்புச் சொல்லாலும் மதுரையைத் தன்னுடைய ஊர் எனக் கொள்கிறான். இது அடியவர்களை ஒட்டி அவன் அமைத்துக் கொள்ளும் முறை. சேரமான் பெருமாள் நாயனாருக்குப் பலமுறையும் தன்னைத் தில்லைக்குரியவனாகவே அறிமுகப்படுத்திக் கொண்டிருக்கிறான். திருநாவலூராருக்காகத் தம்மை ஆரூரன் என ஆக்கிக் கொண்டவன். ஆயினும், தன்னை அறிமுகப் படுத்திக் கொள்ளுகின்ற காலத்தில்,

*ஆலவாயில் மன்னிய சிவன் யான்*

என்று கைச்சாத்திட்டுக் கொடுக்கிறான். பிரமம், அது, ருத்திரன், பெம்மான், பதி என்றின்னோரன்ன சொற்கள் பல இருந்தும் இவற்றுள் எந்த ஒன்றையும் தான் தேர்ந்தெடுத்துத் தற்சுவைகாரணமாக அமைத்துக்கொள்ளவில்லை. இவையெல்லாவற்றினும் உயர்ந்ததாகத் தன்னைச் 'சிவன்!' என்று கூறிக்கொள்ளுகின்றான்.

மேலும், 'மன்னிய' என்ற அடைமொழியையும் இணைத்துக் காட்டுகின்றான். 'நிலைபெற்ற சிவன்' என்பதால் நிலைபேறில்லாத சிவனும் உண்டோ என ஐயமுற்றுக்கிளத்தல் வேண்டா. மதுரைத் தலத்துக்கேயுரிய சொக்கன் என்றோ சோமசுந்தரன் என்றோ இம்மையில் நன்மை தருவான் என்றோ தம்மைக் கூறிக் கொள்ளவில்லை. ஆலவாயில் மன்னிய சொக்கன் எனல் முறை. அவ்வாறெல்லாம் கூறிக்கொள்ளவில்லை. மாணிக்கவாசகப் பெருந்தகையின் மணிமொழிகளால் திருவாலவாயில் என்ற இம்மதுரைப்பதியில்,

கண்ணால் யானும் கண்டேன் காண்க
அருள்நனி சுரக்கும் அமுதே காண்க
கருணையின் பெருமை கண்டேன் காண்க
புவனியிற் சேவடி தீண்டினன் காண்க
*சிவனென யானும் தேறினன் காண்க.*
அவன் எனை ஆட்கொண்டு அருளினன் காண்க

என்று நிலைபேற்றுத்தன்மை வழங்கப் பெற்ற 'சிவன்' என்னும் பெயரே என் பெயர். ஓர் அடியவரின் மணிமொழிகளாய் மங்கலச் சான்று பெற்ற காரணத்தால், பெயர் மட்டுமன்று, பெயருக்குரிய பொருளும் நிலைபேற்றுத்தன்மை பெற்றுவிட்டது என்பதை உலகுக்குணர்த்தும் முகத்தால் தான் எழுதிய சீட்டுக்கவியில் தன்னை "ஆலவாயில் மன்னிய சிவன்" எனக் கைச்சாத்திட்டுக் கொடுக்கின்றான் எனில் தமிழும் சைவமும் தழைக்கவந்த பரம்பொருளாகத் தம்மை அறிமுகப் படுத்திக் கொண்டான் எனல் தேற்றம். அடுத்து, இப் பாட்டுடைத் தலைவன் யார்? என்னில் சேரமான் பெருமாள் நாயனாரும், பாணபத்திரருமே ஆகிறார்கள். இவ்விருவரின் பெருமையையே அவன் எழுதியிருக்கிறான். இவ்வகையில் பதினொராந் திருமுறை அடியவர் பெருமையை ஆண்டவனே எழுத்துமூலமாக எழுதி விளக்க வந்த ஒன்று எனக் கொள்ள வேண்டும்.

அடியவர் பெருமையை ஒருஅடியவர் பேசுவது என்ற வகையில் பன்னிரண்டாந் திருமுறை அமைகிறது. ஆனல், அடியவர் பெருமையை ஆண்டவன் பேசுவது என்ற வகையில் பதினெராந் திருமுறை பெரியபுராணத்துக்கு முன்னுல் வந்தமைகிறது.

இத்துணைச் சிறப்புக்களுக்கும் நிலைக்களமாய பதினெராந் திருமுறையின் தெளிவாக மெய்கண்டார் நமக்களிக்கும் சிவஞான போத நூற்பா,

> ''காணும் கண்ணுக்குக் காட்டும் உளம்போல்
> காண உள்ளத்தைக் கண்டு காட்டலின்
> அயரா அன்பின் அரன் கழல் செலுமே''

என்பதாம்.

பரம்பொருள் உயிர்களோடு இரண்டறக் கலந்து நின்று உதவி செய்து வரும் பெருங்கருணைத் திறம் இந்நூற்பாவால் விளங்கப் பெறுகிறது.

''காட்டக் காண்பதாகிய கண்ணுக்கு உருவத்தைக் காணுமாறு பிரிப்பின்றி உடங்கியைந்து நின்று, அதற்கு அதனைக்காட்டித் தான் காண்கின்ற ஆன்மாவைப் போல, அறிவிக்க அறிவதாகிய அவ்வான்மா விடயத்தை அறியுமாறு, முதல்வன் பிரிப்பின்றி உடங்கியைந்து நின்று, அதற்கு அதனை அறிவித்துத் தான் அறிந்து வருதலால், இவ்வாறு அத்துவிதமாய் நின்று உதவி செய்துவரும் பெருங் கருணையை மறவாது கடைப்பிடித்துச் செய்யும் அன்பானே அம் முதல்வன் திருவடியாகிய சிவானந்தாநுபூதியைத் தலைப்படும்'' என்று உரை காண்கிருர் சிவஞான மாபாடிய கர்த்தராகிய சிவஞான முனிவர். மேலும், அவர் இந்நூற்பாவினுள் கீழ்க்கண்ட நுட்பமான பகுதிகளை அமைத்துக் காட்டுகின்ருர்.

1. இறைவன் உபகாரம் செய்தலையும் அவன் அத்துவிதக் கலப்பையும் நீள நினைத்தால் அயரா அன்பு எழும்.
2. ''கண்டு காட்டலின்'' என்ற நூற்பாப் பகுதியைக் காட்டிக் காண்டலின் என்று மொழிமாற்றம் செய்கின்ருர்.
3. உடனுய் நிற்றல், காட்டல், காணல் என்ற மூவகை உபகார நிலைகள்.

காணும் கண்ணுக்குக் காட்டும் உயிர்போல என்பது உவமை. இவ்வுவமையால் கொள்ளப்பெறும் பொருள் காணும் உயிருக்குக் காட்டும் இறைவன் எனக்கொள்வதே முறை. உள்ளம் என்ற சொல் ஆன்மாவைத் குறிக்கும். நூற்பாவின் முதல் வரியின் வண்ணம், கண்ணுக்குக் காணும் தன்மை உண்டு, என ஒப்பும் முறையில் காணும் தன்மையுடைய கண்ணுக்குக் காட்டும் உதவியை மட்டும் செய்கிற உயிர்போல என அமைத்து விடலாம். அவ்வாறே உயிரைக்காணும் தன்மையுடையது என்று கொள்ளுமாறு நூற்பா அமையவில்லை.

"காண உள்ளத்தைக் கண்டு காட்டலின்" என்ற இரண்டாம் வரிக்கு உள்ளத்தை—ஆன்மாவைக் காணுமாறு கண்டு காட்டலின் என மொழிமாற்றிக், கொண்டு, தன்னியல்பாற் காணுத உயிருக்குக் காணும் இயல்பு உண்டாவதற்காகத் தானே அவ்வுயிரோடு இணைந்து நின்று காண்கிருன் எனக்கொண்டு, அதனுல் உயிர் காணும் தன்மை பெறுகிறது என்றும், பின்னர் அவ்வுயிருக்கு வேறு பொருளைக் காணுமாறு செயற்படுத்துகிருன் என்றும், இவ்வாறு காணவும் காட்டவுமாகிய இரு தொழிலும் செய்கிருன் எனப் பொருள் கொள்ளப் பெறுகிறது.

இனி, இந்நூற்பாவுக்குக் காணும் தகுதியுடைய கண்ணுக்குக் காணுமாறு கண்டும், காட்டவும் செய்கின்ற ஆன்மாவைப் போல, காண்பதற்குத் தகுதியுடைய ஆன்மாவானது காணும்படித் தான் கண்டு பிறகு காட்டவும் செய்கிற, குருமுதல்வன் என்று உரைகாணு கிருர் பேராசிரியர் கோ. வடிவேலுச் செட்டியார் அவர்கள்.

கண்ணுக்குக் காணும் தன்மை உண்டு என்று கொள்ளாமல் காணும் தகுதி உண்டு என்று உரை கொள்வதால் செவிக்குக் காணும் தகுதி இல்லை, கண்ணுக்கே காணும் தகுதி உண்டு, என்பது அவ்வுரையின் சிறப்பியல்பு. அதன்பின்னர், தகுதி உடைமையா லேயே கண் எதனையும் கண்டுவிடாது. எனவே, உயிரானது கண்ணைக் காணவைப்பதற்காகத் தானே அதனிடத்துத்தங்கிக் காண வேண்டும் என இவ்வுரையின் விரிவை அமைத்துக்கொள்ளலாம்.

காணும் தகுதிமட்டுமே கொண்டு, தன்னியல்பாற் காணமுடி யாத நிலைமையுடைய உயிரினுடன் உடனுய் நின்று காண்கிருன். இங்கே காண்பது உயிர் என்று சொல்லுமாப்போல, இறைவன் உயிரினுடன் கலந்துநின்று காணுமாறு செய்கிருன். இந்நிலையைக் காணுமாறு செய்கிருன் என்று சொல்லாமல் "காண்கிருன்" என்று சொல்ல வேண்டும் என்பது சாத்திரக்கிடக்கை. இந்நிலையில் உயிர் ஒரு பொருளைக் காண்கிறது. "உயிர் ஒரு பொருளைக் காண்கிறது" என்ற இத்தொடரில் இறைவன் செய்யும் காணும் உபகாரம் ஒன்றனு லேயே காண்கிறது என்று கூறுவதா? அல்லது இறைவன் காணும் உபகாரம், காட்டும் உபகாரம் ஆகிய இரண்டையும் செய்தான் என்று கூறுவதா? இக்கருத்தில் அறிஞர்கள் வேறுபடுகின்ருர்கள்.

சுருங்கக் கூறின், இது காணும் உபகாரம் மட்டுமே. காட்டும் உபகாரம் என்பதும் இறைவனுல் உயிருக்குச் செய்யப் பெறும் ஒன்றே. ஆனுல், அவ்வுபகாரத்தை இறைவன் உயிர்களாற் காணப் படுகின்ற பொருளை இடமாகக் கொண்டு செய்கிருன். சாத்தன் என் பவன் ஒரு நாற்காலியைக் காண்கிருன், காணும் உபகாரத்தை இறைவன் சாத்தனை இடமாகக் கொண்டு செய்கிருன். ஆனுல் காட்டும் உபகாரத்தை இறைவன் நாற்காலியை இடமாகக் கொண்டு செய்கிருன். அறிவானையும் அறியப்படுபொருளையும் இடமாகக் கொண்டு முறையே காணும் உதவியும் காட்டும் உதவியும் செய்தால்

மட்டும் போதாது. இவ்விரண்டன் இணைப்பினுல் அறிவு தோன்றி விடாது. அறிவை நின்று இயக்குதல் வேண்டும். இவ்விரண்டன் இணைப்பால் எழும் அறிவை இத்தன்மையுடையது என மீண்டும் அறிகின்ருன். காணும் உதவியாலும் காட்டும் உதவியாலும் எழும் அறிவையும் அவன் அறிய வேண்டுமா? என்னில், வேண்டும். காணவும், காட்டவும் அமைந்த செயல்களாலேயே உயிர்கள் காணப்பெறும். காணுதல் என்ற அநுபவத்தால் விளைந்த அறிவு எத்தகையது? என்பதை அறிந்தால் தான் மேலே அமையக் கடவ தாய அனுபவத்தை வரையறுத்துக் கொடுக்க முடியும். அறிதலும் அறியப் பெறுதலுமாகிய இணைப்பினுலேயே முழுமையான அறிவை உயிர் பெற்று விட்டதாகக் கொள்ள முடியாது. ஆகையினுல், இணைப்பினுல் உண்டாகிய அறிவின் தன்மையையும் அவன் உடனின்று அறிய வேண்டும். இதனுலேயே காரைக்காலம்மையார்

''அறிவானும் தானே அறிவிப்பான் தானே
அறிவாய் அறிகின்ருன் தானே — அறிகின்ற
மெய்ப்பொருளுந் தானே விரிசுடர் பார் ஆகாயம்
அப்பொருளுந் தானே அவன்''

என்று, தம் ***அற்புதத்திருவந்தாதி*** 20 ஆம் செய்யுளிற் குறிப்பிடு வாராயினர். காரைக்காலம்மையார் இங்கே இறைவனின் ஐந்து நிலைகளைக் குறிப்பிட்டுக் காட்டுவாராயினர். அவை முறையே

(1) அறிவான்

(2) அறிவிப்பான்

(3) அறிவால் அறிகின்ருன்

(4) அறிகின்ற மெய்ப்பொருள்

(5) விரிசுடர், பார், ஆகாயமாய அப்பொருள்

என்பன. முதல் இரண்டு நிலைகளும் உயிர்களுக்கு இறைவன் செய்யும் இருவகை உபகார நிலைகள். மூன்ரும் நிலையில், உயிர்கள் பெற்ற அறிவால் ஆணவமலம் எத்தகைய வன்மை மென்மையை அடைந்துள்ளது என்பதை அறியும் நிலை. இந்நிலையையே

*''நன்றெலாம் ஞானசக்தியால் நயந்து அறிவன் நாதன்''*

என்று சாத்திரம் கூறும். நான்கும் ஐந்தும் ஆகிய நிலைகள் உயிர் களால் அறியப்பெறும் பொருளை உணர்த்தும் நிலைகள். இருதிறன் அறிவுளது இரண்டலா ஆன்மா என்று கூறுவதற்கொப்பவே சத்துப் பொருளாகவும் அசத்துப் பொருளாகவும் நின்றவன் அவனே எனக் குறிப்பிட்டுக் காட்டுவாராயினர். இங்கே ஒரு ஐயம் எழும். காட்டும் உபகாரம் என்பதைப் புறப்பொருளிலிருந்துதான் செய்ய வேண்டும் என்று கொள்ளுதல் அவசியமா? என்பதே. அவ்வுண் மையை உணர்த்தவே, காரைக்காலம்மையார் அவைகளையும் இணைத் துக் கூறியிருக்கின்ருர்கள்.

புறப்பொருளை நின்று இயக்குகிற தன்மையையும் நம்முடைய நாயன்மார்களின் உரைகளிலிருந்தும் வாழ்வியல் நிகழ்ச்சிகளி லிருந்தும் தெரிந்துகொள்ள முடிகிறது. திருவருள் அமைத்துக் கொடுத்த விதிமுறைகளுக்கு உட்பட்ட புறப்பொருளும் ஒவ்வோர் உயிருக்கும் ஏற்பத் தன்னைப் புலப்படுத்திக் கொள்கிறது என்று கருத வேண்டியுள்ளது. எடுத்துக் காட்டாக, ஞானவாரமுதமுண்ட பிள்ளையார் முதன்முதல் தில்லை வாழந்தணர்களைப் பார்த்தபோது அவர்களைச் சிவகணங்களாகத் திகழ வைத்துத் திருஞானசம்பந்த ருக்குக் காட்டவில்லை, சிவஞானம் பெற்ற செல்வராக இருப்பினும் அவருக்கு அப்பொருளை அவ்வாறு அறிய வேண்டிய தேவையே இல்லாதிருப்பினும், அத்தகைய அருள் நிலையை வெளிப்படுத்தியது ஏன்? புறப்பொருளை இடமாகக் கொண்டு, இப்பொருள் இவ்வள வில் இப்போதைக்கு இவ்வாறு இவ்வுயிருக்கு உணர்த்தப் பெறுதலே சாலும் எனத் திட்டமான வரையறையைத் திருவருள் அமைத்துச் செயற்படுத்துகிறது என்பதை நம் போலியர் உணருவதற்காகத் தான். இனி, இப்பகுதியை ஏனைச் சான்றோர்கள் எவ்வாறு விளக்கி யுள்ளார்கள் என்பதையும் காணுதல் தேவையானதே.

சிவஞான முனிவர், கண்டு காட்டல் என்பதைக் காட்டிக் கண்டு என மாற்றி அமைத்துக் கொள்க என எழுதி, "வேர்த்து வெகுளார் விழுமியோர் என்பது போல" என்று எழுதுகிறார். வேர்த்து வெகுளார் என்பதற்கு "வெகுண்டு வேர்ப்பர்" என்பது பொருள். அவ்வாறே கண்டு காட்டலின் என்பதைக் "காட்டிக் காண்டலின்" என மாற்றி அமைத்துக் கொள்க என்பர். அவ்வாறு மாற்றுவதற்குக் காரணம்,

"காயமொழிந்தால் சுத்தனாகி ஆன்மாக்
　　காட்டக் கண்டிடுந் தன்மையுடைய கண்ணுக்கு
ஏயும் உயிர் காட்டிக் கண்டிடுமாபோலே
　　ஈசன் உயிர்க்குக் காட்டிக் கண்டிடுவன் இத்தை
ஆயும் அறிவுடையனாய் அன்பு செய்ய
　　அந்நிலைமை இந்நிலையின் அடைந்த முறையாலே
மாயமெலாம் நீங்கி அரன் மலரடிக் கீழிருப்பன்
　　மாருத சிவானுபவம் மருவிக் கொண்டே"

என்ற சிவஞான சித்தியார்த் திருவிருத்தமே. மெய்கண்டாரின் பதினொன்றும் நூற்பாவுக்கு விளக்கமாக அமைந்த இத்திருவிருத் தத்தில் "காட்டிக் காண்டல்" என்ற முறை அமைந்திருப்பதால் மெய்கண்டாரின் நூற்பாவில் உள்ள "கண்டு காட்டல்" என்பதைக் "காட்டிக் காண்டல்" என மாற்றியமைத்துக் கொள்க என்று விளக்கம் எழுதினார் சிவஞானமுனிவர்.

அடுத்து, இவ்வுவமையை நன்கு சிந்தித்தால் கண்ணைக் காணும் தன்மையுடையதாக்கி, பொருளைக் காட்டி, காண்பது ஆன்மா என மூன்று நிலைகள் உண்டெனக் கொள்வது ஒருவகை. கண்ணைக்

காணும் தன்மை உடையதாக ஆக்கிக் காண்பது ஆன்மா என்ற இருநிலைகளே உண்டு எனக் கொள்வது வேறு வகை. காண வேண்டிய பொருளைக் காட்டும் செயல் உயிர்களுக்கு இல்லை. எனவே, கண்ணுக்குக் காட்டுவதும், தான் காண்பதுமே. கண்ணைக் காண வைப்பதே காட்டுவது; காண்பது உயிரே எனவும் விளக்கம் கூறலாம். இவ்வகையில் "காட்டிக் காண்டலின்" என்பதற்கு நேர்ப் பொருளே கொள்ளலாம். இவ்வகையில் சிவஞானசித்தி யாரின் போக்கு அமைகிறது.

அடுத்து, உவமையால் வரும் பொருள் பற்றி ஆயவும் வேண்டும். இவ்வகையில் முதல்வன் உயிரைக் காணுமாறு செய்து தான் காண்கிறன், என விளக்க வேண்டும். உயிர் கண்ணைக் காணு மாறு செய்து தான் காண்கிறது, பயன் உயிருக்கே. கண் ஒரு கருவி என்ற அவ்வளவே. இங்கே முதல்வன் உயிரைக் காணுமாறு செய்து காண்பான் எனில் முதல்வன் காணுமாறு செய்தலே போதும் காணு தல் எதற்காக ? என்றவினுஎழும்.

சுருங்கக் கூறின் கண் உவமையில் இரண்டு செயல்கள் இல்லை. கண்ணைக் காணுமாறு செய்தலாகிய காட்டும் செயலும் காணும் செயலும் ஒன்றே. ஆயின் முதல்வனை எடுத்துக் கொள்ளும் போது காட்டவும் செய்கிறன்; உயிரை இயக்கிக் காணவும் செய்கிறன்.

ஆனல், மெய்கண்டார் அருளிய நூற்பாவில் உள்ள "கண்டு காட்டலின்" என்பதும் சிவஞானசித்தியார் கூறும் "காட்டிக் காணலின்" என்ற இரண்டும் ஒன்ரு?

சிவஞானசித்தியார் சீவன்முத்தர் நிலையை எடுத்து விளக்குகிறது. சீவன் முத்தர்களுக்கு வினைவழி வந்த மாயாதேகம் செத்து விட்டது, சீவன் முத்தர்களின் தேகம் இருப்பினும் அதைச்சார்ந்து சீவன் முத்தன் வாழ்தல் இல்லை. எனவே, சீவன் முத்தனுக்கு அறிவ தற்கோ, அனுபவிப்பதற்கோ வாய்ப்பு இல்லை. அவனுக்குத் திருவருளே தாரகம் என்பதைக் காட்டித் திருவருளே கருவியாகிச் சிவானுபவத் துய்ப்பைப் பெறவேண்டிய அவனுக்கு, இறைவன் திரு வருளே தாரகம் என்பதைக் காட்டியும் திருவருளால் சிவானுப வத்தைத் துய்க்கச் செய்யும் வகையால் கண்டும் உதவி செய்கிறன், என்பது கருத்து,

ஆயினும், சிவஞானமுனிவர் இங்கே வற்புறுத்துவது வேறு ஒரு கருத்து. கண் காணும்போது, தன்னை இயக்கி, தன்னைக் காணு மாறு செய்வது வேறு ஒரு பொருள், அது தன்னிடத்தில் இரண்டறக் கலந்திருக்கிறது, என்பதை அறியாது. ஆனல் அவ்வாறு கலந்து நிற்றல் என்பதே உண்மை. அவ்வாறே முதல்வன் உயிருடன் இணைந்து நின்று காணச் செய்தபோது, காணுகின்ற உயிர், தன்னை இவ்வாறு காணச்செய்வது தன்னுள் இருக்கும்—பிரிவறக் கலந்து நிற்கும் முதல்வன் என்பதை அறியாது. எனவே, முதல்வன் உயிரா

கிய தன்னோடு அத்துவிதமாய்க் கலந்து நின்றதாலேயே நான் தொழிற்பட முடிகிறது என்பதை உணர்ந்து, அவன் தன்னோடு இணைந்து நிற்கும் அத்துவித நிலையை அழுத்தமாகச் சிந்தித்ததால், அவன் பெருங்கருணையும் அதன்மேல் அயரா அன்பும் தோன்றும். அதுவே துணையாய்ச் சிவப்பேறு எய்தும் எனக் குறிப்பிடுகிறார். எனவே, அத்துவிதக்கலப்பைப் பாவித்து நிற்க, எழும் அயரா அன்பினால் அரன் கழல் செலும் எனக் கொள்கின்றார்.

மேலும், சிவஞானமுனிவர், சற்றுவிரிவாக ஆராய்கிறார். உயிர் அறிதற்றொழிலை மேற்கொள்ளும் போது இரண்டு செயல்களை முதல்வன் நடத்துகிறான் என்று குறிப்பிடுகிறார், 1. உடன் நின்றறிதல் 2. அறிவித்தல் இதனைத் தொண்டனேன் நினையுமா நினையே, விரும்புமா விரும்பே என்ற திருவிசைப்பாத் தொடர்களை எடுத்துக் காட்டி, அவை முத்திக்காலத்தை உணர்த்தும் திருவாக்குக்கள் என்றும் விளக்கியபிறகு அதனுள் மூன்றுநிலை உண்டு என்றுவிளக்கு கிறார். 1. அறிதல், 2. அறிவித்தல் 3. அறிவாய் அறிதல். முன்னர் இரண்டு நிலைகளையே உடன்பட்டு எழுதிய சிவஞான சுவாமிகள் திருவிசைப்பா வாக்குக்களைக் காட்டியதன் நோக்கம் அறிதலும் வேண்டும் அறிவித்தலும் வேண்டும் என்பதை விளக்க. மேலும் அவர், காரைக்காலம்மையார் திருவாக்கினை எடுத்துக்காட்டி, ''அறிவானும் தானே, அறிவிப்பான் தானே, அறிவாய் அறிகின்றான் தானே'' என்று கூறும் அம்மையார் திருவாக்கினுள் இறைவன் இருமுறை அறிவதாகக் கூறப் பெறுகிறதே எனக்கொண்டு, முன்னது அறிவிப்பதற்காக அறிகிறான், பின்னது விடயத்தில் அழுந்துவித்தலுக்காக அறிகிறான் என்று குறிப்பிடுகிறார். சிவஞானமுனிவர் கூறும் விளக்கத்தைக் கொண்டு நோக்கினால் இவ்வுயிருக்கு நான்கு வேலைகள் செய்கிறான். அறிவிப்பதற்காக அறிகிறான்; அறிவிக்கிறான், விடயங்களில் அழுத்துவதற்காக அறிகிறான், விடயங்களில் அழுத்துகிறான் என, நால் வகை நிலைகளில் தொண்டாற்றுகிறான் ஆதல் வேண்டும். சைவசித்தாந்தக் கொள்கையின் வண்ணம் உயிர் அழுந்தித்தான்அறியும் ஆதலின் அறிவானும், அழுந்துவிப்பானும், அறிவிப்பானும் என்று மூன்றாக நிறுத்தினாலே போதும்.

சுருங்கக் கூறின், பதினொன்றாந் திருமுறையில் காரைக்கால் அம்மையாரின் அற்புதத் திருவந்தாதியில் அமைந்த 20ஆம் எண்ணுள்ள

''அறிவானுந் தானே அறிவிப்பான் தானே
அறிவாய் அறிகின்றான் தானே—அறிகின்ற
மெய்ப்பொருளுந் தானே விரிசுடர்பார் ஆகாயம்
அப்பொருளுந் தானே அவன்''

என்ற செய்யுளை மூலமாகக் கொண்டு, அத்திருமுறையில் உள்ள ஏனைய செய்திகளையும் இணைத்துக் திருவருளால் உணர்ந்தருளிய நிலையில் மெய்கண்டார்.

"காணும் கண்ணுக்குக் காட்டும் உளம்போல்
காண உள்ளத்தைக் கண்டு காட்டலின்
அயரா அன்பின் அரன் கழல் செலுமே"

என்ற பதினொன்றும் நூற்பாவை மலர்வித்தருளுவாராயினர்.

## முடிப்புரை

மேலே கூறிப் போந்தவாற்றால், பதினொன்றுந் திருமுறையானது உயிரெழுத்துப் பன்னிரண்டனுள் அகரமும் ஏனை உயிரெழுத்துக் களும்போல இணைந்து இறைவனும் அடியவர்களுமாய் நின்ற பெருமையுடையது என்பதும், அகரம் உள்நின்று இயக்கி வருவது போலவே இறைவனும் ஏனைய அருளாளர்களை இயக்கிநின்று, இத்தகைய அருண்மொழிகளை வெளிவரச் செய்து, அவர்களும் தாமும் ஒன்றெனநின்று இணைந்தான் என்ற கருத்து விளக்கம் கொள்ள வேண்டும் என்பதும், அவன் செய்த உதவியைக் காரைக்காலம்மையார் ஐந்து நிலைகளாக அமைத்து விளக்குகிறார் என்பதும், அதனை அடிப்படையாகக் கொண்டு மெய்கண்டார் தம்முடைய *சிவஞான* **போதம்** பதினொன்றும் நூற்பாவை மலர்வித்தருளுகின்றார் என்பதும் விளக்கப் பெற்றன.

# 14. செம்மலர் நோன் தாள்

## முன்னுரை

பன்னிரு திருமுறைகளுள்ளும் இறுதி நின்றது பெரிய புராணமே. தெய்வச் சேக்கிழார் திருவாய் மலர்ந்தருளிய திருத்தொண்டர் புராணம் என்னும் இப்பெரிய புராணம் 4286 செய்யுட்களைக் கொண்டு விளங்குகிறது. 'உலகெலாம்' என இறைவன் அடியெடுத்துக் கொடுக்க, 'உலகெலாம்' என்பதை இறுதியாகக் கொண்டு முடிவது இந்நூல். நம்பியாரூரர் அருளிய திருத்தொண்டத் தொகை முதல் நூலாக, நம்பியாண்டார் நம்பிகள் அருளிய திருத்தொண்டர் திருவந்தாதி வழிநூலாக பெரிய புராணம் சார்புநூலாக விளங்குகின்றது. பன்னிரு திருமுறைகளுக்குப்பின் அருளாளர்கள் பலர் செய்த நூல்கள் பல இருப்பினும் திருமுறைத் தொகுப்பில் இடம் பெறவில்லை. இறைவன் அடியெடுத்துக் கொடுக்கப் பாடப் பெற்ற நூல்கள் பிற்காலத்து இல்லாமையே அவைகளைத் திருமுறைத் தொகுப்பில் சேர்க்கவில்லை என்று சிலர் கருதுகின்றனர். திருமுறையில் இடம்பெறுதற்கு இதனை மையக் கருத்தாகக் கொள்ளுதல் தவறுபல விளைக்கும். "தோடுடைய செவியன்" என்றும் "கூற்றாயினவாறு" என்றும் அடியெடுத்துக் கொடுத்ததுயார்? இனி ஐம்முகச் சிவமே அறுமுகச்சிவம் எனக் கொண்டு, முருகன் அடியெடுத்துக் கொடுக்கப் பாடிய 'திருப்புகழ்' திருமுறைகளில் சேர்க்கப்பெற்றதா? என்ற வினாக்கள் எழும். தத்துவ அமைப்பில் இப்பன்னிரண்டே போதுமானவை; பின்வரும் அருள் நூல்களெல்லாம் அவ்வவற்றின் பொருண்மை கருதி, இப்பன்னிரண்டனுள்ளேயே இணைத்துத் தொகுத்துக் கொள்ளலாம்.

பதிப்பொருள் உண்டு என நிறுவுதல்; பாசப் பொருள் உண்டு என நிறுவுதல்; பசுப்பொருள் உண்டு என நிறுவுதல்; பசுப்பொருளின் இயல்புகள்; பாசப் பொருள்களின் இயல்புகள்; பதிப் பொருளின் இயல்புகள்; உயிரின் சிறப்பியல்பு; குருவந்து உணர்த்துதல்; உயிருக்குத் தெளிவுறுத்துதல்; உயிர்த் தூய்மை; சிவப்பேறு; அணைந்தோர்தன்மை ஆகிய தலைப்புக்களில் நிறுத்தி, அனைத்து அருளாளர்களின் அருளிப்பாடுகளையும் இணைத்து உணர்ந்து கொள்ளுதல் பொருந்துவதே.

## பெரியரும் சிறியரும்

திருவள்ளுவப் பெருந்தகை 'நீத்தார் பெருமை' என்ற தலைப்பில் பெரியர், சிறியர் என்ற இருபாலாருக்கும் உரிய விளக்கங்களைத்தந்து நிறுவுகிறார்.

"செயற்கரிய செய்வார் பெரியர் சிறியர்
செயற்கரிய செய்கலா தார்"

என்பது நீத்தார் பெருமையில் வரும் 6ஆம் திருக்குறள். பெரியர், சிறியர் என்ற இருபாற் பிரிவுகளுக்கும் அடிப்படைக்குணம் பெருமையும் சிறுமையும் எனக்கொண்டால், அவ்விரு குணங்களையும் அவைகளை உடையவர்தம் செயல்களையும் திருக்குறள் 98 ஆம் அதிகாரமாகிய "பெருமை" என்பதனுள் குறிப்பிட்டு விளக்குகிருர்.

பணிதலும், பெருமிதம் இன்மையும், பிறர் குற்றம் மறைத்தலும் பெருமையின் பண்புகள். தன்னையே வியந்து பேசுதலும், பெருமிதத்தின் உருவாகவே சொல்லுதலும், பிறரைக் குற்றப்படுத்தியே கூறுதலும் சிறுமையின் பண்புகள். ஆயினும் 'பெருமை' என்னும் அதிகாரத்திலேயே பெருமைக்கு மட்டுமே உரிய சிறப்பு இயல்பாக ஒன்றைக் குறித்துவிடுகிருர். அது ஆற்றின் அருமை உடைய செயலை ஆற்றுபவரே பெருமையுடையவர் என்பது. இவ்வடிப்படையில் சிறுமைக்கு உரிய செயல் என்ன? இவ்வினவுக்குப் 'பெருமை' என்ற அதிகாரத்தில் விடை கூறவில்லை. ஆயினும் 'நீத்தார் பெருமை' என்ற அதிகாரத்தில் இதே கருத்தைச் "செயற்கரிய செய்வார் பெரியர்" என்று தொகுத்துக் கூறிவிட்டார். ஆயினும் சிறியர் யார்? என்ற வினவுக்கு விடையினையும் அளிக்கிருர். செய்வதற்கு அருமையுடைய காரியங்களைச் செய்யாதவர் சிறியர் என்பது அக்குறள் கூறும் விளக்கம்.

சுருங்கக்கூறின், இது கூறியது கூறல். செய்தற்கு அரிய காரியங்களைச் செய்பவரே பெரியவர்கள் என்னில் செய்யாதவர்கள் சிறியர் என்பது எடுத்துச் சொல்ல வேண்டாமலேயே வெளிப்பட்டுவிட்ட ஒன்று. இனி, செய்வோரைவிடுத்து, செயலைச் சிந்தித்தால், செய்தற்கு அரிய செயல்கள் என்ற ஒரு பிரிவை உடன்பட்டால், அவையொழிந்த எல்லாமே ஒரே பிரிவில் அடங்கும் எனக்கொள்ள முடியாது. செய்தற்கு அரிய செயல்கள் ஒருவகை எனில் செய்தற்கு ஒத்த செயல்கள் என்ற ஒரு பிரிவும், செய்தற்கு எளிய செயல்கள் என்ற இன்னொரு பிரிவும் உளவாகவே செய்யும். இவ்விருவகைச் செயல்களையும் செய்தவர்கள் பெரியர் அல்லர் என்று கூறினும் 'சிறியர் என்ற சொல்லாற் சுட்டப் பெறுதற்கு உரியராகார். ஏனெனில், அறநூல்களில் சிறுமை, சிறியர் என்ற சொற்கள் குற்றவுணர்வுடனேயே இணைத்துக் கூறப் பெறுகின்றன.

## செயற்கருஞ்செயல்

இனி, செய்தற்கரிய செயலாகத் திருவள்ளுவராலேயே ஏதும் சொல்லப் பெறுகின்றதா? என ஆராய்ந்தால்,

"அரியவற்றுள் எல்லாம்" அரிதே பெரியோரைப்
பேணித் தமராக் கொளல்"

என்ற திருக்குறள் மூலம் பெரியவர்களைத் துணையாகக் கொள்ளுவதே அரிய செயல் எனத் தெரியவருகிறது. 'பெரியவர்' என்பதற்கு என்ன

விளக்கம் என்னில் "உற்றநோய் நீக்கி, உறுஅமை முற்காக்கும் பெற்றியார்" என்பது வள்ளுவர் தரும் விளக்கம். தவம் என்பதற்கும் சற்றேறக்குறைய இதே விளக்கந்தான் கிடைக்கிறது. இனி, பெருமையும் சிறுமையும் அமைய, நீத்தார்பெருமைக் குறளுக்கு ஏற்ப ஒரு விளக்கம் காணுதல் இன்றியமையாதது.

இச்சையின் வண்ணம் நடப்பது மிருகம். அறிவின் வண்ணம் நடப்பது மக்கள்தன்மை. அறிவின் வழிப்படி நடந்து, அடைய வேண்டிய இச்சைகளை அறிவினால் ஆராய்ந்து பார்த்து, ஒழுங்கு செய்து, அறிவு தந்த நெறிப்படிச் செல்லும் ஒருவன் சாதாரண மனிதன் ஆகலாம், அறிவு இருந்தும் ஆசையினை வரைமுறைப் படுத்த இயலாமல், அறிவைப் புறக்கணித்து, ஆசையின் வழியிலேயே தன்னுடைய செயல்களை அமைத்துத் கொள்வானேயானால் அவன் சிறியனாகிறான். ஏனெனில் அவன் மிருகமாகிறான். செய்தற்கு எளிய காரியங்களையும் செய்ய மாட்டாதவனாக அவன் அமைந்தமையால் அவனைச் சிறியன் என்று கொள்ளலாம். இனி, செய்தற்கு உரிய காரியங்களைச் செய்தவன் ஒருவன் உண்டு. அவன் அறிவியல் வழிப்படி நடந்தவன். ஆசைக்குரியவைகளை அறிவினால் முறைப்படுத்தி அமைத்துக் கொண்டு செயலாற்றுகிறவன். இத்தகையவன் செய்தற்கு அரியவற்றைச் செய்யவும் இல்லை; செய்தற்கு எளியவற்றைச் செய்யவும் இல்லை; செய்தற்கு உரியவற்றைச் செய்தவன். இவனுக்குப் பெரியவன் என்ற பரிசும் இல்லை; சிறியவன் என்ற குற்றமும் இல்லை. இனி, செய்தற்கு அரிய செய்தவன் யார்? அறிவின் அடிப்படையில் செய்ய வேண்டிய கடமை மனிதனுக்கு இருப்பதால் அறிவை முழுமையாக ஆய்ந்து, அறிவை வன்மைப் படுத்தி, அறிவை மேன்மேல் உயர்த்திச் சென்று, பேரறிவினன் வாலறிவினன் என்ற ஒருவனோடு—தன்னை இணைத்துக் கொண்டுவிட்டவன் எவனோ, அவனே மனிதனில் முழுமை பெற்றவனாக ஆகும் நிலையை அடைந்தவனாவான். அறிவைக் கீழ்நிலைப்படுத்தும் ஆற்றலுடையை குற்றங்கள் ஐந்து. அத்தகைய ஐந்து குற்றங்களையும் உயர்ந்த அறிவினால் நீக்கிக்கொண்டவன். சிறிதே சோர்வு பெற்றாலும் அக்குற்றங்கள் தன்னை மீண்டும் அடிமைப்படுத்தாதவகையில் தன்னை அறிவினால் உயர்த்தி 'வரன்' என்ற—மேலானவன் என்ற நிலையை அடைந்தான். இத்தகைய நிலையை அவன் அடைந்தபோது அவனிடம் இதுவரை இருந்த குற்றங்கள் இல்லை; இனியும் அத்தகைய குற்றங்கள் வந்து தன்னைத் தாக்காதவாறு காப்பாற்றிக்கொள்ளும் ஆற்றலுடையவனாகவும் அமைந்து விடுகிறான். இத்தகைய நிலையில் உயர்ந்தவனுங்கூட, தன்னைத்தான் காப்பாற்றிக் கொள்ளும் நிலை அடைந்தவனேயன்றி, பிறரையும் நல்வழிப்படுத்தும் ஆற்றல் இல்லாத வனாகிறான்.

எனவே, அறிவால் தன்குற்றம் நீக்கி, வரக்கடவ குற்றம் வராமல் காத்து, இவ்வாறே மற்றவர்களையும் காத்து நிற்றலே செயற்கரிய செயல் எனக் கொள்ளலாம். இத்தகைய பெரிய செயலை ஒருவன் செய்யவேண்டுமானால் அவன் எத்துணையளவு முயற்சி செய்தல்

வேண்டும் என்பதை எண்ணிப் பார்த்தால் அது மிகமிக அருமையுடையது என்றே நினைக்க முடிகிறது.

இத்துணை அரிய செயலை மிக எளிமையாகச் செய்து முடித்தவர்கள் பலர் இருக்கிறார்கள். செய்தற்கு அரிய செயலைச் செய்தவர்கள் திருவள்ளுவர் கூறுகின்ற அறநியதியின் வண்ணம் பெரியவர்களே. செய்தற்கு அரிய அச்செயல்களையே அரிதின் முயன்று செய்யாமல் மிகமிக எளிமையாகச் செய்து முடிப்பார்களேயானால் அவர்கள் பெரியவர்கள் எல்லாரினும் பெரியவர்களே. அத்தகைய பெரிவர்களின் வரலாறுகளைக் கூறுவதே "பெரியபுராணம்"

"செய்தற்கரிய செயல்பலவும் செய்து சிலர்
எய்தற்கு அரியதனை எய்தினார்—ஐயோநாம்
செய்யாமை செய்து செயலறுக்க லாயிருக்கச்
செய்யாமை செய்யாத வாறு"

என்பது *திருக்களிற்றுப்படியார்* 61 ஆம் செய்யுள். செயற்கரிய செயல் பலவும் செய்து அடைதற்கரிய பரிசைப் பெற்றவர்கள் உண்டு என்ற முதற்பகுதி விளக்கமானதே. ஆனால், பிற்பகுதி கூறுவது, செய்யாமையைச் செய்து செயலறுக்க வேண்டுமே அதைச் செய்ய வில்லையே என இடித்துரைக்கிறார். இதற்கு விளக்கமாக,

"செய்யும் செயலே செயலாகச் சென்றுதமைப்
பையக் கொடுத்தல்"

என 21ம் செய்யுள் அமைகிறது. செயலைத் தேர்ந்தெடுக்க வேண்டிய அவசியம் இல்லை. தேர்ந்தெடுக்கப்பெற்ற செயலைச் செய்வதற்குரிய பயிற்சி முறையை நாட வேண்டிய அவசியமும் இல்லை. செயலைச் செய்யும்போது செய்பவன் மனநிலை எவ்வாறு அமைதல் வேண்டும்? செய்யும் செயலே செயலாகக் கொண்டு தமைப் பையக் கொடுத்தல் என்பது தம்மை முழுமையாகச் செயலில் ஈடுபடுத்தி விடவேண்டும். வேறுவகையிற் சொல்வதானால், நான் செய்கிறேன் என்ற எண்ணம் இன்றி, என்னுடைய செயல் என்ற உறவும் இன்றி, மேற்கொள்ளும் செயலிலேயே நம்மை இழந்து விடுதல். இதனை அப்பரடிகள் "பணி செய்து கிடத்தல்" என்பார் பணிக்கு அயலாக எந்த ஒன்றையும் நினையாதிருத்தல். இச்செயல் இப்போது செய்தற்குரியது என்று தோற்றிய அவ்வளவில், அச்செயலிலேயே தன்னை ஒன்றுவித்துக் கொள்வது. செய்யாமை செய்தல் என்பது நான் செய்கிறேன் என்ற ஆணவத்தோடு செய்யாமல், நம்மைச் செயலில் அழித்துக் கொண்டு செயலாற்று வதையே 'செய்யாமை செய்தல்' என்று குறிப்பிட்டார். நான் என்ற தன்முனைப்புடனும், எனது என்ற உரிமையுடனும் ஒரு செயலைச் செய்யும் போது, அவன் செயலில் தன்னை அழித்துக் கொள்ளாமல் ஆணவத்தில் தன்னை இணைத்துக் கொள்கிறான். அதனால் அவன் செய்த செயலுக்கு அவனே முதலாளியாகிறான். விளைவுகளுக்கு அவனே உரிமையுடையவனாகிறான். இவ்வாறு செய்யுங்கால் அவன் பெரியவனாக மாட்டான்; அவன் ஆணவம் பெரியதாக, அதனுள் அவன் அடங்குகிறான்.

## பெரியர் என்ற சொல்லின் தத்துவக் கருத்து

மேலே சொல்லப் பெற்ற இக்கருத்து, பெரியபுராணத்தில் உள்ள நாயன்மார்கள் எல்லாருக்கும் பொருந்துவதேயாயினும், சேக்கிழார் இதனை மிகநுட்பமாக ஓர் இடத்தில் விளக்கிக் காட்டுகிறார்.

சாக்கியநாயனுர் திருக்கோயில் உள்ளிருக்கும் சிவலிங்க மூர்த்தத்தைக் கல்லால் அடித்தார்; முத்திபெற்றார் என்பது வரலாறு.

"வார்கொண்ட வனமுலையாள் உமைபங்கன் கழலே
மறவாது கல்லெறிந்த சாக்கியர்க்கும் அடியேன்"

என்பது சுந்தரர் வாக்கு. *திருத்தொண்டத் தொகையினுள்* சாக்கியர் வரலாற்றை இவ்வாறு எடுத்து விளக்கினார். இதனை அடிப்படையாகக்கொண்டு நம்பியாண்டார் நம்பிகள், *திருத்தொண்டர் திருவந்தாதி* என்ற ஒரு நூல் செய்தார்கள். இவ்விரண்டையும் முதல் நூலும் வழிநூலுமாக அமைத்துக் கொண்டே தெய்வச் சேக்கிழார் திருத்தொண்டர் புராணம் என்னும் பெரியபுராணத்தை இயற்றியருளினார்.

தாளாளர் திருச்சங்கமங்கையில் வேளாளர் குடிப்பிறந்தும், காஞ்சி நகரம் சார்ந்து, தத்துவ ஆய்வு செய்து, சாக்கியமதத்தைச் சார்ந்தார். சாக்கியர் எனப்பெற்றார். மீண்டும் மீண்டும் செய்த தத்துவ ஆய்வின் பயனாக அவருக்குச் சிவ நன்னெறியே உயர் பொருள் என்ற முடிவுக்கு வருகிறார்.

"எந்நிலையில் நின்றாலும் எக்கோலங் கொண்டாலும்
மன்னியசீர்ச் சங்கரன் தாள் மறவாமை பொருள்"

எனநினைந்து வாழ முற்பட்டார். நாள்தோறும் சிவலிங்கம் கண்ட பின்தான் உண்ணவேண்டும் என்ற நியதியை அன்பு காரணமாக— மறவாமை காரணமாக மேற்கொண்டார். ஒருநாள் அவ்வாறே சிவலிங்கம் கண்டார். களிகொண்டார். மகிழ்வு மிக்கது. அந்நிலையில் அவர்மனத்தில் எத்தகைய ஆய்வோ, அறிவுநிலையோ தோன்றாமல், தாம் என்ன செயல் செய்கிறோம் என்பதையும் அறியாராய், பக்கத்தில் கிடந்த கல் ஒன்றினை எடுத்து எறிந்தார். அடுத்தநாள், சிவலிங்கத்தைக் கண்டு உண்ண வேண்டும் என்ற நியதிப்படி அங்கே சென்று நின்றார். நேற்றை நாள் கல்லெறிந்த செயலை நினைவு கூர்வார், பலவாறு சிந்தித்தார். முடிவு என்ன?

"எனக்கு அப்போது இது நிகழ்ந்தது அவர் அருளே"

என்ற முடிவுக்கு வந்தார். அதனையே நாளும் செய்யும் தொண்டாகக் கொண்டார். பசுபதியார் அருளே தம்மை அவ்வாறு செய்ய வைத்தது எனக் கொண்டு அனைத்தும் பசுபதியார் தம் செயலே என்று அச்செயலிலேயே தம்மை அழித்துக் கொண்டார். இவ்வகையில், கீழே கண்ட இருவகைச் செயல்களை நாம் காணலாம்.

அனைத்தும் பசுபதியார் செயலே எனத் தொடங்கி அதில் தன்னை அழித்துக் கொள்ளல்
அனைத்தும் தன்செயலே எனத்தொடங்கித் தன்னை ஆணவத்தில் அழித்துக் கொள்ளல்

மேலே குறிப்பிட்ட இருவகைச் செயல்களில் முன்னது தன்னை இறைவன் செயலில் ஒடுக்கிவிடுவது. பின்னது தன்னை ஆணவத்தின் செயலில் ஒடுக்கி விடுவது. முன்னது இறைவன் என்ற பேராற்றல் வாய்ந்த பெரும் பொருளோடு தன்னை இணைத்துக் கொண்டு விட்டதால், இழுத்துச் செல்லும் இயந்திரத்தோடு இணைக்கப் பெற்ற பெட்டியைப்போல, தொடர்ந்து ஓடுதல் என்ற ஒருவகை எளிய செயலாகவே முடிந்து விடுகிறது. பின்னது தன்னைக் கீழ்ப்படுத்தும் ஆணவத்தோடு தன்னை இணைத்துக் கொண்டு, பாறையோடு இணைந்து பாழ்ங்கிணற்றில் வீழ்ந்தாற் போல, கீழ்நோக்குவதாயிற்று.

இந்நிலையில், தம்மால் அன்பு செய்யப் பெற்ற பொருளோடு தம்மை முழுமையாக இணைத்துக் கொண்டு, தம்செயலற்று, அந்தத் 'தாம்' அற்று, அன்பு செய்யப் பெற்ற நாதன் தன் செயலே செயலாகக் கொண்டு நடக்கிறவர்களே செயற்கரிய செய்த பெரியர்; அன்பர்.

சிவனிடத்து வைத்த அன்பினால், அவனருளால் தோன்றிய செயலையே தொண்டாகக் கொண்டு வாழ்ந்த சான்றோர்களின் வாழ்வியல் வரலாறாகிய பெரியபுராணம் தில்லைக் கூத்தப் பெருமானின் குஞ்சித்த சேவடியைப் போன்ற பெருமையுடையது. "எடுக்கும் மாக்கதை" என்பது தெய்வச் சேக்கிழார் வாக்கு. ஆன்மாக்களை அழுக்கிலிருந்து எடுத்து அருளில் அழுத்துந் தன்மை வாய்ந்தது.

## பன்னிரண்டாம் நூற்பா

திருத்தொண்டர் புராணத்தில் அமையும் இம்மையக் கருத்தை அடிப்படையாகக் கொண்டு மெய்கண்டாரின் சிவஞானபோதத்துப் பன்னிரண்டாம் நூற்பா மலர்கிறது என்றுகொள்ளுதல் தெளிவுடையதாம்.

இந்நூற்பா இருவகைக் கருத்துக்களை நுதலி எழுந்ததாகக் கொள்ளப் பெறுகிறது.

1. சிவப்பேறு எனப்பெறும் பரமுத்தியை அடைந்தவர் நிகழ்வினை (பிராரப்தம்) காரணமாக இவ்வுலகில் நின்று செயற்படுங்கால், செம்மலர் நோன்தாள் சேரல் ஒட்டா அம் மலத்தை நீக்கியவர்களேயாயினும், வாசனாமலம் தாக்காமைக்காக, சிவனடியவர்களோடு இணைந்து பழக வேண்டும். சிவனடியவர்களையும் சிவலிங்கத் திருமேனியையும் சிவனெனவே கொண்டு வழிபட்டு வரவேண்டும் என்ற கருத்தை நுதலி எழுந்தது என்பது.

2. குரு, சிவலிங்கம், சங்கமம் (அடியவர்) என்ற மூவரின் வழி பாடு சிறந்த பயிற்சி முறை. குருவே சிவம் என்பது எட்டாஞ் சூத்திரத்தே வெளிப்பட்டுவிட்டமையின், சிவலிங்கத் திருமேனியை யும் சிவனடியவர்களையும் சிவமெனவே கண்டு விளங்குதல் வேண் டும் என்பது இந்நூற்பா கூறுவது எனவுங்கொள்வர். இதுவரையிலும் சிந்தனையினால் மட்டுமே மெய்ப்பொருளாய்வினைச் செய்து தெளிந் தவன், அத்தெளிவினுக்குரிய ஞானத்தால் ஆணவம் முதலிய அழுக் கைக் கழுவி, சிவனடியவர்களையும் சிவலிங்கத்தையும் சிவனே எனக் கொண்டு வழிபடுதலாகிய செயல்முறையை மேற்கொண்டு, சிவ ஞானத்தால் போதிக்கப் பெற்றபொருளைச் சாத்தியமாக்கிக் கொள்ள வேண்டும், என்பதைக் கருத்தாகக் கொள்வர்.

"செம்மலர் நோன்தாள் சேரல் ஒட்டா
அம்மலம் கழீஇ அன்பரொடு மரீஇ
மாலற நேயமும் மலிந்தவர் வேடமும்
ஆலயம் தானும் அரனெனத் தொழுமே"

என்பது சிவஞானபோதப் பன்னிரண்டாம் நூற்பா.

## *முடிப்புரை*

பன்னிரண்டாந் திருமுறையாகிய பெரியபுராணம் தெய்வச் சேக் கிழார்தம் திருவாக்காக மலர்ந்து 'பெரியர்' என்ற சொல்லுக்கு விளக்கம் தரவல்லதாய் அமைந்து, வீடும் வேண்டா விறலின் விளங்கினாராகிய பல சான்றோர்களை எடுத்து நிறுத்தியதன் மூலம், அரன்பால் மால் அற்றநேயம் மலிந்தவர்களாய் உள்ள சான்றோர் களையும், திருக்கோயில் தன்னையும் தெய்வமாகவே—அரனாகவே கொண்டு வழிபட வேண்டும் என்ற கருத்தை வெளிப்படுத்தி நின்றது.

தெய்வச் சேக்கிழார் தம் திருவாக்கினை அடிப்படையாகக் கொண்டே ஏனைத் திருமுறைகளையும் அருளாளர்களையும் அவ்வவ் விடங்களில் காணமுடிந்தது.

பன்னிரண்டாம் நூற்பாவின் மையக் கருத்தாகிய 'பெரியர்' என்பது பற்றிய ஆய்வினை அமைத்துக் காட்டி, அக்கருத்தினைத் தெள்ளத் தெளிய உணர்த்தும் பகுதியாக நின்ற சாக்கியர் வரலாற் றைத் தெய்வச் சேக்கிழார் மிகத் தெளிவாக உணர்த்தும் நுட்பமும் எடுத்துக் காட்டப் பெற்றது.

இந்நிலையில், "மாலற நேயம் மலிந்தவர் வேடமும் ஆலயந் தானும் அரனெனத் தொழுமே" என்ற நூற்பா வரிகளில் மெய்கண்டார் பெரியபுராணத்தின் அடிப்படைக் கருத்தை மிக நுட்பமாக விளக்குகின்றார். மாலற நேயம் மலிந்தவரை அரனெனத் தொழும் என்று குறிப்பிடாமல், மலிந்தவர் வேடத்தைக் கண்ட போதே, ஆராய்ச்சியின்றி வேடமும் வேடத்தைக் கொண்டவரும்

வேறுபாடில்லாதவர்களா அல்லது வேடம் பொய்யா என்ற ஆய்வு இன்றி, மெய்த்தவர் வேடமே மெய்ப் பொருள் என்ற கொள்கையை உளங்கொண்டு வேடத்திலேயே தம்மை ஒன்றுவித்துக் கொள்வதே சிறந்த வழிபாட்டுப் பயிற்சி முறை என்பதையும் விளக்கிக் காட்டினர். இதற்குப் பெரியபுராணத்தில் வரும் முத்தநாதன் நிகழ்வுக்குப் பின் அமைந்த "தத்தா நமர்" என்ற தெய்வச் சேக்கிழார் வாக்கும் பிற வரலாறுகளும் துணை நின்றன.

தெய்வச் சேக்கிழார் திருவாக்கினைக் கொண்டே ஏனைய அருளாளர்களையும் சிவஞானபோதத்தையும் சிந்திக்கத் துணை நின்ற,திருவருளை வணங்கி, தெய்வச் சேக்கிழார் மூலமாகவே அனைத்து அருளாளர்களின் திருவடிகளையும் வணங்கி நிற்கத் திருவருள்.

"வையம் நீடுக மாமழை மன்னுக
மெய் விரும்பிய அன்பர் விளங்குக
சைவ நன்னெறி தான்தழைத் தோங்குக
தெய்வ வெண்டிரு நீறு சிறக்கவே"

முற்றும்